சென்னைப் பல்கலைக் கழகத்தில் நிகழ்த்திய
கல்கி நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவு-

# வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்



குழந்தைக் கவிஞர்

அழ. வள்ளியப்பா

# வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்

935



குழந்தைக் கவிஞர்
அழ. வள்ளியப்பா

பாரி நிலையம்
184. பிராட்வே · சென்னை · 600001

A Course of Lectures
delivered on October 11,12 & 13, 1979
at the University of Madras,
under the Kalki R. KRISHNAMURTHI
Memorial Endowment
Lectureship (1978 - 79)


| | | |
|---|---|---|
| *Title* | : | Valarnthuvarum Kuzhanthai Ilakkiyam (Development of Children's Literature in Tamil) |
| *Author* | : | AL. Valliappa |
| *Language* | : | Tamil |
| *Edition* | : | January 1981 |
| *Price* | : | Rs. 7 |
| *Publisher* | : | Kulandai Puthaka Nilayam Madras - 17. |
| *Sole Distributor* | : | Paari Nilayam, Madras - 1. |
| *Printer* | : | Jeevan Press, Madras - 5. |

சென்னைப் பல்கலைக் கழகத்தில்
1979, அக்டோபர் 11,12, 13 தேதிகளில்
நிகழ்த்திய
**கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி**
நினைவு அறக்கட்டளைச்
சொற்பொழிவுகள்

# காணிக்கை

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவராயிருந்து பெரும் சிறப் பெய்தியவர்,

தமிழ் மொழி இனிமை மிக்கது என்பதைத் தமது பேச்சிலும் எழுத்திலும் எடுத்துக் காட்டி இலக்கிய இன்பம் ஊட்டியவர்,

குழந்தை இலக்கியப் பணியில் தொடர்ந்து ஈடுபட 1954 முதல் இறுதி நாள் வரை எனக்கு ஊக்கமளித்தவர்

சொல்லின் செல்வர்
டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளையவர்களுக்கு-

பத்ம பூஷண், செந்தமிழ்ச் செல்வர்

**ம. ப. பெரியசாமித்தூரன்** அவர்களின்

# அணிந்துரை

கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள்தாம் முதன் முதலில் குழந்தைப் பாடல்கள் இயற்றி, அவற்றை நூல் வடிவாகக் கொண்டுவந்தவர். 'குள்ளக் குள்ளனைக் குண்டு வயிறனை' என்பது போன்ற நாடோடிப் பாடல்கள் பழங்காலத்திலிருந்தே பாடப்பட்டு வந்த போதிலும், நூல் வடிவாகக் கொண்டுவந்தவர் கவிமணி அவர்களே ஆவார்கள். பிறகு 'பாரதியார் 'ஓடி விளையாடு பாப்பா' என்ற ஓர் அற்புதமான பாடலை இயற்றினர். அது, தம் குழந்தை சகுந்தலாவுக்காகப் பாடப்பெற்று 'ஞான பாநு'வில் வெளிவந்தது.

யோகி சுத்தானந்த பாரதி, பாரதிதாசன் போன்றவர்கள் பல குழந்தைப் பாடல்கள் இயற்றியிருக்கிறார்கள். இவர்களெல்லாம் பெரியவர்களுக்கு எழுதுவதையே முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்தார்கள். இடையிடையே ஒருசில குழந்தைப் பாடல்களையும் இயற்றி நமக்கு அளித்துள்ளார்கள். ஆனால், குழந்தைக்கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்களோ, முழுக்க முழுக்கக் குழந்தைகளுக்காகவே பாடல்களும், சிறுகதைகளும், ஒருசில நீண்ட கதைகளும் எழுதுவதையே நோக்கமாகக் கொண்டவர். குழந்தைகளுக்கென்றே தம் வாழ்நாளை அர்ப்பணித்துக்கொண்டவர். இத்தகைய சிறப்பான செயலை நாம் வேறெங்கும் கண்டதில்லை. அதனாலேயே, 'குழந்தைக் கவிஞர்' என்று அன்போடு அழைக்கும் தகுதியும், பெருமையும் பெற்றிருக்கிறார்.

குழந்தைக்கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்கள் வேருெரு தனிச் சிறப்பான பணியையும் செய்திருக்கிருர். அதாவது, குழந்தைகளுக்கு எழுதுவோர் பலரையும் ஒன்றுதிரட்டி, குழந்தை எழுத்தாளர் சங்கத்தைத் தொடங்கியிருப்பதோடு, அதை நீண்ட காலமாகத் திறம்பட நடத்தியும் வருவது அவருடைய தனிச்சிறப்பாகும். இடையிடையே சில ஆண்டுகள் குழந்தை எழுத்தாளர் சங்கத் தலைமைப் பதவியை விட்டுத் தாமாகவே விலகியிருந்தாலும், தொடர்ந்து தலைமைப் பதவி வகிக்க அவரே தகுதியானவர் என்று நிரூபித்திருக்கிருர். தலைமைப் பதவியிலிருந்து நீங்கியிருந்த போதிலும் குழந்தைகளுக்கான இலக்கியப் பணியிலிருந்து அவர் ஒரு பொழுதும் நீங்கியதே இல்லை. குழந்தை எழுத்தாளர்களுக்கு ஊக்கம் கொடுக்கும் வகையில் திரு. ஏவி. மெய்யப்பச் செட்டியார் அவர்களை அணுகி, ஏவி. எம். அறக்கட்டளையின் சார்பில் தங்கப் பதக்கமும், வெள்ளிப் பதக்கமும், ஆண்டுதோறும் தகுந்த குழந்தை இலக்கியப் படைப்புக்களுக்கு வழங்குவதற்கு ஏற்பாடு செய்துள்ளார்.

ஆகவே, குழந்தைகள் ஆண்டிலே, பேராசிரியர் கல்கி அவர்களின் நினைவாக நடத்தப்பட்ட சென்னைப் பல்கலைக் கழகச் சொற்பொழி வுக்கு, குழந்தைக்கவிஞர் திரு. அழ. வள்ளியப்பா அவர்களைத் தேர்ந் தெடுத்தது, மிகமிகப் பொருத்தமேயாகும். இவருடைய மூன்று நாள் சொற்பொழிவுகளைக் கேட்டிருந்தவர்கள், குழந்தை எழுத் தாளர்களைப் பற்றியெல்லாம் இவர் எவ்வாறு புள்ளி விவரங்களைக் கொண்டு சுவையாகச் சொற்பொழிவாற்றினுர் என்பதை அறிவார்கள். அச்சொற்பொழிவுகளை மீண்டும் செப்பனிட்டு, இந் நூல்வடிவத்தில் தந்திருப்பதைக் குழந்தை எழுத்தாளர்கள் மிகவும் போற்றி வரவேற்பார்கள் என்பதில் ஐயமில்லை. இந்நூலிலிருந்து திரு. அழ. வள்ளியப்பா அவர்கள், குழந்தைகளுக்கான இலக்கிய நற்பணியில் எவ்வாறு ஊறித் திளைத்திருக்கிருர் என்றும் அறியலாம். குழந்தைப் பத்திரிகைகள் எப்பொழுது தொடங்கப்பெற்றன. குழந்தைகளுக்கான இந்த முயற்சிகளெல்லாம் எவ்வாறு நடை பெற்றன என்ற புள்ளி விவரங்களைப் பார்த்தாலே பெரும் வியப் பிற்கு ஆளாகாமல் இருக்க மாட்டார்கள்.

மேலும், குழந்தைப் பாடல்கள் என்ற பகுதியிலே திருவாளர்கள் கா. நமசிவாய முதலியார், மயிலை சிவமுத்து, ர. அய்யாசாமி, தே. ப. பெருமாள், நாக. முத்தையா, தமிழ் ஒளி, அ. கி. பரந்தாமனுர், நாரா. நாச்சியப்பன், பூவண்ணன், தம்பி சீனிவாசன், லெமன், தணிகை உலகநாதன், புத்தனேரி ரா. சுப்பிரமணியன், திருச்சி பாரதன், பெ. நா. அப்புஸ்வாமி, ம. ப. பெரியசாமித் தூரன் போன்ற கவிஞர்களின் படைப்பென்ன, சிறப்பென்ன என்று

ஒரு திறனாய்வு செய்வதற்கு இவரை விட்டால் வேறு ஒரு தகுதியான எழுத்தாளர் கிடைப்பதே அரிது. என்று நினைக்கும்படியாக அப் பகுதியை உருவாக்கியிருக்கிறார்.

,அறம்செய விரும்பு' போன்ற ஔவையார் இயற்றிய 'ஆத்திசூடி', 'கொன்றை வேந்தன்' போன்ற நூல்கள் எவ்வாறு குழந்தை இலக்கியம் ஆகா என்று துணிச்சலோடு கூறியவர் நம் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா தான். நானும் இக்கருத்தை முற்றிலும் ஆமோதிக்கிறேன். சிறுசிறு அழகிய சொற்களைக் கொண்டு உயர்ந்த நீதிகளைப் புகட்டுவதில் தனிச்சிறப்பு உடையவை என்றாலும், அவை குழந்தைப் பாடல்கள் ஆக மாட்டா என்பதை நானும் வலியுறுத்திச் சொல்லுகின்றேன்.

இந்த வேளையில், எங்கள் பகுதியில் பல ஆண்டுகளுக்கு முன்பு நடந்த ஒரு சுவையான நிகழ்ச்சி நினைவுக்கு வருகின்றது.

மாலையிலே ஒரு குழந்தை, கன்னமெல்லாம் வீங்க அழுது கொண்டு வருகிறது. "ஏன் அழுகிறாய்?" என்று கண்ணீரைத் துடைத்துக்கொண்டே பரிவுடன் கேட்கிறாள் தாயார். "உபாத்தி யாயர் கோபம் கொண்டு என்னை அடித்துவிட்டார்" என்ற பதில் தேம்பிக்கொண்டே வருகிறது. "எதற்காகக் கோபம் கொண்டார்?" என்று தாயுள்ளம் கனிந்து கேட்கிறது. "ஆறுவது சினம் என்ற பாடலுக்குப் பொருள் சரியாகச் சொல்லவில்லை. அதனாலே கோபம் கொண்டார்" என்று மீண்டும் தேம்புகிறது குழந்தை. "இதற் காகவா கோபித்துக்கொண்டார்!" என்று தாயார் கேட்கும் வேளையிலே கணவர் அலுவலகத்திலிருந்து திரும்பிவிட்டார்.

"நீ கொடுக்கிற செல்லம்தான் குழந்தை இப்படிப் படிக்காமல் கெட்டுப்போகிறது" என்று மனைவியைக் கோபித்துக்கொள்கிறார். இப்படியாக மனைவிக்கும் கணவருக்கும் சண்டை மூளுகிறது.

ஆகவே, 'ஆறுவது சினம்' என்ற மிக உயர்ந்த நீதிக்கு உபாத்தி யாயரும் பொருள் அறிந்துகொள்ளவில்லை; தாயும், தந்தையும் அறிந்துகொள்ளவில்லை! குழந்தை எவ்வாறு தெரிந்துகொள்ளுமோ, கடவுளுக்குத்தான் வெளிச்சம்! 'ஆறுவது சினம்' என்பது மிக உயர்ந்த நீதி. அதை எய்துவது மிகக் கடினமானது. அதன் பொருளை உணர்ந்து வாழ்க்கையில் கடைப்பிடித்தால் அதுவே இன்ப வீடாகும். இந்த நீதி எவ்வளவுதான் உயர்ந்ததென்றாலும் குழந்தை எவ்வாறு புரிந்துகொள்ளுமோ, அறியேன்.

குழந்தைப் பாடல்கள் என்ற பகுதிபற்றி, குழந்தைக்கவிஞர் இந்த நூலில் அதிகக் கவனம் செலுத்தியிருப்பதை நான் கண்டு பாராட்டுகிறேன்.

இவ்வாறே குழந்தைகளுக்கான சிறுகதைகள், நாவல்கள், நாடகங்கள், வாழ்க்கை வரலாறு, அறிவியல் போன்றவற்றை இந் நூலில் திறனாய்வு செய்து மிகமிகச் சிறப்பாகவும், வரவேற்கத்தக்க ஆழ்ந்த கருத்துக்களோடும் சொல்லியிருப்பது மிகவும் பாராட்டத் தக்கதாகும். விரிவஞ்சி இம்முன்னுரையில் அவற்றைக் குறிக்காது விடுக்கிறேன். குழந்தை இலக்கியத்தில் தனி அக்கறை கொண்டவர் களும், பொதுவாக வாசகர்களும் படித்து இன்புறுவார்களாக! குழந்தைக்கவிஞர் இவ்வாறான இலக்கியங்களை மேலும் மேலும் படைத்துப் பல்லாண்டு' ஆரோக்கியமாக வாழ இறைவனை வேண்டு கிறேன்.

சுருக்கமாகச் சொன்னால், 'குழந்தை இலக்கியம்தானே' என்று அலட்சியமாக நினைத்தவர்களும் அந்த இலக்கியத்திற்குத் தனி மதிப்புத் தரக் காரணமாயிருந்தவர் நம் குழந்தைக்கவிஞர் திரு. அழ. வள்ளியப்பா அவர்களே. ஏடு தூக்கும் சிறுவரே நாடு காக்கும் பொறுப்புடையவர் என்ற உணர்ச்சியைத் தந்த குழந்தைக் கவிஞர் வாழ்க!

குழந்தை எழுத்தாளர்களும், பொதுவாகக் குழந்தைகளை நன்கு வளர்க்க வேண்டும் என்று ஆசைப்படுபவர்களும் அவசியமாகப் படிக்க வேண்டிய நூல் இது என்று கூறினால் அது மிகையாகாது.

குழந்தைகளுக்காகப் பாடல்களும், சிறுகதைகளும் அவ்வப்போது எழுதுகின்றவன் என்ற முறையில், "வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்" என்ற இந்தச் சிறப்பான நூலுக்கு முன்னுரை வழங்கு வதில் நானும் பெருமைப்படுகிறேன். இந்த அரிய வாய்ப்பைத் தந்த திரு. அழ. வள்ளியப்பா அவர்களுக்கு என் நன்றி உரித்தாகுக.

ம. ப. பெரியசாமித் தூரன்
*16—11—80*

*41*, இரண்டாது மெயின்ரோடு
கஸ்தூரிபா நகர், சென்னை-*20*

# முன்னுரை

முப்பது ஆண்டுகளுக்கு முன்பு—அதாவது 1950-ஆம் ஆண்டில் சென்னை நகரில், ஓர் உயர்நிலைப் பள்ளியில், குழந்தை எழுத்தாளர் சங்கம் ஒரு குழந்தைப் புத்தகக் காட்சியை நடத்தியது. தமிழ் நாட்டில் முதல் முதலாக நடந்த குழந்தைப் புத்தகக் காட்சி அதுதான்!

அப்பள்ளியிலிருந்த ஆறு அறைகள் நிறையக் குழந்தைப் புத்த கங்கள் காட்சியாக வைக்கப்பெற்றிருந்தன. ஆயினும், அவை யாவுமே தமிழ்ப் புத்தகங்கள் அல்ல. தமிழிலே வெளிவந்திருந்த குழந்தைப் புத்தகங்களால், ஓர் அறையில் பாதியைக்கூடச் சரிவர நிரப்ப முடியவில்லை. அவ்வாறு பாதி அறையை நிரப்பிய புத்தகங் களிலும் பெரும்பாலானவை மிகச்சிறிய அளவில், மலிவான தாளில், படங்களே இன்றி அச்சிடப்பெற்றிருந்தன. அந்த அறையின் மறு பாதியில், குழந்தைகளுக்காக அக்காலத்தில் வெளிவந்த மாத, வார இதழ்களும், மாணவர்கள் தயாரித்த பல கையெழுத்து ஏடுகளும் இடம் பெற்றிருந்தன. மற்ற ஐந்து அறைகளிலும் இங்கிலாந்து, அமெரிக்கா ரஷ்யா, ஃபிரான்ஸ் ஜெர்மன், ஜப்பான் முதலிய வெளி நாடுகளிலிருந்து வரவழைக்கப்பெற்ற குழந்தைப் புத்தகங்கள் கண்ணை யும் கருத்தையும் கவரும் வகையில் காட்சியளித்துக்கொண்டிருந்தன.

அப்புத்தகக் காட்சியைக் காண நூற்றுக்கணக்கான குழந்தை களுடன், எழுத்தாளர்களும், ஓவியர்களும், பதிப்பாளர்களும், பள்ளி ஆசிரியர்களும், பெற்றோர்களும் வந்திருந்தனர். அவர்களில் பலர், வெளிநாட்டுப் புத்தகங்களுடன் நம் தமிழ் மொழிப் புத்தகங்களை ஒப்பிட்டுப் பார்த்து, "எந்தக் காலத்தில் இத்தகைய புத்தகங்களை

நாம் வெளியிடப்போகிறோமோ!'' என்ற ஏக்கத்தை வெளியிட்டனர். தமிழிலும் குழந்தை நூல்கள் அச்சு—அமைப்பில் சிறந்து விளங்க வேண்டும், பல துறைகளிலும் வெளிவர வேண்டும் என அவர்கள் ஆசைப்பட்டனர். அவர்களின் ஆசை படிப்படியாக நிறைவேறி வருகிறது

அப்போது பாதி அறையைக்கூட நிரப்ப முடியாமல் இருந்த குழந்தைப் புத்தகங்கள், இன்று அந்த ஆறு அறைகளையும் நிரப்பக் கூடிய அளவில் பெருகியுள்ளன. ஆம், இன்று தமிழில் 1700-க்கு மேற்பட்ட குழந்தைப் புத்தகங்கள் வெளிவந்துள்ளன! கவிதை, சிறுகதை, புதினம், நாடகம், வாழ்க்கை வரலாறு, விஞ்ஞானம் எனப் பல துறைகளிலும் வெளிவந்துள்ளன. உள்ளடக்கம், அச்சு—அமைப்பு ஆகியவற்றிலும் நல்ல முன்னேற்றம் காணப்படுகிறது.

இவ்வாறு வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம் குறித்து, சென்னைப் பல்கலைக் கழகத்தில் மூன்று நாட்கள், ஒவ்வொரு நாளும் ஒரு மணி நேரம் உரை நிகழ்த்தும் நல்வாய்ப்பு எனக்குக் கிடைத்தது.

தமிழ் இலக்கிய உலகுக்கு ஏற்றம் அளித்தவரும், எண்ணற்ற வாசகர்களை உருவாக்கி அவர்களது இதயத்தில் நீங்காமல் நிற்பவரும், எழுத்தாலும் பேச்சாலும் செயலாலும் பொதுநலத் தொண்டுகள் பல புரிந்தவருமாகிய கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் நினைவாக அமைக்கப்பெற்ற அறக்கட்டளையின் ஆதரவில், 'வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம்' என்ற தலைப்பில் உரையாற்றும் அரிய தொரு வாய்ப்பினை எனக்களித்ததற்கும், அந்த உரையை நூல் வடிவில் வெளியிட அனுமதி வழங்கியதற்கும் சென்னைப் பல்கலைக் கழகத்திற்கும், அதன் துணைவேந்தர் உயர்திரு. ஜி. தாமோதரன் அவர்களுக்கும், சொற்பொழிவு நடந்த மூன்று நாட்களும் தலைமை தாங்கிச் சிறப்பித்த சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும், தொடர்ந்து மூன்று நாட்களும் வருகை தந்து சொற்பொழிவினைக் கேட்டு எனக்கு உற்சாகமூட்டிய இலக்கிய அன்பர்களுக்கும் என் மனங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

சிறந்த பல குழந்தை நூல்களை இயற்றிக் குழந்தை இலக்கியத் திற்கு ஆக்கமளித்து வருபவரும், தலைமைப் பதிப்பாசிரியராயிருந்து குழந்தைகள் கலைக்களஞ்சியத்தைப் பலரும் பாராட்டும் வகையில் மிகச்சிறந்த முறையில் உருவாக்கியவரும், 'கல்கி' அவர்களின் நெருங்கிய நண்பருமாகிய 'பத்ம பூஷண்' விருதுபெற்ற 'செந்தமிழ்ச் செல்வர்' உயர்திரு ம. ப. பெரியசாமித்தூரன் அவர்கள், தமது

உடல் நிலையையும் பொருட்படுத்தாமல் இந்நூலுக்கு அன்புடன் அணிந்துரை வழங்கியிருக்கிறார்கள் அவர்களுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன்.

இச்சொற்பொழிவுக்கான கையெழுத்துப் படிகளை உருவாக்க எனக்குத் தேவையான நூற்றுக்கணக்கான குழந்தை நூல்களையும் இந்நூலின் இறுதியில் இடம் பெற்றுள்ள பரிசு பெற்ற குழந்தை நூல்களின் பட்டியலையும் தந்து தவினார், என் குழந்தை இலக்கிய முயற்சிகளுக்கு என்றும் துணை நிற்கும் இனிய நண்பர் திரு ரத்னம் அவர்கள். இந்நூல் நல்ல முறையில் உருவாகப் பெரிதும் உதவிய புலவர் உயர்திரு. மு. சண்முகம்பிள்ளை அவர்களுக்கும் திரு. பெ. நடராசன் அவர்களுக்கும், ஜீவன் அச்சகத்தாருக்கும் என் நன்றி உரித்தாகும்.

காரைக்குடி,
10—12—80.

அழ. வள்ளியப்பா

## உள்ளுறை

# தமிழில் குழந்தை இலக்கியம்

## வரலாறு — சுருக்கம்

திட்டங்களில் எல்லாம் பெரிய திட்டம் குழந்தைகளை நன்முறையில் உருவாக்கும் திட்டமே. இத் திட்டத்தை நிறைவேற்றும் சீரிய பணியில் குழந்தை இலக்கியத்திற்கு முக்கியமான ஒரு பங்கு உண்டு.

'ஒவ்வொரு நல்ல புத்தகத்தின் பின்னாலும் ஒரு நல்ல ஆசிரியர் மறைந்து நிற்கிறார்' என்பார்கள். வகுப்பிலே ஆசிரியர் கூறும் அறிவுரையைக்காட்டிலும், வீட்டிலே பெற்றோர் கூறும் நல்லுரையைக்காட்டிலும், இப்படி மறைந்து நின்று பேசும் ஆசிரியரின் இனிய உரையையே குழந்தைகள் விரும்பி ஏற்கின்றனர்.

பள்ளிக்கூடங்களும், பள்ளி ஆசிரியர்களும் அறிவு வளர்ச்சிக்கு அடித்தளம் அமைக்கின்றனர் என்பதை எவரும் மறுக்கமுடியாது. ஆயினும் பாடநூல்களல்லாத பொது நூல்களை எவ்வளவு தூரம் குழந்தைகள் விரும்பிப் படிக்கிறார்கள் என்பதைப் பொறுத்தே அவர்களின் எதிர்கால அறிவு வளர்ச்சியும் ஒழுக்க வளர்ச்சியும் அமைகின்றன.

சிறிய வயதில் படிக்கும் பழக்கம் உடையவர்களே, பெரியவர்களான பிறகும் தொடர்ந்து புத்தகங்களைப் படித்து வருகிறார்கள்; சிறிய வயதில் பள்ளிப்புத்தகங்களைத் தவிர, வேறு புத்தகங்களைப் படித்தே அறியாதவர்கள் பெரியவர்களானதும் புத்தகங்களைத் தொட்டுக்கூடப் பார்ப்பதில்லை. புத்தக உலகுக்கும் தங்களுக்கும் சம்பந்தமே இல்லை என்று முடிவு கட்டிவிடுகிறார்கள். இது மிகவும் வருந்தத்தக்க ஒரு நிலை. இந்த நிலை மாறவேண்டின் சிறுவருக்கேற்ற சிறந்த நூல்கள் நம் நாட்டில் நிறைய வெளிவரவேண்டும்.

பெரியவர்களுக்கான தமிழ்ப் பத்திரிகையே 1831ஆம் ஆண்டில்தான் வெளிவந்ததாகத் தெரிகிறது. பெரியவர்களுக்கான பத்திரிகையை ஆரம்பித்து ஒன்பது ஆண்டுகளில், அதாவது 1840ஆம் ஆண்டிலே குழந்தைப் பத்திரிகை ஒன்று ஆரம்பிக்கப் பெற்றது.

'பாலதீபிகை' என்பதே அதன் பெயர். நாகர்கோயிலில் இருந்த கிறிஸ்தவப் பிரசார சபையார்தாம் அதை வெளியிட்டனர். மூன்று மாதத்திற்கு ஒரு முறையாக வெளிவந்து கொண்டிருந்த அந்தப் பத்திரிகை சுமார் பன்னிரண்டு ஆண்டுகள் தொடர்ந்து நடைபெற்று வந்தது. 'பாலதீபிகை' வெளிவந்து கொண்டிருந்த போதே சிறுவருக்காக மற்றொரு பத்திரிகையும் உதயமாயிற்று.

'சிறுபிள்ளையின் நேசத்தோழன்' என்ற பெயருடன் அதைப் பாளை யங்கோட்டைக் கிறிஸ்தவ சங்கத்தார் வெளியிட்டு வந்தார்கள். பிறகு 'பாலியர்நேசன்' என்றொரு பத்திரிகை 1859-ல் வெளி வர லானது. அது நம் நாட்டிலிருந்து வெளிவரவில்லை. யாழ்ப்பாணத்தி லிருந்துதான் வெளிவந்தது. அதையும் கிறிஸ்தவர்களே நடத்தி வந் தார்கள். ஆனால், எக்காரணங்களாலோ அப்பத்திரிகைகள் நீடித்து நிற்கவில்லை.

1891-ல் மீண்டும் ஒரு புது முயற்சி நடைபெற்றது. சிறுவருக் காகத் தனிப்பத்திரிகை ஆரம்பிக்காமல், பெரியவர் பத்திரிகையிலே சிறுவர் பகுதி ஒன்றை ஆரம்பித்ததுதான் அந்தப் புது முயற்சி. 'விவேக சிந்தாமணி' என்று ஒரு பத்திரிகையை ஆரம்பித்தார் ஸி. வி. சுவாமிநாதய்யர் என்னும் பெரியார். அந்தப் பத்திரிகையில் சிறுவருக்கேற்ற குட்டிக்கதைகள் பலவற்றை வெளியிட்டு வந்தார்.

விவேக சிந்தாமணியைப் போலவே 'ஜன விநோதினி' என்ற பத்திரிகையும் அக்காலத்தில் சிறுவர் கதைகளை வெளியிட்டுவந்தது.

'ஜன விநோதினி' பத்திரிகையில் வெளிவந்த சிறுவர் கதைகளைச் சிறுசிறு புத்தகங்களாகச் சென்னைப் பள்ளிக்கூடப் புஸ்தகசங்கத்தார் வெளியிட்டு வந்தார்கள். 'ஒரு ரூபாய் சொல்லிய தன் வரலாறு,' 'சந்நியாசி கதை,' 'நியாயாதிகாரியின் கதை' இப்படிப் பல கதைப் புத்தகங்கள் வெளிவந்தன. ஒவ்வொரு புத்தகத்தின் விலையும் ஒரு தம்படி!

வெறும் கதைகளோடு அவர்கள் நிற்கவில்லை. 'நீராவியின் வல் லமையை முதலில் அறிந்த கதை,' 'மரத்தின் பழம் ஏன் கீழே விழு கிறது?' 'வரி போடுவது ஏன்?' இந்த மாதிரிப் பெயர்களில் பல பொது அறிவுப் புத்தகங்களையும் வெளியிட்டு வந்திருக்கிறார்கள். இவை மட்டுமா? ஷேக்ஸ்பியரின் ஒத்தெல்லோ, ஹாம்லெட், வெனிஸ் வர்த்தகன் முதலிய நாடகக்கதைகளை யெல்லாம் சிறுவருக்கேற்ற முறையில் அப்போதே வெளியிட்டிருக்கிறார்கள். 'தக்காணத்துப் பூர்வ கதைகள்' என்ற புத்தகம்கூட அப்போது வெளிவந்ததுதான்!

விவேக சிந்தாமணி, ஜனவிநோதினி முதலிய பத்திரிகைகளில் சிறுவர் பகுதிகளை வெளியிட்டது போலவே, 1917ஆம் ஆண்டில்

ஆரம்பமான 'தமிழர் நேசன்' பத்திரிகையிலும் பாலர் பகுதி ஆரம்ப மானது. அதன் ஆசிரியரான அ. மாதவய்யா குழந்தைகளுக்காக வாய்மொழியாக வழங்கிவந்த கதைகளையெல்லாம் தொடர்ந்து வெளியிட்டுவந்தார். அவரது முயற்சியால் 'பால விநோதக்கதைகள்' என்னும் புத்தகம் வெளிவந்தது.

1932ஆம் ஆண்டு தொடங்கப்பெற்ற 'கலைமகள்' பத்திரிகை யிலும் சிறுவர் பகுதி இடம்பெற்றது. அதைத் தொடர்ந்து 'ஆனந்த விகடன்', 'கல்கி' போன்ற பெரியவர்களுக்கான பத்திரிகைகளிலும் குழந்தைகளுக்கென ஒரு பகுதி ஒதுக்கப்பெற்றது.

இந்த நூற்றுண்டில் சிறுவர் பத்திரிகை ஆரம்பிக்கும் முயற்சியில் முதல்முதலாக ஈடுபட்டவர் காலஞ்சென்ற வரகவி அ. சுப்பிரமணிய பாரதியார்தான் என்று தெரிகிறது. அவர் 1918ஆம் ஆண்டில் ஆரம்பித்த 'பால விநோதினி' சுமார் 15 ஆண்டுகள் தொடர்ந்து நல்ல முறையிலே வெளிவந்தது. ஆயினும், இக்காலத்தைப் போல அப்போது அதிகமாக அது விளம்பரமாகவில்லை.

இந்த முயற்சிக்கு அடுத்தபடியாக 1924-ல் 'பொக்கிஷபரணி' என்ற பெயரில் சிறுவர் பத்திரிகை ஒன்று ஆரம்பமானது. கிறிஸ்தியன் லிட்டரேச்சர் சொஸைட்டியார்தான் அதை ஆரம்பித்தனர். காலம் சென்ற பி. ஆர். ராஜசூடாமணி அவர்கள் இதன் ஆசிரியராக இருந்து சிறப்பாகப் பணியாற்றி வந்தார். இப்போது இது 'வித்யாதனம்' என்ற பெயரில் பெங்களூரிலிருந்து வெளிவருகிறது.

1942ஆம் ஆண்டு திருச்சி ஜில்லாவில் உள்ள இராயவரம் என்ற ஊரில் 'பாப்பா மலர்' என்ற பெயருடன் ஒரு பத்திரிகை தோன் றியது. பின்னர், பல குழந்தைப் பத்திரிகைகள் தோன்றுவதற்கு அது வழிகாட்டியாய் அமைந்தது.

1947-க்கும் 1952-க்கும் இடையே ஏறத்தாழ 40 குழந்தைப் பத்திரிகைகள் தோன்றின. தக்க ஆதரவின்மையால், 'அம்புலிமாமா' 'வித்யாதனம்' என்ற இரு பத்திரிகைகளைத் தவிர மற்றவையெல்லாம் மறைந்துவிட்டன. இன்று குழந்தைகளுக்காக வெளிவரும் பத்திரிகை களை விரல் விட்டு எண்ணிவிடலாம்.

குழந்தைகளுக்கு எழுதவேண்டும் என்ற ஆர்வங்கொண்ட எழுத் தாளர்கள் தற்போது 300-க்கு மேல் இருக்கிறார்கள். 1972-ஆம் ஆண்டு குழந்தை எழுத்தாளர் சங்கம் வெளியிட்ட குழந்தை எழுத் தாளர் யார்-எவர்? என்ற நூலில் 370 எழுத்தாளர்களைப் பற்றிய விவரங்கள் அடங்கியுள்ளன. இவர்களில் பெண் எழுத்தாளர்கள் 15. கடந்த 30 ஆண்டுகளாகத் தொடர்ந்து எழுதி வரும் எழுத்தாளர்

களும் உண்டு. அவ்வப்போது எழுதிவரும் எழுத்தாளர்களும் உண்டு. சில ஆண்டுகளாக எதுவுமே எழுதாத எழுத்தாளர்களும் உண்டு. குழந்தைப் பத்திரிகைகள் மிக்க குறைவாக இருப்பதால், எழுதத் துடிக்கும் இவர்களில் பலருக்கு வாய்ப்புக் கிடைப்பதில்லை. நல்ல குழந்தை இலக்கியம் தோன்றுதற்கு இது பெரும் தடையாக உள்ளது. பத்திரிகைகள் பெருகினால்தான், பலரது மறைந்து கிடக்கும் திறமை வெளிப்படவும், திறமையுள்ளோரை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளவும் முடியும்.

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு குழந்தைகளுக்கான பல புத்தகங்கள் மிகச் சிறிய அளவிலே கைகளிலும் பைகளிலும் அடங்கக்கூடிய அளவில் கவர்ச்சியின்றி வெளிவந்தன. அரையணா, ஓரணா-அதிகமாகப் போனால் எட்டணா விலையில் வெற்றிலை பாக்குக் கடைகளில் விற்பனையாகி வந்த அவற்றைப் 'புத்தகங்கள்' எனக் கௌரவமாகக் கூற முடியாவிட்டாலும், அவை ஓர் உண்மையை உணர்த்தின. குழந்தைகள் தங்களுக்காகவே வெளிவந்த அப்புத்தகங்களைப் போட்டி போட்டுக்கொண்டு வாங்கிப் படித்து மகிழ்ந்தனர்.

கடந்த 25 ஆண்டுகளில், பாட நூல்களல்லாத சுமார் 1700 குழந்தை நூல்கள் வெளிவந்துள்ளன. இவற்றில் 40 சதவிகிதம் நூல்கள் படங்களுடனும் நேர்த்தியான அச்சு-அமைப்புடனும் விளங்குகின்றன.

மொத்த நூல்களில் சிறுகதை, நாவல், நாடக நூல்கள் 60 சதவிகிதமும், கவிதை நூல்கள் 10 சதவிகிதமும், அறிவியல், வாழ்க்கை வரலாறு, பொழுதுபோக்கு, விளையாட்டு நூல்கள் 30 சதவிகிதமும் இருக்கலாம்.

குழந்தைகளுக்காகக் கதை எழுதவேண்டும், கவிதை எழுதவேண்டும், அறிவியல் நூல்களை ஆக்கவேண்டும், பிறமொழிகளிலுள்ள நல்ல நூல்களை மொழிபெயர்க்கவேண்டும் என்ற ஆர்வத்துடன் பல எழுத்தாளர்கள் முன் வந்தனர். பதிப்பாளர்களும் குழந்தை நூல்களை வெளியிடுவதில் அக்கறை காட்டினர். தென்மொழிப் புத்தக டிரஸ்ட், டில்லியிலுள்ள தேசியப் புத்தக டிரஸ்ட், குழந்தைகள் புத்தக டிரஸ்ட் போன்ற நிறுவனங்களும் பிறமொழிப் புத்தகங்களுடன் தமிழ்ப் புத்தகங்களையும் வெளியிட்டு வருகின்றன. வானொலி நிலையங்களும் அண்மையில் சென்னையில் தோன்றிய தொலைக்காட்சி நிலையமும் குழந்தை இலக்கியம் வளரப் பலவழிகளிலும் உதவி வருகின்றன. இந்திய அரசும், தமிழக அரசும், குழந்தை எழுத்தாளர் சங்கமும், குழந்தைகளுக்கு எழுதுவோருக்குப் போட்டிகள் நடத்திப் பரிசுகள் வழங்கி ஊக்கமும் உற்சாகமும்

ஊட்டி வருகின்றன. இவையாவும் மேன்மேலும் குழந்தைஇலக்கியம் வளர்வதற்கான சூழ்நிலையை உருவாக்கி வருகின்றன என்பதில் ஐயமில்லை.

துவக்க காலத்தில் குழந்தைகளுக்கு எழுதுவதைச் சிலர் அலட்சிய மாகக் கருதி வந்தனர்; கேலியும் கிண்டலும்கூடச் செய்தனர். இந்த நிலை தமிழகத்தில் மட்டுமன்று; உலக முழுவதுமே துவக்க காலத்தில் இருந்து வந்திருக்கிறது. ஆனால், அந் நிலை இன்று அடியோடு மாறி விட்டது. பெரியவர்களுக்காக எழுதிப் புகழ்பெற்ற பாரதியாரும் கவிமணியும், பாரதிதாசனும், தி.ஜ.ர.வும், ராஜாஜியும் குழந்தை களுக்கு ஆர்வமோடு எழுதமுன்வந்தது, குழந்தை இலக்கியத்திற்குப் பெரிதும் ஆக்கம் தந்தது.

தமிழில் குழந்தை இலக்கியம் படைக்கும் முயற்சியில் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் போன்ற வெளிநாடுகளிலுள்ள கவிஞர்களும் எழுத்தாளர்களும் ஈடுபட்டு வந்தனர்; தொடர்ந்து ஈடுபட்டு வரு கின்றனர்.

ஈழநாட்டில் க. சோமசுந்தரப் புலவர் போன்றோர் 40 ஆண்டு களுக்கு முன்பே குழந்தைகள் விரும்பும் பல பாடல்களை இயற்றி யுள்ளனர் என்பது 1935-ஆம் ஆண்டு வெளிவந்த 'பிள்ளைப்பாட்டு' என்ற தொகுப்பு நூலிலிருந்து தெரிகிறது. கே.எஸ். அருணந்தி என்னும் கல்வித்துறை அலுவலர் பதிப்பித்த இந்நூலில் 12 கவிஞர் கள் பாடிய 74 பாடல்கள் உள்ளன.

இலங்கையிலுள்ள மட்டக்களப்பிலிருந்து 1965ஆம் ஆண்டு மற்றொரு தொகுப்பு நூல் வந்தது. திமிலை மகாலிங்கம் பதிப்பித்த 'கனியமுது' என்னும் இத்தொகுதியில் 41 கவிஞர்களின் குழந்தைப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

கவிதைத் தொகுப்பு நூல் வெளியிடும் முயற்சி தமிழகத்திலும் அவ்வப்போது நடந்துள்ளது. கவிமணி, அவரது நண்பர்களான கே.என்.சிவராஜபிள்ளை, பண்டிட் எஸ்.முத்துசுவாமி, டி.லெட்சுமண பிள்ளை ஆகிய நால்வரும் எழுதிய 15 பாடல்கள், சிறுபாமாலை என்னும் பெயரில் சிறுநூலாகத் திருவனந்தபுரத்திலிருந்து வெளிவந் திருக்கிறது. இந்நூலில் அச்சிட்ட ஆண்டு குறிப்பிடப்படவில்லை யாயினும் இது முன்குறிப்பட்ட 'பிள்ளைப் பாட்டு' நூலுக்கு முன்பு வெளிவந்தாகவே தோன்றுகிறது.

1941-ல் புதுக்கோட்டைலிருந்து ப. நீலகண்டனைப் பதிப்பாசிரி யராய்க் கொண்டு மூன்று சிறுவர் பாடல் தொகுப்பு நூல்கள் வெளி

வந்தன. இந்நூல்களைத் தற்போது எங்குமே காணமுடியவில்லை. நூல்களின் பெயர்களும் பதிப்பாசிரியருக்கே நினைவில் இல்லை!

1970ஆம் ஆண்டு பூவண்ணன் தொகுத்து, சென்னை வானொலி சிறுவர் சங்கப்பேரவை வெளியிட்ட 'முத்துக்குவியல்' நூலில் 63 கவிஞர்களின் 130 பாடல்களைக் காணலாம். சென்னை வானொலியில் குழந்தைகளுக்காக எழுதும் கவிஞர்களைப்பற்றிக் கூறி அவர்களது பாடல்களையும் தொடர்ந்து பல வாரங்கள் ஒலி பரப்பி வந்தார் பூவண்ணன். பின்னர், சிறுவர் இலக்கியச்செல்வர்கள் என்ற பெயரில் இப் பாடல்களை அவற்றை இயற்றிய கவிஞர்களின் வாழ்க்கைக் குறிப்புடன் வெளியிட்டுள்ளார்.

இதன் பிறகு 1977ஆம் ஆண்டு தமிழ் எழுத்தாளர் சங்கம் சிறுவருக்காக 60 கவிஞர்கள் இயற்றிய கதைப் பாடல்களை, 'சிறுவர் கதைப் பாடல்கள்' என்னும் நூலாக வெளியிட்டது.

புதுக்கோட்டையிலிருந்து வெளிவந்த 'பாலர்மலர்' இதழில் இடம் பெற்ற சில கதைகளைத் தொகுத்து 1946ஆம் ஆண்டு 'பாலர் கதைகள்' என்ற பெயரிலும், பிறகு 'நிமிஷக்கதைகள்' என்ற பெயரிலும் வெளியிட்டார், சிறுவருக்காகப் பல நல்ல நூல்களை வெளியிட்ட வெ. சுப. நடேசன். அதன் பிறகு சில கதைத் தொகுப்பு நூல்கள் வெளிவந்துள்ளன.

இத் தொகுப்பு நூல்கள், குழந்தை இலக்கியம் எவ்வெவ்வகையில் வளர்ச்சி பெற்று வருகின்றது என்பதைப் பல கோணங்களிலிருந்து நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

# குழந்தைப் பாடல்கள்

அருமைக் குழந்தையை அன்போடு பாலூட்டிச் சீராட்டிக் கண்ணும் கருத்துமாய் வளர்க்கிருள் தாய். குழந்தையை வளர்ப் பதில் ஒவ்வொரு கட்டத்திலும் தாய்க்குத் துணை நிற்கிறது பாட்டு.

ஆம். குழந்தையின் அழுகையை நிறுத்தி அமைதியாகத் தூங்க வைக்க வேண்டுமா ? உடனே தாலாட்டுப் பாடுகிருள். கையை ஊன்றித் தரையிலே உட்காரும் குழந்தை முன்னும் பின்னும் சாய்ந்தாட வேண்டுமா ? 'சாய்ந்தாடம்மா, சாய்ந்தாடு' என்று பாட ஆரம்பிக்கிருள். நன்கு உட்காரத் தெரிந்த குழந்தை, கை வீசிக் களிப்போடு இருக்க வேண்டுமா ? 'கை வீசம்மா, கை வீசு' என்ற பாட்டு உதவிக்கு வருகிறது. குழந்தை சாப்பிடாமல் அடம் பிடிக்கிறதா ? இதோ அதற்கும் ஒரு பாட்டு:

கொக்குக்கு ஒரு வாய், குருவிக்கு ஒரு வாய்,
காக்கைக்கு ஒரு வாய், என் கண்ணுக்கு ஒரு வாய்

என்று சொல்லிக் கொண்டே குழந்தையின் வாய்க்குள் சோற்றை அனுப்பி விடுகிருள் அன்னை.

இப்படிக் குழந்தைக்கு உணவூட்டுவதுபோல், பாட்டின் மேல் இயற்கையாக உள்ள ஆர்வத்தையும் ஊட்டி வளர்த்து வருகிருள் தாய். பிறந்தது முதல் பாட்டிலே ஊறித் திளைத்துவரும் குழந்தை, தனக்குப் பேசத் தெரிந்த பிறகு சும்மா இருக்குமா ? தனது மழலை மொழிகளால் பாடத் தொடங்கி விடுகிறது.

அப்படிப் பாடும்போதுதான் அதற்கு எவ்வளவு இன்பம்! எத்துணைக் கொண்டாட்டம்!

குழந்தைகளின் மகிழ்ச்சியைப் பரம்பரை பரம்பரையாகப் பாடல்கள் மூலம் வளர்த்து வந்திருக்கிருர்கள் நம் முன்னேர்கள். பழங்காலத்துப் பாடல் என்ருலே எளிதாகப் பொருள் விளங்காது. பண்டிதர் துணையும் பலநாள் உழைப்பும் நமக்கு வேண்டும் அதைப் புரிந்து கொள்ள. அப்படியிருந்தும், எளிய நடையில் இனிய

சந்தத்தில் பல குழந்தைப் பாடல்கள் தொன்று தொட்டு நம் நாட்டிலே வழங்கி வருவதை நாம் அறிவோம். 'நிலா நிலா ஓடிவா, நில்லாமல் ஓடி வா' என்று நிலவைப் பற்றியும் 'ஆனே ஆனே அழகர் யானே' என்று யானையைப் பற்றியும் பாடுகின்ற குழந்தை, 'காக்கா காக்கா எங்கே போனுய்? இரை தேடப் போனேன்'போன்ற வினுவிடைப் பாடல்களேயும் மிகுந்த குதூகலத்துடன் பாடுகிறது.

கண்ணுமூச்சிக்கு ஒருபாட்டு; சடுகுடுவுக்கு ஒருபாட்டு; நொண்டி ஆட்டத்திற்கு ஒரு பாட்டு எனக் குழந்தைகள் விளையாடும்போது பாடுவதற்கேற்ற பல பாடல்களும், 'எட்டு நாளேக்கு முன்னுலே செத்த பாம்பை - நான் எட்ட இருந்து அடிச்சுடுவேன் நாராயணு' போன்ற வேடிக்கைப் பாடல்களும் குழந்தைகளின் குதூகலத்தை மிகுதிப் படுத்துகின்றன.

நாடோடிப் பாடல்களில் கதைப் பாடல்களும் உண்டு. 'சுண்டெலி ராஜனுக்குக் கல்யாணமாம்,' 'கதையாம் கதையாம் காரணமாம், காரணத்திலே ஒரு தோரணமாம்' என்றெல்லாம் ஆரம்பமாகும் பாடல்களே இன்னும் சில இடங்களில் கேட்டுக் கொண்டுதானிருக்கிருேம்.

இப்படிக் குழந்தைப் பருவத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் உள்ளங்கவரும் ஒரு பெரும் சக்தியாக விளங்குகிறது பாட்டு என்பதை நாம் நன்கறிவோம். குழந்தை அடைவதோ ஓசை இன்பம். ஓசை இன்பத்திலே மனம் ஒன்றி மெய்ம் மறக்காத குழந்தையே இல்லே என்று கூறிவிடலாம்.

திரு. கி.வா. ஜகந்நாதன் கூறுகிருர்: 'குழந்தையையும் தெய்வத் தையும் வசப்படுத்தப் பெரியார்கள் கண்டுபிடித்த தந்திரங்களுள் பாட்டும் ஒன்று......மலரால் அருச்சனே செய்வதைக் காட்டிலும், பாட்டால் அருச்சனே செய்வதைக் கடவுள் விரும்புகிருராம். கடவுள் பாட்டை விரும்புவதும் விரும்பாததும் எல்லோரும் தெரிந்து கொள்ளக்கூடிய விஷயமல்ல. ஆனுல், குழந்தை பாட்டிலே லயித்துப்போவதைக் கண்கூடாகக் காணலாம்.'

இந்தப் பாடல்களெல்லாம் எத்தனேயோ நூற்ருண்டுகளாக வாய்மொழியாகவே வந்திருக்கின்றன என்பது மட்டுமே நமக்குத் தெரிகின்றது. இவற்றை யார் பாடினுர்கள், எப்போது பாடினுர்கள், அவர்கள் எங்கு பிறந்தார்கள், எங்கு வாழ்ந்தார்கள் என்பனவெல்லாம் நமக்குத் தெரியாத போனுலும், ஒன்று மட்டும் நமக்குத் தெரிகிறது. அவர்கள் வாழையடி வாழையாக வரும் குழந்தைக் குலத்திற்கு வற்ருத இன்பம் தரும் செல்வத்தைத் தேடி வைத்துச் சென்றிருக்கிருர்கள். இதில் ஐயமே இல்லே.

நாடுகளிலும் நகரங்களிலும் காடுகளிலும் கழனிகளிலும் பாடுவதற்கு ஏற்றவாறு நம் முன்னேர்கள், பெரியவர்களுக்கும் சிறுவர்களுக்கும் அளித்த நாடோடிப் பாடல்கள் என்னும் அரிய செல்வம் சிறிது சிறிதாக மறையத் தொடங்கியது. அனைத்துமே அழிந்தொழிந்து போகுமோ என்ற ஐயம் சிலருக்கு ஏற்பட்டது. அதன் விளைவாகச் சிலர் இவை போன்ற பாடல்களைத் திரட்ட முற்பட்டனர். அவற்றை வகைப்படுத்திப் புத்தகங்களாகவும் வெளியிட்டுள்ளனர். இப் புத்தகங்களிலே குழந்தைகளுக்கேற்ற பல பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

குழந்தைகளுக்கான நாடோடிப் பாடல்களில் சிலவற்றைப் படங்களுடன் வெளியிடும் முயற்சி 1939-ல் மேற்கொள்ளப்பட்டது. அன்று தமிழாசிரியர் மு. வரதராசனுயிருந்த டாக்டர் மு. வரதராசனர் தமிழில் வழங்கிவந்த பல குழந்தைப்பாடல்களுடன் தாமும் சிலபாடல்களை இயற்றி, 'குழந்தைப் பாட்டுக்கள்' என்ற பெயரில் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வாயிலாக வெளியிட்டிருக்கிறர்.

குழந்தைகளுக்காக எத்தனை எத்தனையோ நாடோடிப் பாடல்கள் தமிழ் மொழியில் வாய்மொழியாக வழங்கிவந்திருப்பினும், நூல் வடிவிலே குழந்தைப் பாடல்களைத் தந்த பெருமை ஔவையாருக்கே உரியது எனச் சிலர் கருதுகின்றனர்.

அறம் செய விரும்பு
ஆறுவது சினம்

என மிகச்சிறு குழந்தைகளுக்கும்,

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்
ஆலயம் தொழுவது சாலவும் நன்று

எனச் சற்று வளர்ந்த குழந்தைகளுக்கும் ஔவையார் அகர வரிசையில் பாடல்களை அமைத்துத் தந்துள்ளார் எனவும் அவர்கள் எடுத்துக் கூறுகின்றனர்.

குழந்தைகளை மனக்கண்முன் நிறுத்தி இப் பாடல்களை ஔவையார் பாடியிருப்பாரா என்பது ஐயத்திற்குரியது. படித்தவர் படிக்காதவர் அனைவருக்கும் பயன்படும் வகையில் பழமொழி போல் இப் பாடல்களை ஔவையார் பாடியிருக்க வேண்டும் என்றே தோன்றுகிறது.

'தமிழ் இலக்கிய வரலாறு' நூலில் டாக்டர் மு.வரதராசனர் ஔவையாரின் ஆத்திசூடியுடன் பாரதியாரின் ஆத்திசூடியையும் சேர்த்துத் தமது கருத்தைக் கூறுகிறர் :

'இவற்றில் குழந்தைகளின் அறிவுக்கு எட்டாத ஆழ்ந்த கருத்துக்கள் உள்ளன. சிறுசிறு சொற்களால், சில தொடர்களால் அமைந்தமை பற்றிச் சிறுவர்களின் இலக்கியம் என்று சொல்லிவிட முடியாது. அவற்றின் வடிவம் மட்டுமே குழந்தை இலக்கியத்திற்கு உரியது. அவற்றின் பொருள் குழந்தை மனத்துக்கு எட்டாதது.'

ஔவையாரின் மற்றொரு நூலான 'கொன்றை வேந்தன்' ஔவையாரைப் பின் பற்றி அதிவீர ராம பாண்டியன் இயற்றிய 'வெற்றி வேற்கை,' உலகநாத பண்டிதரின் 'உலக நீதி'. இவற்றில் எதையுமே சிறுவர் இலக்கியத்தில் சேர்க்க இயலாது.

கிரேக்க அறிஞரான ஈசாப் கூறிய கதைகளில் எதையுமே அவர் குழந்தைகளுக்காகக் கூறவில்லை. நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று ஆங்காங்கே அவர் மக்கள் மத்தியில் கதைகள் கூறிவந்தார். குட்டிக்குட்டிக் கதைகளாக அவை இருந்ததாலும், பெரும்பாலான கதைகளில் மிருகங்களும் பறவைகளுமே இடம் பெற்றிருந்ததாலும், சிறுவரும் அக் கதைகளைக் கேட்டு மகிழ்ந்தனர். அச் சிறுகதைகளுக்குப் புது மெருகிட்டு அவற்றை இன்று பல மொழிகளிலும் வெளியிட்டுக் குழந்தை இலக்கிய மாக்கிவிட்டனர்!

ஈசாப்பைப் போலவே மக்கள் மத்தியில் ஔவையாரும் அதிவீர ராம பாண்டியரும், உலகநாத பண்டிதரும் நீதிகளை எடுத்துக் கூறிப் பாடிய பாடல்கள் சிறுசிறு சொற்களால், சிறிய வடிவத்துடன் அமைந்ததால் பிள்ளைகள் பாடுதற்கு ஏற்றவகையாகக் கருதப்பட்டிருக்க வேண்டும்.

'ஆத்திசூடி,' 'கொன்றைவேந்தன்,' 'வெற்றி வேற்கை,' 'உலக நீதி' ஆகிய நூல்களை முற்றிலும் படித்தவர்கள் இக் கருத்தை ஏற்பார்கள் என்பது திண்ணம்.

'ஆத்திசூடியில்,

தையல் சொல் கேளேல்
மெல்லினல்லாள் தோள் சேர்
மோகத்தை முனி
மை விழியார் மனை அகல்
வீடு பெற நில்

எனவும்,

'கொன்றை வேந்தனில்'

ஒருவனைப் பற்றி ஓரகத்திரு
சந்ததிக் கழகு வந்தி செய்யாமை

பிறன் மனைபுகாமை அறம் எனத்தகும்
மை விழியார் தம் மனை அகன்று ஒழுகு

எனவும்,

‘வெற்றி வேற்கையில்,

விலைமகட்கு அழகு தன் மேனி மினுக்குதல்

எனவும்,

உலக நீதியில்,

கற்புடைய மங்கையரைக்
கருத வேண்டாம்,
வாழாமல் பெண்ணைவைத்துத்
திரிய வேண்டாம்,
மனையாளைக் குற்றம் ஒன்றும்
சொல்ல வேண்டாம்,
கொண்டை மேல் பூத்தேடி
முடிக்க வேண்டாம்

எனவும் கூறப்பட்டுள்ளன.

இவற்றிலிருந்தே இப்பாடல்கள் குழந்தைகளுக்காகவே பாடப் பெற்றவை அல்ல என்பது புலனாகும்.

இப் பாடல்களில் குழந்தைகளுக்கு ஏற்ற சில பாடல்களை எடுத்துப் பல்லாண்டுகளாகப் பள்ளிகளில் கற்பித்தும் பாட நூல் களில் சேர்த்தும் வருவதால், அநேகமாக எல்லாருமே சிலசில பாடல்களை அறிந்து கொண்டிருக்கின்றனர்.

இப் பாடல்கள் அனைத்தும் நீதிபோதனைப் பாடல்களாகவே அமைந்துள்ளன.

இவற்றில் பல, உயர்ந்த கருத்துக்களையும் சிறந்த நீதிகளையும் உள்ளடக்கியுள்ளன என்பது உண்மைதான். ஆயினும், அச் செய்யுள் களின் பொருள் இக்காலக் குழந்தைகளுக்குப் புரிவதில்லை. வடிவம் சிறிதாயிருப்பதால் எளிதில் அவற்றை மனனம் செய்துவிடுகின்றனர். வளர்ந்து பெரியவர்களானதும் அச் செய்யுள்களின் உட்பொருளை உணர்ந்து மகிழ, அவற்றின்படி நடக்க வாய்ப்பு ஏற்படலாம்.

இத்தகைய செய்யுள்கள் குழந்தைகளின் உள்ளத்தை எவ்வளவு தூரம் கவரும், குழந்தைகளுக்கு எத்தகைய மகிழ்ச்சியை அளிக்கும் என்பதுதான் கேள்வி. பொருள் புரியாதிருப்பதால் குழந்தைகளால் அவற்றை அனுபவிக்க முடிவதில்லை. எளிய நடையில் இனிய

சந்தத்தில் உள்ளத்தை நேரடியாகத் தொட்டு உணர்ச்சியைத் தூண்டும் பாடல்களே சின்னஞ்சிறுவருக்குத் தேவை என்பதை இன்றைய கல்வி நிபுணர்கள் ஒப்புக்கொண்டு அதற்கேற்றவாறு மாறுதல்கள் செய்துவருவது வரவேற்கத் தக்கது.

மகாகவி பாரதியார், கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை போன்றவர்களின் குழந்தைப் பாடல்களை ஒரு முறை பாடியதுமே, குழந்தைகள் பொருளை உணர்ந்து கொள்கின்றனர். அவற்றைப் பாடும் போது, அவர்களுக்கு உற்சாகம் பிறக்கிறது. உணர்ச்சி பொங்குகிறது. கற்பனை பெருகவும் வாய்ப்புக் கிட்டுகிறது.

தற்போது வெளிவரும் குழந்தைப் பாடல்களில் சில குழந்தைகளைப் பற்றிய பாடல்களாக இருக்கக் காண்கிறோம். குழந்தைகளுக்கான பாடல்களுக்கும் குழந்தைகளைப் பற்றிய பாடல்களுக்கும் உள்ள வேற்றுமையைச் சரிவர உணராத குறையே இது.

குழந்தை இலக்கியத்தைப் பற்றிப் பேசுகின்ற சிலர், 'தமிழில் குழந்தைப் பாடல்கள் நீண்ட நெடுங்காலமாகவே இருந்து வருகின்றன; 96 சிற்றிலக்கியங்களில் ஒன்றாகப் பிள்ளைத்தமிழை ஏற்றுக் கொண்டிருக்கிறோம்' எனக் கூறி, பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஒட்டக்கூத்தர் பாடிய, 'குலோத்துங்கன் பிள்ளைத் தமிழை'யும், குமரகுருபரரின் 'மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழை'யும் சான்று காட்டுகின்றனர்.

உள்ளங் கவர்ந்த தெய்வத்தை அல்லது உயர்வு பெற்ற அரசனை அல்லது மக்களால் மதிக்கப் பெறும் மாண்புடைய பெரியோரைப் பிள்ளையாகப் பாவித்து அப் பிள்ளையின் பல பருவங்களையும் சிறப்பித்துப் பாடுவதுதானே பிள்ளைத் தமிழ்? அது எவ்வாறு குழந்தை இலக்கியமாகும்?

இதேபோல்தான் குழந்தைகளை வருணித்துப் பாடும் பாடலும் குழந்தை இலக்கியம் ஆகாது என்பதை அறிவோம்.

படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்
உடைப்பெரும் செல்வ ராயினும் இடைப்பட
குறுகுறு நடந்து, சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்,
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம் வாழும் நாளே

எனக் குழந்தையின் செயலையும் சிறப்பையும் எடுத்துக் கூறும் பாண்டியன் அறிவுடைநம்பியின் பாடலைக் குழந்தை இலக்கியம் எனக் கொள்ள முடியுமோ?

குழந்தைகளுக்கான தாலாட்டுப் பாடல்களையும் குழந்தை இலக்கிய வகையில் சேர்க்க இயலாது.

ஆராரோ ஆராரோ ஆராரோ ஆரிரரோ
முத்தே பவழமே முக்கனியே சர்க்கரையே!
வண்ணமணித் தொட்டிலிலே, வாய்த்த செம்பொற்கட்டிலிலே
கண்ணே என் கண்மணியே, கற்பகமே நித்திரை செய்!

குழந்தையின் அழகையும் பேச்சையும் அதன் செயலையும் சிறப்பித்துத் தாய் பாடும் இத்தகைய தாலாட்டுப் பாடல்களைக் குழந்தை இலக்கியத்தில் சேர்க்க இயலாது. என்றாலும் குழந்தைக்கு இசையிலே ஓர் ஈடுபாட்டையும், மொழியிலே ஒரு பற்றையும் ஊட்டு தற்கு அடித்தளமாக அமைவது தாலாட்டுப் பாட்டுத்தான். சற்றே வளர்ந்த குழந்தைகள் தாய்மாருக்கு உதவியாகத் தம்பி தங்கைகளைத் தாலாட்டித் தூங்க வைக்க இப் பாடல்கள் பெரிதும் துணைபுரிகின்றன. இதை மனத்தில் கொண்டே சில கவிஞர்கள் தங்கள் குழந்தைப் பாடல் தொகுதியில் தாலாட்டையும் சேர்த்துள்ளனர் எனத் தெரிகிறது.

தமிழில் இது வரை 16 பக்கங்களிலிருந்து 240 பக்கங்கள் வரையுள்ள 200-க்கு மேற்பட்ட குழந்தைக் கவிதை நூல்கள் வெளிவந்துள்ளன.

கருத்துப்பாடல்கள், கற்பனைப்பாடல்கள், கீர்த்தனை போன்ற இசைப்பாடல்கள், வில்லுப்பாடல்கள், விஞ்ஞானப்பாடல்கள், வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிப்பாடல்கள், விடுகதைப்பாடல்கள், புதிர்ப்பாடல்கள், கவிதை, நாடகம் போன்ற பல வகைகளை இந்நூல்களில் காணலாம்.

இன்று குழந்தைக் கவிதை எழுதுவோர்க்கெல்லாம், முன்னோடியாகத் திகழும் இருகவிஞர்களின் படைப்புகளைக் காண்போம்.

கவிமணி

இந்த நூற்றாண்டின் துவக்க ஆண்டான 1901ஆம் ஆண்டு தமிழ்க் குழந்தைகளுக்கு அதிர்ஷ்டமான ஓர் ஆண்டாகும். அந்த ஆண்டில்தான் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் குழந்தைகளுக்கான பாடல்களைப் பாடத் தொடங்கினர். கவிமணிக்குப் பிறகே பாரதியார் குழந்தைப்பாடல்கள் எழுதத் தொடங்கினர். பாரதியாரின் மகள் சகுந்தலா பாரதி பாப்பாவாக இருந்த போது, பாரதியார் பாடியதே பாப்பா பாட்டு. சகுந்தலா பாரதி பிறந்தது 1908ஆம் ஆண்டு. அதனால், 'பாப்பாப் பாட்டு' பிறந்தது 1908ஆம்

ஆண்டுக்குப் பிறகு தான் என்பது தெளிவாகிறது. அது 1915ஆம் ஆண்டு 'ஞானபானு' என்னும் இதழில் முதல் முதலாக வெளிவந்தது. பாரதியார் குழந்தைகளுக்காகப் பாப்பாப் பாட்டும், புதிய ஆத்தி சூடியும் இயற்றினர். கவிமணியோ பேசப்பழகும் பாப்பாவிலிருந்து 15 வயதுக்குட்பட்ட சிறுவர் சிறுமியர் வரை பாடுதற்கேற்ற ஏறத் தாழ 60 பாடல்களைத் தந்துள்ளார்.

தோட்டத்தில் மேயுது வெள்ளைப்பசு—அங்கே,
துள்ளிக் குதிக்குது கன்றுக்குட்டி.

இந்தப் பாட்டைப் பாடும்போதே, குழந்தையினுடைய உள்ளம் மகிழ்ச்சியால் துள்ளுகிறது; உடலும் துள்ளுகிறது. துள்ளிக்குதித்துக் கொண்டே மழலை மொழியில் குழந்தை பாடும் இப் பாடலைக் கேட்டுச் சில சமயம், பெற்ருேரும் துள்ளிக் குதிக்கத் தொடங்கி விடுகின்றனர்!

கன்றுக்குட்டியைப் போலத் துள்ளி எழும் சந்தமும், ஒரு முறை கேட்டாலே உள்ளத்தில் பதியக்கூடிய அளவு எளிமையும், மீண்டும் மீண்டும் பாடினலும் அலுப்புத் தட்டாத இனிமையும், முந்திய வரியின் இறுதியிலே, வெள்ளைப்பசு, அடுத்த வரியின் இறுதியிலே கன்றுக்குட்டி-இப்படி மாறிமாறி வருமாறு பாடலை அமைத்துள்ள உத்தியும் குழந்தைகளின் உள்ளத்தைப் பெரிதும் கொள்ளை கொண்டு விடுகின்றன.

அம்மா என்குது வெள்ளைப்பசு — உடன்
அண்டையில் ஓடுது கன்றுக்குட்டி.

நாவால் நக்குது வெள்ளைப்பசு — பாலை
நன்ருய்க் குடிக்குது கன்றுக்குட்டி.

முத்தம் கொடுக்குது வெள்ளைப்பசு — மடி
முட்டிக்குடிக்குது கன்றுக்குட்டி.

'அன்னைசொல் அமிர்தம்' என்ருே, 'தாயிற் சிறந்தொரு கோயிலும் இல்லை,' என்ருே அறிவுரை கூறுவதைவிட இப்படி அன்னையின் அன்பைப் பசு மூலமாகப் படம் பிடித்துக் காட்டுவது என்றென்றும் நினைவிலே நீங்காமல் நிற்குமன்ருே?

*"Talk to Children to Write for Children"* என்பார்கள். குழந்தைகளுடன் பேசிப் பழகி, அவர்கள் நிலை அறிந்து, உளம் அறிந்து கவிதை பாடியவர் கவிமணி. இதுவே அவரது வெற்றிக்குக் காரணம்.

சென்னை நகரிலுள்ள பவழக்காரத் தெருவிலே ஒரு காலத்தில் பவழ வியாபாரம் நல்ல முறையில் நடந்திருக்கலாம். பவழங்கள் அங்கே குவியல் குவியலாகக் கிடந்திருக்கலாம். ஆனால் இப்போது,

பவழக்காரத் தெருவிலே
பவழம் காண வில்லையாம்.
எவர் எடுத்துச் சென்றனர்
எனக் கறிந்து சொல்வையோ?

என்று பச்சைக்கிளியைப் பார்த்துக் கேட்கிறது ஒரு குழந்தை.

'எவர் எடுத்துச் சென்றிருப்பார்? இதோ நீதான் எடுத்துச் சென்று உன் அலகிலே வைத்திருக்கிறாயே!' என்று கூறாமல் கூறிக் குற்றம் சாட்டுகிறது அக் 'குழந்தை. கிளியின் சிவந்த அலகினை நேரடியாகப் பவழத்திற்கு ஒப்பிட்டுப் பாடாமல், மறைமுகமாகப் பாடியிருப்பது உண்மையிலே மகிழ்ச்சி அளிக்கிறது.

வீட்டிலே ஒரு பசு இருக்கிறது. அது தினமும் பால் தருகிறது. அந்தப் பால் எப்படியெல்லாம் உருமாறுகின்றது, உபயோகப் படுகிறது, என்பதை எளிய பாடலில் கவிமணி எடுத்துக் கூறுகிறார்:

அம்மா பாலைக் கறந்திடுவாள்;
பாலைக் காய்ச்சி ஆறவைப்பாள்.
ஆறின பாலில் உறைவிடுவாள்;
உறைவிட்ட பால் தயிராகும்.
தயிரைக் கடைந்தால் மோராகும்;
மோரில் வெண்ணெய் படர்ந்து வரும்,
வெண்ணெயை உருக்கினால் நெய்யாகும்,
நெய்யில் அப்பம் சுட்டிடலாம்;
நீயும் நானும் தின்றிடலாம்

நெய்யில் அப்பம் சுட்டிடலாம் என்பதோடு கவிமணி நின்றுவிட வில்லை.

நெய்யில் அப்பம் சுட்டிடலாம்
நீயும் நானும் தின்றிடலாம்

எனப் பகுத்துண்ணும் பண்பினைப் பதிய வைக்கிறார், பாலர்களின் இளம் உள்ளங்களிலே.

குழந்தைகளுக்கான கதைப் பாடல்களை எழுதுவதிலும் கவிமணியே வழிகாட்டியாய்த் திகழ்கிறார். கவிமணிக்கு முன்பு வாழ்ந்த வீரமார்த்தாண்டத் தேவர் பஞ்ச தந்திரக் கதைகளைப்

பாடல்களாக இயற்றித் தந்திருக்கிறார். ஆயினும், அப் பாடல்கள் எளிய நடையில் அமையவில்லை. ஆங்கிலத்திலே சிறுவருக்கான கதைப்பாடல்கள் (STORY POEMS) பலவற்றைப் பார்த்தும் படித்தும் மகிழ்ந்த கவிமணி, நம் தமிழ்க் குழந்தைகளுக்கும் அத் தகைய பாடல்களை எழுத விரும்பினார். அதன் விளைவாக எழுதப் பெற்றவைதாம் 'அப்பம் திருடிய எலி', 'ஊகமுள்ள காகம்' 'நெற்பானையும் எலியும்', 'ஔவையும் இடைச் சிறுவனும்' ஆகிய பாடல்கள்.

கவிமணி பெரியவர்களுக்காக 'ஆசிய ஜோதி' யையும், உமர் கய்யாம் பாடல்களையும் தமிழில் தந்தது போலவே, குழந்தைகளுக் காகவும் சில ஆங்கிலப் பாடல்களைத் தமிழிலே தந்திருக்கிறார். வில்லியம் பிளேக் (WILLIAM BLAKE) பாடிய 'Tiger, Tiger, Burning Bright' என்று தொடங்கும் பாடலை அழகும் அழுத்தமும் வேகமும் விறுவிறுப்பும் குன்றாதபடி கவிமணி தமிழில் இயற்றி யிருக்கிறார்.

பெலிஷியா ஹீமன்ஸ் என்ற அம்மையார் பாடியபாடலைத் தழுவி கவிமணி 'முதல் துயரம்' என்னும் மிக உருக்கமான பாடலைப் பாடி யிருக்கிறார். மாக்டொனால்ட் இயற்றிய 'குழந்தை,' குட்ரிச் இயற்றிய 'ஆறு' போன்ற பாடல்களையும் அழகு சொட்டும் தமிழிலே கவிமணி ஆக்கித் தந்திருக்கிறார்.

கவிமணியின் மொழிபெயர்ப்புப்பாடல்களைப் படிக்கும்போதெல் லாம் அவர் பாடியுள்ள 'பசு' என்னும் பாடல்தான் நினைவுக்கு வரும்.

பச்சைப் புல்லைத் தின்று வெள்ளைப்
    பால் தர நீ என்ன
பக்குவம் செய்தாய்? அதனைப்
    பகருவையோ? பசுவே!

என்று குழந்தை வியப்போடு கேட்கிறதல்லவா? பச்சைப் புல்லைத் தின்று சுவையான வெள்ளைப் பாலைப் பசு தருவது போல, ஆங்கிலப் பாடல்களை நன்கு படித்து, ஜீரணித்து, அருமைமிக்க, அழகுமிக்க சுவைமிக்க தமிழ்ப் பாடல்களாக நமக்குத் தந்து நம்மை வியப்பிலே ஆழ்த்துகிறார் கவிமணி.

'மலரும் மாலையும்' கவிதைத் தொகுதியை 1938-ல் முதன் முதலாக வெளியிட்ட புதுமைப் பதிப்பகத்தார், அவரது குழந்தைப் பாடல்களை 1941 - ல் தனி நூலாக 'இளந்தென்றல்' என்ற பெயரில் வெளியிட்டார்கள். அதன் பிறகு, அவர் பாடிய குழந்தைப் பாடல்களும், முன்பு பாடிய குழந்தைப் பாடல்களும் சேர்ந்து 'குழந்தைச் செல்வம்' என்ற பெயரில் வெளிவந்துள்ளன. இந் நூல்,

1957ஆம் ஆண்டு தமிழகஅரசின் கல்வித்துறைப் பரிசினைப் பெற்றது. இது நம் குழந்தைச் செல்வங்களுக்கு வற்ருத செல்வமாக, வள்மிக்க செல்வமாக என்றென்றும் நின்று நிலவும் என்பதில் ஐயமில்லை.

பாரதியார்

பாப்பாப் பாட்டிலே — நெஞ்சைப்
பறிகொடுத்தேனடா!
சாப்பா டேதுக்கடா — சீனி
சர்க்கரை ஏதுக்கடா!

என்று பாரதியாரின் பாப்பாப் பாட்டைப் பல படியாகப் புகழ்ந்து பாடியுள்ளார் கவிமணி. பாரதியாரின் பாப்பாப் பாட்டை அறியாத தமிழ்க் குழந்தை தமிழ்க்குழந்தையாக இருக்க முடியாது.

ஓடி விளையாடு பாப்பா — நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா!
கூடி விளையாடு பாப்பா — ஒரு
குழந்தையை வையாதே பாப்பா!

என்று பாப்பாவைப் பார்த்துப் பாடுகிருர் பாரதியார்.

எடுத்தவுடனேயே படிப்பைப் பற்றிச் சொன்னுல், சில குழந்தைகள் விரும்பி வரவேற்பதில்லை யென்பதை நன்குணர்ந்த பாரதியார், 'ஓடி விளையாடு' என்று தொடங்கி, ஓடிவிளையாடுவதிலும் கூடிவிளையாடுவதே நல்லது; கூடிவிளையாடும்போது, மற்றக் குழந்தைகளுடன் அன்பாக, ஒற்றுமையாக, ஒரு குழந்தையைக் கூட வையாமல் விளையாடுவதுதான் நல்லது என்கிருர்; கூட்டுறவுக்கு அடித்தளம் அமைக்கிருர் இளம் வயதிலே.

சின்னஞ்சிறு குருவி போலே — நீ
திரிந்து பறந்துவா பாப்பா!

என்று பாடிய பாரதியார், கொத்தித்திரியும் கோழியையும், எத்தித் திருடும் காக்கையையும், பாலைப் பொழிந்துதரும் பசுவையும், வாலைக் குழைத்து வரும் நாயையும், வண்டி இழுக்கும் குதிரையையும், அண்டிப் பிழைக்கும் ஆட்டையும்பற்றிப் பாடி அந்த உயிர்களிடத்திலெல்லாம் தோழமை கொள்ள வேண்டுமென்கிருர்.

தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற — எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா!
அமிழ்தில் இனியதடி பாப்பா — நம்
ஆன்ருேர்கள் தேசமடி பாப்பா!

என்று பாப்பாவின் பிஞ்சு நெஞ்சிலே நாட்டுப் பற்று என்னும் நல் விதையைப் பாவுகிருர்.

கடவுளைப் பற்றியும் கல்வியைப் பற்றியும் அன்பைப் பற்றியும் ஆன்றோரைப் பற்றியும், தேசத்தைப் பற்றியும், செந்தமிழைப் பற்றியும் உயர்வான எண்ணத்தைக் குழந்தைகளின் உள்ளத்திலே பதியச் செய்கிறார் 'பாப்பாப் பாட்டு' மூலம் நம் பாரதியார்.

பெரியவர்களுக்காகப் பாரதியார் பாடிய 400-க்கு மேற்பட்ட கவிதைகளின் சாரம் அனைத்தையும் உள்ளடக்கிய ஒரு பாடலாகவே 'பாப்பாப் பாட்டு' திகழ்கிறது. சின்னஞ் சிறு வயதிலே பாப்பாப் பாட்டைப் பாடி மகிழ்ந்த பலர், பிற்காலத்தில் பாரதியாரின் பல பாடல்களை மனனம் செய்து மகிழ்ச்சியோடு பாடுவதைக் காண்கிறோம். எந்த ஒரு பாட்டையும் அவர்களால் எளிதிலே மறக்க முடியாது. ஒருவேளை அவர்கள் பாரதியாரின் பாடல்கள் அனைத்தையுமே மறக்க நேர்ந்தால்கூட பாப்பாப் பாட்டு ஒன்றை மட்டுமாவது நினைவில் வைத்துக் கொண்டால் போதும். அந்தப் பாப்பாப் பாட்டிலுள்ள 64 வரிகளில் 60 வரிகளையும் மறந்துவிட்டால்கூடப் பரவாயில்லை, கடைசி நான்கு வரிகளை ஒரு போதும் மறக்கக் கூடாது. காரணம் — அந்த நான்கு வரிகளிலேதான் மனிதராகிய நாமெல்லாம் வாழும் முறைமை கூறப்பட்டுள்ளது. ஆம்,

உயிர்களிடத்தில் அன்பு வேணும் — தெய்வம்
உண்மையென்று தானறிதல் வேணும்
வயிரமுடைய நெஞ்சு வேணும் — இது
வாழும் முறைமையடி பாப்பா!

'இது வாழும் முறைமையடி பாப்பா!' என அடிக்கோடிட்டுக் காட்டுவது போல், அழுத்தம் திருத்தமாக எடுத்துக் கூறியிருக்கிறார்.

உலகிலுள்ள எல்லா உயிர்களிடத்தும் அன்பு செலுத்தினால், போர் மூளுமா? பூசல் இருக்குமா? வெறுப்புத் தோன்றுமா? வீண் தொல்லைகள் தொடருமா?

'தெய்வம், உண்மை என்று தானறிதல் வேணும்' கடவுள் தான் உண்மை, உண்மை தான் கடவுள்/(Truth is God; God is Truth) என்ற காந்திஜியின் தத்துவத்தை எளிய நடையிலே இளம் பிள்ளைகள் உணரும்படி பாடுகிறார்.

வயிரமுடைய நெஞ்சு வேணுமாம்.

பாதகம் செய்பவரைக் கண்டால் — நீ
பயங்கொள்ள லாகாது பாப்பா!
மோதி மிதித்து விடு பாப்பா — அவர்
முகத்தில் உமிழ்ந்துவிடு பாப்பா!

'துஷ்டரைக் கண்டால் தூர விலகு' என்ற பழமொழியையும், 'கொம்புளதற்கு ஐந்து, குதிரைக்குப் பத்து முழம்' எனத் தொடங்கி, 'வம்பு செறி தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து நீங்குவதே நல்ல நெறி' என்று முடியும் பாடலையும் பல்லாண்டுகளாகத் தொடர்ந்து பாடிவரும் நம் நாட்டில், 'பாதகம் செய்பவரை மோதி மிதித்து முகத்தில் உமிழ்ந்துவிடு' எனப் பாடி வயிரமுடையநெஞ்சாக இளம் நெஞ்சங்களை மாற்ற முயலுகிறார் பாரதியார்.

பாரதியார் சொற்படி குழந்தைகள் நடக்கத் தொடங்கி விட்டால் இந்த நாட்டில், ஏன், எந்த நாட்டிலுமே பாதகம் செய்பவர் நிம்மதியாக வாழ முடியுமா ?

ஔவையாரைப் போல், பாரதியாரும் ஓர் ஆத்திசூடி பாடினார். 'புதிய ஆத்திசூடி' என அதற்குப் பெயர் சூட்டினார்.

'அச்சமில்லை, அச்சமில்லை, அச்சமென்பதில்லையே' எனப் பாடிய அவர் 'புதிய ஆத்தி சூடி'யில்,

அச்சம் தவிர்
ஆண்மை தவறேல்

என்றுதான் தொடங்குகிறார்.

உடலினை உறுதிசெய்
குன்றென நிமிர்ந்து நில்
கொடுமையை எதிர்த்து நில்
கூடித் தொழில்செய்
தெய்வம் நீ என்றுணர்
பாட்டினில் அன்பு செய்
வையத் தலைமை கொள்

எனப் பளிச்சிடும் பல அறிவுரைகளைச் சிறுவருக்குக் கூறுகிறார்.

'முரசு' எனும் பாடலை, பாரதியார் சிறுவர்களுக்காக எழுத வில்லை என்றாலும், சிறுவர் உள்ளம் கவரும், சிறுவருக்குத் தேவை யான சில வரிகளை அதிலே காண்கிறோம்.

வெள்ளை நிறத்தொரு பூனை — எங்கள்
வீட்டில் வளருது கண்டீர்!
பிள்ளைகள் பெற்றப்பூனை — அவை
பேருக்கொரு நிறமாகும்.

சாம்பல் நிறமொரு குட்டி — கருஞ்
சாந்து நிறமொரு குட்டி

பாம்பு நிறமொரு குட்டி — வெள்ளைப்
பாலின் நிறமொரு குட்டி!

எந்த நிறமிருந்தாலும் — அவை
யாவும் ஒரே தரமன்றோ?

எனக் கேட்கும் பாரதியார்,

வண்ணங்கள் வேற்றுமைப் பட்டால் — அதில்
மானுடர் வேற்றுமையில்லை.

என எடுத்துக் கூறி வேறுபாடில்லாத ஒரு சமுதாயத்தைக் காண அடி கோலுகிறார். அடிக்கடி குழந்தைகள் காணும் ஒரு பூனைக் குடும்பத்தைக் கொண்டே அரியதொரு கருத்தை அழகாக விளக்குகிறார்.

பாரதியார் குழந்தைகளுக்குப் பாடிய இரு பாடல்களிலும் குழந்தைகளை எதிரே வைத்துக் கொண்டு அறிவுரை கூறுவதுபோல் பாடியிருக்கிறார். ஆனால், கவிமணியோ பெரும்பாலும் குழந்தைகளோடு குழந்தையாக, அவர்கள் அணியிலே நின்று, அவர்களோடு ஒன்றியே பாடியுள்ளார். இந்த இருவரையும் பின்பற்றியே எளிய நடையில், இனிய முறையில் இன்று பெரும்பாலான கவிஞர்கள் குழந்தைப்பாடல்கள் இயற்றிவருகின்றனர்.

தமிழில் குழந்தைகளுக்காகப் பல துறைகளைப் பற்றியும் பாடல்கள் வெளிவந்துள்ள போதிலும், மிகச்சிறு குழந்தைகளுக்கு ஏற்ற ஓசை நயம் மிக்க பாடல்கள் Nursery Rhymes மிகக் குறைவாகவே வெளிவந்துள்ளன.

'Poetry is an art of the ear; not of the eye–in other words poetry is sound and not sight'

கவிதை என்பது செவியால் நுகரப்படும் கலை; கண்ணால் காணப்படும் கலை அன்று. வேறு சொற்களில் சொல்வதானால், அது ஒலிச் சித்திரம், காட்சிச் சித்திரம் அன்று என்கிறார் Haddow. பொதுவாகப் பெரியவர்களுக்குக் கூறப்பட்டுள்ள இவ்வுரை சின்னஞ்சிறுவருக்கு மிகவும் பொருந்தும். சிறு குழந்தைகளுக்கு ஏற்ற பாட்டு எட்டு வரி, பத்து வரிகளுக்கு மேற்படாமல் இருக்க வேண்டும். கூடுமானவரை ஒவ்வொரு வரியோடு ஒரு வாக்கியம் முடிந்துவிட வேண்டும். நாலு வரி, எட்டு வரிகளுக்கு மேல் ஒரு பாட்டு இருந்தால் மூச்சுப் பிடித்துப் பாடவும், நினைவில் வைத்துக் கொள்ளவும் குழந்தைகளால் இயலாது. பாட்டு வேடிக்கையாயிருந்தால், நன்கு சுவைத்துப் பாடுகின்றனர். தெரிந்த ஒரு பொருளைப் பற்றி எளிய சொல்லிலே இனிய சந்தத்திலே பாடினால், எளிதிலே மனத்தில் பதித்துக்கொண்டு விடுகின்றனர். முதலிலே வந்த சொற்

ஞெடர்களே மீண்டும் மீண்டும் பல்லவி போல வந்தால், அவர்களது குதூகலம் அதிகமாகிறது.

சிலர், முதல் இரண்டு வரிகளை மிக எளிதாகவும் கவர்ச்சியாகவும் எழுதி விடுகின்றனர். பிறகு, சுவை குன்றி விடுகிறது. சிலர் 30, 40 வரிகளில் பாடல்களை எழுதி, சிறு குழந்தைகளுக்கு அலுப்பை உண்டாக்கி விடுகின்றனர்.

இவ்வளவையும் கருத்தில் கொண்டு சின்னஞ்சிறு குழந்தை களுக்கு எழுத வேண்டும். இது மிகவும் கடினம். கடினமாக இருந் தாலும், இந்த வயதுக் குழந்தைகளுக்குப் பாடல் எழுதுவதன் மூலமே மிகுதியான இன்பத்தை ஒரு கவிஞனுல் பெற முடிகிறது.

மழலைப் பாடல்கள்

கவிமணியின் 'தோட்டத்தில் மேயுது வெள்ளைப்பசு' எனத் தொடங்கும் சின்னஞ்சிறுவருக் கேற்ற பாடலைப்போல் மிக எளிய இனிய பாடல்களைத் தர முயன்றவர் பலர். அத்தகையோர் சிலரது பாடல்களை இப்போது காண்போம்.

நாற்பது நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு பள்ளிச் சிறுவர்கள் உற்சாகமாகப் பாடிப்பாடி மகிழ்ந்த பாடல் ஒன்று உண்டு 'தமிழ் ஞாயிறு' எனப் போற்றப்பெறும் காவேரிப்பாக்கம் நமச்சிவாய முதலியார் ஆரம்பப் பள்ளிக் குழந்தைகளுக்கு எழுத்து வரிசையைச் சொல்லிக் கொடுக்க, ஆங்கிலத்தில் இருப்பது போல் அழகான ஒரு பாடலை இயற்றினுர்.

அ இதோ பார் அத்திப்பழம்
ஆ என்பவன் ஆசைப்பட்டான்
இ என்பவன் இதோ என்ருன்
ஈ என்பவன் ஈ என்ருன்

எனத் தொடங்கி,

ஔ என்பவன் கௌவிக் கொண்டான்

என முடியும் அப் பாடல்.

இப் பாடலை அக்காலத்துக் குழந்தைகள் ஒரு கவிதைத் தொகுப் பிலிருந்து கற்ருர்களா என்ருல், அதுதான் இல்லை. பள்ளிப் பாட நூலிலிருந்தே கற்றுக்கொண்டனர்.

இந்தப் பாடல் மட்டுமா, இதே போல் குழந்தைகள் தாமாக விரும்பிப் பாடும் பல அருமையான பாடல்களை இயற்றிப் பாட நூல் களில் முதல் முதலாகச் சேர்த்தவர் நமச்சிவாய முதலியார். 'பால பாடம், முதல் சிறுவர் சிறுமியர்க்கான பல நூல்களைக் குழந்தை களின் உளவியல் அறிந்து எழுதியவர் அவர்.

நமச்சிவாயரைப்போல் பாட நூல்களுக்காக நல்ல பல குழந்தைப் பாடல்களை எழுதி வெற்றிபெற்றவர்களில் மணி திருநாவுக்கரசு, மயிலை சிவமுத்து, பெ. நா. அப்புஸ்வாமி, மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை, டாக்டர் மா. இராசமாணிக்கனுர் போன்றவர்களைக் குறிப்பிடலாம்.

மே. வீ. வேணுகோபாலப் பிள்ளையும் அகர வரிசையில் ஒரு பாடல் பாடியுள்ளார். 'அம்மா இங்கே வா வா', எனும் அப் பாடல் மிகச் சிறு குழந்தைகளுக்கு மிகவும் பிடித்தமான பாடல்.

அம்மா, இங்கே வா வா
ஆசை முத்தம் தா தா
இலையில் சோறு போட்டு
ஈயைத் தூர ஓட்டு
உன்னைப் போன்ற நல்லார்
ஊரில் உலகில் யாவர் உள்ளார்?
என்னுல் உனக்குத் தொல்லை
ஏதும் இங்கே இல்லை
ஐயம் இன்றிச் சொல்வேன்
ஒற்றுமை என்றும் பலமாம்
ஓதும் செயலே நலமாம்
ஔவை சொன்ன மொழியாம்
அஃதே எனக்கு வழியாம்,

முதல் எட்டு வரிகளும் பெற்றவளிடத்திலே பிள்ளைக்குள்ள பாசத்தை — பற்றுதலை — பிணைப்பை அழகாக எடுத்துக்காட்டுகின்றன.

மாமி சுட்ட பிட்டு
மடியில் வாங்கிக் கட்டு
சீனி சர்க்கரை இட்டு
சிறிது நெய்யும் சொட்டு
உண்டு ஏப்பம் விட்டு
ஓடி வா நீ பட்டு

எதுகையும் மோனையும் இயற்கையாயமைந்த மயிலை சிவமுத்துவின் இப் பாடல் மாமிசுட்ட பிட்டினைவிட இனிமையாகவே இருக்கும். சுவையான ஒரு பொருளைப் பற்றி, மிகச்சுவையாக, விள்ளாமல் விரியாமல் சொற்களை முழுமையாக அமைத்துப் பாடியிருப்பதால், ஒரு முறை நாம் சொன்னதும், குழந்தைகள் இப் பாடலை அப்படியே மழலை மொழியிலே திருப்பிச் சொல்லி விடுவார்கள்.

'மாமி சுட்ட பிட்டு' என்ற பாடலைப் போலவே, இளங் குழந்தைகளுக்கான பல பாடல்களை மயிலை சிவமுத்துவின் 'முத்துப் பாடல்கள்' நூலில் காணலாம். இவர் பல ஆண்டுகளுக்கு முன்பே பாட்டும் கதையும் எழுதிப் பலருக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்தவர்.

பூனை வந்தது பூனை — இனிப்
போனது தயிர்ப் பானை.

சின்னஞ் சிறிய குட்டை — அதில்
ஊறும் தென்னை மட்டை.

எண்ணினால் நூறிருக்கும் எங்கள்
வீட்டு எலிகள் — அவை
இரவு பகல் பண்டங்களைத்
திருடுவதில் புலிகள்!

கொல்லையிலே கொய்யாப்பூ
கொண்டையிலே வையாப்பூ

இவ்வாறு இசை நயத்துடன் ஈற்றெதுகை வைத்துப் பாரதிதாசன் பாடியுள்ள பாடல்கள் குழந்தைகளைப் பெரிதும் கவர்ந்துள்ளன. கவிமணி, பாரதியார், பாரதிதாசன் ஆகிய முப்பெரும் கவிஞர்களில் சிறுவருக்காக நிறையப் பாடியவர் பாரதிதாசனே. 49 ஆண்டுகளுக்கு முன்பே, அதாவது 1930ஆம் ஆண்டில் இவர் இயற்றிய 'சிறுவர் சிறுமியர் தேசியகீதம்' என்ற நூலிலும், 'இளைஞர் இலக்கியம்' என்ற நூலிலும், 'இசையமுது' இரு தொகுதிகளிலும் இவர் சிறுவருக்காகப் பாடியுள்ள பாடல்கள் ஏறத்தாழ 150 இருக்கும்.

இயற்கை இன்பத்திலே ஊறித் திளைத்த பாரதிதாசன் தம்முடைய 'இளைஞர் இலக்கியம்' என்னும் நூலில் நிலவைப் பற்றி ஒன்பது பாடல்கள் பாடியிருக்கிறார். அவற்றில் சிறு குழந்தைகளுக்கு ஏற்ற பாடல் இதோ இருக்கிறது :

சொக்க வெள்ளித் தட்டு — மிகத்
தூய வெண்ணெய்ப் பிட்டு
தெற்கத்தியார் சுட்டு — நல்ல
தேங்காய்ப் பாலும்விட்டு,

வைக்கச் சொன்ன தோசை — அது
வயிர வட்ட மேசை
பக்க மீன்கள் பலவே — ஒரு
பட்டத்தரசு நிலவே!

சிறுவருக் கென்றே 'குருவிக்கூடு', 'செம்படவன்' என்ற கதைப் பாடல் நூல்களை இயற்றித்தந்த கவிஞர் குயிலன் 'சிட்டுக்குருவி' பற்றி மிகச் சிறுகுழந்தைகளும் பாடி மகிழும் வகையில் ஒரு பாடலை இயற்றியிருக்கிறார்.

சின்ன சின்னச் சிட்டு
சிங்காரச் சிட்டு
நெல்லைப் போலே மூக்கு
நேர்த்தியான நாக்கு
வட்டச் சின்னக் கண்கள்
பட்டுப் போலே மேனி!
சிட்டைப் போலப் பறந்து
சிறுவர் வாழ வேண்டும்
சற்றும் சோம்பல் இன்றித்
தாவித் திரியவேண்டும்.

சோம்பலின்றித் தாவித்திரியும் சிறுவனைப் போலவே, தாவித் தாவிச் செல்லும் சந்த நயம் கொண்ட எளிய பாடலாக, எளிதிலே நெஞ்சில் பதியும் பாடலாக இது அமைந்துள்ளது.

விஞ்ஞான நுட்பங்களையும் தமிழிலே விளக்கிக் கூற முடியும் எனக் கடந்த 60 ஆண்டுகளாக அயராது பணியாற்றிவரும் பெ. நா. அப்புஸ்வாமி குழந்தைகளுக்கு எழுதுவதிலும் பெரும் ஈடுபாடு கொண்டு, 'சித்திர வாசகம்' என்னும் வரிசையில் பல பாட நூல்களை எழுதினர். ஒவ்வொரு பாட நூலிலும் சில பாடல்களை எழுதிச் சேர்த்தார். அப் பாடல்களில் ஒன்று டம்மாரம்' எனும் பாடல் :

டம்மாரம் அடி டம்மாரம்
டம்டம் அடி டம்மாரம்
கோட்டை வெளியில் டம்மாரம்
கோபுர வாசலில் டம்மாரம்
குதிரை மேலே டம்மாரம்
கோயிலுக் குள்ளே டம்மாரம்
திருவி ழாவில் டம்மாரம்
தேரின் மேலே டம்மாரம்
கூத்தாடி கையில் டம்மாரம்
கொட்டுக் கொட்டும் டம்மாரம்!

குழந்தைகள் கைகள் இரண்டையும் டம்மாரம் அடிப்பது போல் மேலும் கீழுமாக அசைத்துத் தலையை ஆட்டி மிக்க மகிழ்ச்சியுடன் பாடுவதற்கு ஏற்றவகையில் ஒலிநயம் மிக இப் பாடல் அமைந் துள்ளது.

ம. ப. பெரியசாமித்தூரன் உளவியலை நன்கு பயின்றவர், அவர் ஆசிரியராகப் பணி புரிந்து கொண்டிருந்த போது, குழந்தைகளோடு நெருங்கிப் பழகி அவர்களின் இயல்புகளை நன்கறிந்தவர்.

ஐப்பசி மாதம் பெய்கின்ற அடை மழையில் நனைகிறது ஓர் ஆட்டுக்குட்டி. அதைப் பார்த்து இரக்கப்படுகிறது ஒரு குழந்தை 'வா, வீட்டுக்குள்ளே ஓடி வா' என்று அன்போடு அழைக்கிறது.

ஐப்பசி மாதம் வந்தது
அடை மழையும் பேயுது:
ஆட்டுக் குட்டீ ஆட்டுக்குட்டீ
வீட்டுக் குள்ளே ஓடிவா!
சும்மா சும்மா மழையிலே
துள்ளித் துள்ளி ஓடாதே!
அம்மா கண்டால் வைவாளே
ஆட்டுக் குட்டீ ஆட்டுக்குட்டீ!

'நான்மழையில் நனைந்தால், 'ஐயோ, காய்ச்சல் வந்து விடுமே, சளிப் பிடித்துக் கொள்ளுமே' என்று அம்மா திட்டுவாள். நீ நனைவதைப் பார்த்தாலும் அம்மா சும்மா இருப்பாளா ? உன்னையும் திட்டுவாளே, ஆகையால், வீட்டுக்குள்ளே ஓடி வா. விரைந்து ஓடி வா,' என்று வருந்தி வருந்தி அழைக்கிறது குழந்தை. ஆட்டுக் குட்டியிடம் குழந்தைக்குள்ள தோழமையை அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறது இப் பாட்டு. தூரனின் இந்தப் பாடல் எந்தக் குழந்தைக்கும் இனிக்கும் பாடலாக அமைந்துள்ளது.

தூரனைப் போலவே, குழந்தைகளுடன் நன்கு பழகி அவர்களின் சூழ்நிலை அறிந்து, மன நிலை உணர்ந்து பாடுகின்றவர் கவிஞர் தணிகை உலகநாதன். மயிலைசிவமுத்துவின் மாணவராக விளங்கும் இவர், மயிலை சிவமுத்துவைப் போலவே, மிகச்சிறிய குழந்தைகளுக்கு எழுதுவதையே பெரிதும் விரும்புவர். இவரது 'பாடும் பாப்பா' எனும் நூலிலுள்ள ஒரு பாட்டைப் பார்ப்போம்.

பூனை பூனை வந்தது பார்
பானைப் பாலைக் குடித்திடவே
மி – யா - வ் - மி யா வ் - மி - யாவென்றே
வீணை போலக் கத்துது பார்-
பானையில் பால்தான் இருந்தாலும்
பூனை குடிக்கத் தருவார் யார்?
ஐயோ பாவம் அடிக்காதே
அடித்தால் பூனை துடிக்காதா?

பூனையின் மியாவ் மியாவ் சத்தம் வீணையின் நரம்பை மீட்டியது போல் இன்பநாதமாகக் குழந்தையின் காதில் ஒலிக்கிறது !

ஆறு வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு ஏற்ற வகையில் பாட்டெழுதும் போட்டியை 1961-ஆம்ஆண்டு குமுதம் நடத்தியது. அப் போட்டியில் முதல் பரிசு பெற்றது—குருவி, குருவி—என்ற சிறு பாடல். இதை எழுதிய நாரா.நாச்சியப்பன், சிறுவருக்காக ஏழு கவிதைத் தொகுதிகளைத் தந்துள்ளார்.

குருவி குருவி பறந்துவா!
கொஞ்சிப் பேசப் பறந்துவா!
அறுகம் புல்லைத் தூக்கிவா
அழகுக் கூடு கட்டவா!

சிறுவரோடு சேர்ந்து நீ
சிரித்திருக்கப் பறந்துவா!
குருவி குருவி பறந்துவா!
குதித்துக் குதித்துப் பறந்து வா!

கொஞ்சிப் பேசவும் கூடி மகிழவும் குருவியை அழைக்கிறது, சின்னஞ் சிறு குழந்தை. குதித்துக் குதித்துக் குழந்தைகள் பாடுவதற்கேற்ற சந்த அமைப்புக் கொண்டது இப் பாடல்.

இரு தொகுதிகளாக வெளிவந்துள்ள ‘மலரும் உள்ளம்’ ஒவ்வொரு தொதியிலும் முதல் 16 பக்கங்கள் மிகச்சிறு குழந்தைகளை மனத்தில் கொண்டு பாடப் பெற்றவை.

சின்னஞ்சிறுவருக்கான பாடல்களை எழுதுவது மிகவும் கடினம் என்பதை உணர்கிறோம். சொந்தமாக எழுதுவதே கடினம் என்னும் போது, ஆங்கிலப் பாடலைத் தழுவி எழுதி, அதன் மூலம் குழந்தைகள் உள்ளத்தைக் கவர்வது அதைவிடக் கடினம்.

பெரியசாமித் தூரன் ‘Hickory, Dickory, Dock’ என்ற ஆங்கிலப் பாடலைத் தழுவி அழகியதொரு பாடலைத் தந்திருக்கிறார். நான்கு வயதுக் குழந்தை கூட விரும்பிப் பாடும் பாடலாக இது அமைந் துள்ளது.

டிக்டாக் கடிகாரம்
சின்னத் தட்டில் பணியாரம்

என மூலத்திலுள்ள ஓசைநயம் குறையாமல் மிக அழகாகப் பாடி யுள்ளார்.

‘இளையபாரதம்,’ ‘பாப்பாப் பாட்டு’ ‘தாத்தாப் பாட்டு’ எனும் நூல்களைக் குழந்தைகளுக்காக இயற்றியுள்ள ரா. பொன்ராசன்,

'Pussy cat, Pussy cat, Where have you been?'
எனத் தொடங்கும் பாடலைத் தழுவி எழுதிய 'பூனையக்கா' என்ற பாடல் 'குமுதம்' நடத்திய போட்டியில் பாராட்டுப் பரிசு பெற்றது. தமிழ்க் குழந்தைகள் விரும்பிப் பாடும் பாடலாக இது இன்று திகழ் கிறது.

பூனையக்கா பூனையக்கா
எங்கே போனீங்க?
ராணியக்கா வீடு பார்க்க
லண்டன் போனேன் நான்.

ராணியக்கா வீடுபோயி
என்ன கண்டீங்க?
கோணமூஞ்சிச் சுண்டெலியைக்
கொன்று தின்றேன் நான்.

பூனையைப் 'பூனையக்கா' என்றும், நத்தையை 'நத்தையார்' என்றும், நரியை 'நரிமாமா' என்றும் உறவு முறை கூறிக் குழந்தைகள் அழைப் பதுண்டு. அத்தகைய மனப்போக்கை நன்கறிந்து இப் பாடலில் கையாண்டுள்ளார் பொன்ராசன்.

சின்னஞ் சிறுவருக்கான மழலைப்பாடல்கள் சிலவற்றைக் கண் டோம். இனி இயற்கை, உயிரினங்கள், நாடு, கல்வி, பெரியோர், அறிவுரை, வேடிக்கை, விஞ்ஞானம் போன்றவை குறித்து நம் கவிஞர்கள் சிறுவர் சிறுமியருக்காகப் பாடிய சில பாடல்களைக் காண் போம்.

**இயற்கை**

காவேரிப்பாக்கம் நமச்சிவாயரைப் பின்பற்றிக் குழந்தைப் பாடல் எழுதியவர்களுள் குறிப்பிடத்தக்கவர் மணிமங்கலம் திருநாவுக்கரசர் ஆவார். பூவைப் பார்த்து ஒரு குழந்தை பாடுவதாக அமைந்த அவரது பாடலில், பூவின் மூலம் இப் பூவுலகைப் படைத்த ஆண்டவனின் அருஞ்செயலை வியந்து போற்றுவதைக் காணலாம்.

பூவே உன்னைப் படைத்தவர் யார்?
புதுமணம் உள்ளே நுழைத்தவர் யார்?

எனத் தொடங்கி,

உன்னைச் செய்தோன் வல்லவனே
உலகுக் கெல்லாம் நல்லவனே

என முடிக்கிறார்.

மு. வ. இயற்றிய பாடல்களில் 'என்னை வளர்த்த அன்னை' என்ற பாடலும் ஒன்று. ஆறு வயதுச் சிறுவன், தான் பிறந்த சமயம் நட்டு

வைக்கப்பெற்ற தென்னை மரம் இப்போது நன்றாக வளர்ந்து பலன் தருவதைப் பார்த்துப் பாடுகிறான்.

தென்னை மரமே கேளாய்,
தென்னை மரமே கேளாய்!
உன்னை வளர்த்தவர் அப்பா,
என்னை வளர்த்தவர் அம்மா.

உனக்கும் வயது ஆறே,
எனக்கும் வயது ஆறே;
நீ வளர்ந்த உயரம்
நான் வளரவில்லை.

நீ கொடுப்பாய் இளநீர்,
நான் கொடுப்பதென்ன?
ஆனாலும்தான் என்னை
அன்பாய் வளர்ப்பவள் அன்னை.

தான் எதுவும் தராவிட்டாலும் இன் முகம் காட்டித் தன்னை அன்புடன் வளர்க்கும் அன்னையின் சிறப்பைத் தென்னையின் சிறப்புடன் சேர்த்துப் பாடுகிறான் சிறுவன்.

சிறுவருக்காக நிறையக் கவிதை நூல்களை எழுதிய பெருமை நாக. முத்தையாவுக்கு உண்டு. ஆம், 15 சிறுவர் கவிதை நூல்களை இயற்றிக் குழந்தை இலக்கிய உலகில் நிலையான இடத்தைப் பெற்றவர் இவர். மழலை இன்பம், மழலைச் செல்வம், மழலை விருந்து என்று சின்னஞ்சிறுவருக்காகவே, மூன்று நூல்களை வெளியிட்டிருப்பவர். அவர் வான வில்லைப்பற்றிப் பாடுகிறார்:

வளைக்க முடியா வில்லிது,
வானில் தோன்றும் வில்லிது!

நிலைத்து நிற்கா வில்லிது,
நீண்ட பெரிய வில்லிது!

ஏழு வண்ண வில்லிது,
எவர்க்கும் எட்டா வில்லிது!

அம்பே இல்லா வில்லிது,
அழகு வான வில்லிது!

குழந்தைகளுடன் நெருங்கிப் பழகி அவர்களின் இயல்புகளை நன்கு அறிந்துகொள்ளும் வாய்ப்பு ஆண்களைக் காட்டிலும் பெண்களுக்கே அதிகமுண்டு. ஆயினும், தமிழில் குழந்தைகளுக்காக எழுதும் பெண் கவிஞர்களை விரல் விட்டு எண்ணிவிடலாம். அவர்

களில் மிகவும் குறிப்பிடத்தக்கவர் ராஜம் சீதாராமன், கடந்த நாற்பது ஆண்டுகளாகக் குழந்தை இலக்கியம் படைத்து வரும் பெருமையுடையவர். இயற்கையைப் பற்றிப் பாடுவதில் மிகுதியான இன்பம் காண்பவர். அதிலும், குழந்தைகள் நிலையிலிருந்து இயற்கையைப் பாடுவதில் பேரின்பம் அடைபவர்.

'மழையே மழையே வா' என்று அழைத்து ஒரு குழந்தை பாடுகிறது. தான் காகிதக் கப்பல் விடுவதற்காகவோ அல்லது பள்ளிக்குப் போய்ப் பாடம் படிக்காமல் இருப்பதற்காகவோ மழையை அழைக்கவில்லை. பூமி தழைக்க, உயிர்கள் களிக்க மழை வேண்டும் என்று பாடுகிறது.

பூஞ்செடிக்குத் தண்ணீர்வேண்டும்,
மழையே மழையே வா,
மாஞ்செடியும் வளரவேண்டும்
மழையே மழைய வா,

ஆறுகுளம் நிரம்பவேண்டும்,
அடை மழையே வா உன்
பேரைச் சொல்லிப் பொங்கல் வைப்போம்
பெரு மழையே வா.

வயலில் நெல்லும் விளையவேண்டும்,
மழையே மழையே வா,
மாடுக ளுக்குப்புல்லும்வேண்டும்
மழையே மழையே வா.

நாற்பதாண்டுகளுக்கு மேலாகச் சிறுவர் இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டு, சிறுவர்களுக்காகக் கவிதைகளை இயற்றிவரும் மற்றொரு கவிஞர் ர. அய்யாசாமி ஆவார். குழந்தை இலக்கியத்திற்கு வானொலி மூலம் அரிய பல பணி புரிந்த அவர் காற்றைப் பற்றி எழுதிய பாடல் கருத்தைக் கவரும் ஓர் இசைப்பாடல்.

எங்கிருந்து வருகிறாய் — நீ
எங்கே போகிறாய்? — காற்றே
எங்கே போகிறாய்?

பட்டுப் பூச்சி இறகை விரித்து
பறக்க வைக்கிறாய் — காற்றே
பறக்க வைக்கிறாய்.

வெட்ட வெளியில் மேகம் எங்கும்
மிதக்க வைக்கிறாய் — காற்றே
மிதகக் வைக்கிறாய்.

இனிய சந்தத்திலே, எளிய நடையில், நல்ல தமிழில், காற்றின் செயல்களை எல்லாம் கவிதையாக வடித்துத் தந்திருக்கிறார் அய்யாசாமி.

ஒரு சின்னஞ் சிறிய குடிசை. அந்தக் குடிசையில் இரவு நேரத்தில் அகல் விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருக்கிறது. அதே சமயம், காற்றும் பலமாக அடிக்கிறது. 'காற்று மாமா, என்னை இப்போது அணைத்து விடாதீர்' என்று காற்றிடம் விளக்கு வேண்டிக்கொள்கிறது.

காற்று மாமா காற்று மாமா
    கருணை செய்குவீர்!
ஏற்றிவைத்த ஜோதி என்னை
    ஏன் அணைக்கிறீர்?

குடிசையிலுள்ள ஏழைச் சிறுவன் பாடம் படிக்கிறான். யாரை நம்பிப் பாடப் படிக்கிறான்?

ஏழைச் சிறுவன் என்னை நம்பிப்
    பாடம் படிக்கிறான்
ஏழும் மூணும் பத்து என்று
    எழுதிக் கூட்டுறான்.

அதே விளக்கொளியில் அவன் அன்னை கஞ்சி காய்ச்சுகிறாள். பசியோடு படிக்கும் சிறுவன், அடிக்கடி அடுப்புப் பக்கம் திரும்பிப் பார்க்கிறான். கஞ்சி தயாரானதும் குடிக்கப் போகிறார்கள். இருளிலா கஞ்சி குடிப்பது?

காச்சும் கஞ்சி குடிக்க வெளிச்சம்
    காட்டவேண்டாமா?
ஆச்சு, இதோ ஆச்சு என்னை
    அணைத்து விடாதே.

'கொஞ்சம் பொறு, கொஞ்சம் பொறு' என்று ஏழைக்கு இரங்கிக் காற்றின் கருணையை வேண்டுகிறது அகல் விளக்கு. உள்ளத்தைத் தொடும் உருக்கமான இப் பாடலை இயற்றியவர் கிருஷ்ணன் நம்பி. 'யானை என்ன யானை' என்ற அவரது நூலிலேயுள்ள பல சிறந்த பாடல்களில் இதுவும் ஒன்று.

கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்களின் பேரன்பைப் பெற்றவர், அவரது துண்டுதலால், குழந்தைகளுக்கும் கவிதை எழுதத் தொடங்கியவர், தே. ப. பெருமாள்.

வண்டி அற்புதப் பொருளாம் — வண்டி
மாடும் அற்புதப் பொருளாம்
வண்டி பூட்டும் கயிறும் — என்றன்
மனத்துக் கற்புதப் பொருளாம்.

எனக் கவிமணி பாடினர்.

அவரை குருவாகக்கொண்ட பெருமாள், புல்லை ஓர் அற்பப் பொருளாய்க் கருதாமல், ஓர் அற்புதப் பொருளாகக் கருதி அழகிய தொரு பாடல் தந்திருக்கிறர்.

பச்சை நிற மரகதம் போல்
படர்ந்திருக்கும் புல்லே!
பசுவுக்கும் ஆட்டுக்கும்
பசியடக்கும் புல்லே!

வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பார்கள். பெருமாளுக்குப் புல்லும் இலக்கியப் பொருளாகிவிட்டது!

திருக்குறளை இசைப் பாடலாக எழுதிப் புகழ் பெற்ற பு. ஆ. முத்துக்கிருஷ்ணன், காவேரியைப் பற்றிப் பாடியுள்ள பாட்டு, ‘குழந்தைப் பாக்கள்’ என்னும் அவரது கவிதை நூலில் காணப் பெறும் இனியதொரு பாடலாகும். துள்ளி வரும் காவேரி போல் துள்ளும் நடையிலே அமைந்துள்ளது, இப் பாடல். காவேரி நதி எங்கு பிறந்தது, எவ்வெவ் வழியாக வந்து, எவ்வெவ் வகையில் பலன் தருகிறது என்பதைக் கூறுகிறர் முத்துக் கிருஷ்ணன். அப் பாட்டிலே சில வரிகளை இங்கே காணலாம்.

சலசல வெனும் ஓசை — திருச்சி
தஞ்சை மீதில் ஆசை;
கலகல நகை புரியும் — நெல்
கரும்பு வாழை விளையும்.

தங்க மேனி சிலிர்க்க — நம்
தமிழர் வாழ்வு தழைக்க,
வங்கக் கடலில் புகுவாள் — என்றும்
மங்கலமே நிறைவாள்.

முத்துக்கிருஷ்ணன் மட்டுமன்றிப் பல கவிஞர்கள் காவேரி ஆற்றினைக் குறித்துச் சிறுவருக்காகப் பாடியுள்ளனர். அவர்களில் சிறப்பிடம் பெறுபவர் கவிஞர் தமிழ் ஒளி ஆவார். பெரியவர்களுக்காக உயிர்த் துடிப்புள்ள பல கவிதைகளை எழுதிப் புகழ் பெற்றவரும் சந்தப் பாடல்கள் பாடுவதில் வல்லவருமான தமிழ் ஒளியின் காவிரிப் பாட்டு சிறுவர் இலக்கியத்திற்குச் சிறப்பினைச் சேர்க்கும் பாடலாகத் திகழ்கிறது.

படகு மிதிக்க ஓடி வந்த காவிரி
பாட்டுப் பாடி ஆடிவந்த காவிரி
குடகுமலையில் குதித்து வந்த காவிரி
கொண்டுவந்த பொருளும் எங்கே, கைவிரி!

கன்னித் தமிழ் வாழவந்த காவிரி
கடலில் வந்து வீழ வந்த காவிரி
பொன்னி என்று பெயர் படைத்த காவிரி
போய்ப் பறித்த மலர்கள் எங்கே, கைவிரி!

குதித்தோடி வருகின்ற காவிரி பல பொருள்களைக் கொண்டு வரும், பல மலர்களைக் கொண்டுவரும் என்று குழந்தை எதிர் பார்க்கிறது. 'அவையெல்லாம் எங்கே, கைவிரித்துக் காட்டு பார்க்கலாம், என்கிறது. 'காவிரி 'கைவிரி' என்று நயமாகப் பாடிக் குழந்தைகளுக்கு நல்லின்பம் ஊட்டுகிருர் தமிழ் ஒளி.

தமிழ் இலக்கிய வளர்ச்சி குறித்துப் பல நூல்கள் எழுதியுள்ளார் இரா. தண்டாயுதம். அவர் வெளியிட்டுள்ள 'மலரும் மனம்' என்ற நூலிலே கடலுடன் ஒரு சிறுவன் பேசுவதாகக் கற்பனை செய்து எழுதப்பெற்ற அற்புதப் பாடல் ஒன்றிருக்கிறது :

எத்தனை நாட்டை நீ கண்டாய்?
எத்தனை ஊரில் ஆர்க்கின்ருய்?
அத்தனை இடமும் தமிழகம் போல்
அமைந்தே இருக்கக் கண்டாயோ?

என ஆசையோடு ஒரு சிறுவன் கேட்கிருன். அத்துடன் நிற்கவில்லை.

எத்தனை மொழிகள் நீ கேட்டாய்?
எத்தனை வகையாம் ஒலி கேட்டாய்?
அத்தனை மொழிகளில் தமிழைப்போல்
அழகியமொழியைக் கேட்டாயோ?

இலங்கையிலும் மலேசியாவிலும் குழந்தைகளுக்காகத் தமிழில் கவிதை பாடுபவர்கள் பலர், உள்ளனர். அவர்களில் கோலாலம்பூரில் வாழ்ந்துவரும் எல். எம். பகதுர் என்ற நேப்பாளி குறிப்பிடத் தக்கவர். ஜெர்மெனியரும். ரஷ்யரும், ஜப்பானியரும், பிரெஞ்சுக் காரரும் தமிழை விரும்பிக் கற்று, நூல்களை இயற்றியுள்ளது போல் நேப்பாளியாகிய பகதூர் தமிழ் மொழியைப் பள்ளியிலே பயின்று தமிழரைப் போலவே பேசவும் எழுதவும் பழகி, கவிதை புனையவும் தொடங்கிவிட்டார். மலேசியாவின் தேசிய மலரான 'பூங்கா ராயா' என்ற பெயருடன் இவர் இயற்றிய குழந்தைப் பாடல் நூல் வெளி வந்திருக்கிறது. அதில் இவர் எழுதியுள்ள 'பூந்தோட்டம்' என்ற பாடல் பொலிவுடைய ஒரு பாடல்.

வீட்டைச் சுற்றித்தோட்டமாம்
விதம் விதமாய் மலர்களாம்!

என்று தொடங்குகிறது அப் பாடல்.

அல்லி மலர் நீரிலே
அழகுத் தாமரை சேற்றிலே
மல்லி முல்லை கொடியிலே
மணக்கும் ரோஜா செடியிலே.

செடியில்பூத்தால் என்ன?
கொடியில் மலர்ந்தால் என்ன?
வடிவில் அழகு தானே,
வாசம் அருமைதானே!

பிறக்கும் இடத்தினல் பெருமை வருவதில்லை என்பதை எடுத்துக் காட்டும் இனிய பாடல் இது. இயற்கையின் எழிலை உவமை நயத்துடன் பாடக் கூடிய காமாட்சி சீனிவாசன், ஜ்வாலா ஜெயராமன், வெ. நல்லதம்பி, வாணிதாசன், இன்பவண்ணன், மீனவன், புவனை கலைச்செழியன், மு. வை. அரவிந்தன் முதலியோரையும் இங்கே சிறப்பாகக் குறிப்பிடவேண்டும்.

உயிரினங்கள்

சிறுவராய் இருந்த போதே கவி பாடத் தொடங்கியவர் செல்வகணபதி. 'வெள்ளைமுயல்,' 'பாட்டுப் பாடவா,' 'வண்டுகளே உங்களைத்தான்' ஆகிய கவிதை நூல்களைக் குழந்தைகளுக்காகத் தந்த இவரது இன்னேசை மிக்க பாடல்களில் ஒன்றை இப்போது காணலாம்.

வண்டுகளே உங்களைத்தான்
நான் அழைக்கிறேன்
வருக வருக தேன் குடிக்கும்
வழியைச் சொல்கிறேன்.

தாமரைப்பூஇதழ்விரித்துத்
தலை அசைக்குது
தலை அசைக்கும் பூவுக்குள்ளே
தேன் இருக்குது.

ஏன் தலையை அசைக்கிறது, தெரியுமா?

உண்பதற்குத் தேன் தரத்தான்,
பூ அழைக்குது
உங்கள் பசி போக்கிடத்தான்
மலர் சிரிக்குது!

இலங்கைக் கவிஞரான எம். ஸி. எம். ஸுபைர், தமது 'மலரும் மனம்' என்ற சிறுவர் பாடல் தொகுப்பில், 'என்ன சொல்லுது' என்ற பாடலைத் தந்துள்ளார்.

மாமரத்தில் கூவும் குயில்
என்ன சொல்லுது — அது
மாம்பழம் போல் இனிய மொழி
பேசச் சொல்லுது.

வாலை ஆட்டும் நாய் நமக்கு
என்ன சொல்லுது — அது
வாழ்வில் என்றும் நன்றியோடு
வாழச் சொல்லுது.

ஓடி ஓடித் திரியும் எறும்பு
என்ன சொல்லுது — அது
ஓய்ந்திடாமல் உழைத்து வாழ்வில்
உயரச் சொல்லுது.

குயிலும், நாயும், எறும்பும் கற்றுத் தரும் பாடங்கள் என்றென்றைக்கும் உதவுகின்ற இனிய பாடங்களாக, வாழ்க்கையில் சிறக்க வழி காட்டும் பாடங்களாக அமைந்துள்ளன.

சிறுவருக்கு நூற்றுக்கணக்கான பாடல்களை எழுதியவர் தமிழ் முடி. 'பிள்ளைக்கனியமுது,' 'தமிழ் முடியின் கதைப் பாடல்கள்,' 'பிள்ளையார் சிலை'என்னும் இவரது நூல்களில் குழந்தைகள் விரும்பும் பல கதைப்பாடல்களைக் காணலாம்.

அவரது பாடல்களில் புதிர் போடுவது போல் அமைந்துள்ளது, 'தறி இல்லாத நெசவு' என்னும் பாடல்:

தறியோ பாவோ இல்லாமல்
சத்தம் எதுவும் இல்லாமல்
சிறிய கைகள் கால்களினால்
செய்யும் நெசவின் அழகைப்பார்.

வயிற்றில் இருந்தே நூலாக்கி
வழவழப் புள்ள மெருகூட்டி
வெயிலின் ஒளியில் வலைபின்னும்
விந்தை அழகு நெசவைப்பார்.

மூலை முடுக்கு முள் வேலி
முன்தாழ் வாரம் கதவிடுக்கில்
நூலைப் பூட்டி நெய்கின்ற
நுட்ப மான நெசவாளி!

அந்த நெசவாளி யார் ?

ஆதியில் மனிதன் ஆடைகளை
அருமை நூலால் நெய்வதற்குப்
போதித் துள்ள ஆசிரியர்
புகழ்ந்து சொல்வேன், சிலந்தியென!

ஆதி மனிதனுக்கு ஆடை நெய்யக் கற்றுக் கொடுத்த ஆசிரியர் சிலந்திதான் என்று சிறப்பித்துப் பாடுகிறார் தமிழ்முடி.

பறவைகளைப் பற்றியும் மிருகங்களைப் பற்றியும் எத்தனையோ கவிஞர்கள் பாடியிருப்பினும் 'பாப்பாவுக்குப் பறவைகள்' என்று ஒரு தனி நூலும், 'பாப்பாவுக்கு மிருகங்கள்' என்று ஒரு தனி நூலும் எழுதிய பெருமை கே. எஸ். லெட்சுமணனுக்கே உரியது.

குழந்தைகளுக்குப் பூனையையும் யானையையும் மயிலையும் குயிலையும் பற்றித்தான் பாட வேண்டுமா? கழுதையைப் பற்றியும் பாடலாம் என்று கூறுகிறார், அ. அகமது பஷீர். கழுதை மிகவும் வேடிக்கையான மிருகம் என்றுதான் எல்லாரும் நினைப்பார்கள். அது பஷீரின் கற்பனையைத் தூண்டிவிடும் மிருகமாகவும் இருந்திருக்கிறது என்பதை அவரது பாடலிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

இடியைப் போன்ற சத்தம் - மிக
ஏங்கி ஏங்கிக் கத்தும்.

காய்ந்த வெற்றிலைக் காது - நீட்டிக்
கத்த மிகவும் தோது.

நெல்லைக் கொட்டும் குதிர்போல் - மிக
நீண்ட பெரிய வயிறு.

கண்கள் கோழி முட்டை – கோணல்
கால்கள் மிகவும் குட்டை.

வெள்ளி மூக்குக் குதிரை - பின்னால்
துள்ளி உதைக்கும் கழுதை!

கழுதையைப் பற்றிக்கூட உவமை நயத்துடன் இவ்வளவு அழகாக, நகைச்சுவை ததும்பப் பாட முடியுமா எனத் தோன்றுகிறதல்லவா? சிங்கப்பூர் வானொலியிலே 'குழந்தை இலக்கியம்' குறித்துப் பல முறை பேசிய பேச்சுக்களை ஒரு நூலாக வெளியிட்டிருக்கிறார் பஷீர். 'சிரித்த முல்லை' என்பது இவரது சிறுவர் கவித் தொகுதியின் பெயர்.

சந்தக் கவி பாடுவதில் வல்லவரான தமிழழகன் 'மழலை அமுதம்,' 'பூ மத்தாப்பு' என்னும் இரு நூல்களைக் குழந்தைகளுக்காக இயற்றித் தந்துள்ளார்.

முத்து முத்துப் பல்லக்கு
முதுகில் வைத்த பல்லக்கு
நத்தை ஏந்திச் செல்லுதாம்.
நாளும் ஊர்ந்து செல்லுதாம்.

பிறருக்குச் சங்காகவும், தண்ணீர்க் குடமாகவும் தோன்றும் நத்தையின் முதுகிலுள்ள ஓடு, தமிழழகனின் கற்பனைக் கண்களுக்குப் பல்லக்காகத் தோன்றுகிறது!

சந்தக் கவி பாடுவதில் சிறந்து விளங்கும் மற்றொரு கவிஞர் திருச்சி வாசுதேவன் ஆவார். 'பட்டுக் குடை,' 'கறுப்பு வைரம்,' 'பாலர் பாடல்கள்,' 'பாலர் கதைப் பாடல்கள்,' இவர் ஆக்கித் தந்த நூல்களாகும்.

'பெருமாள் மாடு' அலங்காரத்துடன் வீடுவீடாக அழைத்து வரப்படுவதைக் கிராமத்துச் சிறுவர்கள் நிச்சயம் கண்டிருப்பர். காணாத சிறுவர்களும் இப் பாட்டிலே கண்டு மகிழலாம்.

நல்ல பெருமாள் மாடு - அசைந்து
நடக்கும் பெருமை யோடு
சொல்லும் வார்த்தை கேட்டு - மிகவும்
சுகமாய்த் தலையை ஆட்டும்.

முதுகுச் சட்டை பட்டு - ஆனால்
முழுக்க முழுக்க ஒட்டு
நிதமும் தும்பைப் பிடிக்கும் - உடையோன்
நெஞ்சம் அறிந்து நடக்கும்.

நமச்சிவாயரைப் போல் பெரும் புலவராக இருப்பினும் பிள்ளைகளுக்கு எழுதுவதிலே மன நிறைவு பெறுபவர் அ. கி. பரந்தாமனார்.

அவர் வெளியிட்டுள்ள 'எங்கள் தோட்டம்' என்னும் நூலில், காணுமல் போன தன்னுடைய நாய்க்குட்டியைப் பற்றி ஏக்கத் தோடு பாடுகிருன், ஓர் இளஞ்சிறுவன்.

பாலூட்டிச் சோறூட்டிப்
பரிந்து வளர்த்த குட்டி
பரிந்து வளர்த்த குட்டியினைப்
பாய்ந்து பிடித்தவர் யாரோ?

கட்டிலிலும் தொட்டிலிலும்
காத்து வளர்த்தகுட்டி
காத்து வளர்த்த குட்டியினைக்
கட்டி வைத்தவர் யாரோ?

சதங்கை மணி கட்டியின்று
தரையில் விட்ட குட்டி
தரையில் விட்ட குட்டியினைத்
தடுத்துப் பிடித்தவர் யாரோ?

நாலு தெரு சுற்றிவரும்
நல்ல வெள்ளைக் குட்டி
நல்ல வெள்ளைக் குட்டியினை
நாடிப் பிடித்தவர் யாரோ?

ஒவ்வொரு கண்ணியிலும் இரண்டாவதாக உள்ள வரியே, மூன்று வது வரியிலும் திரும்ப வருவதும், கண்ணிகளின் இறுதியில் பாய்ந்து பிடித்தவர் யாரோ? கட்டி வைத்தவர் யாரோ? தடுத்துப் பிடித் தவர் யாரோ? நாடிப் பிடித்தவர் யாரோ? என்று வருவதும் பிள்ளை கள் பாடுவதற்குப் பெரும் மகிழ்ச்சி தரக்கூடியவை.

## நாடு

நம் தேசத்தைப் பற்றியும் கொடியைப் பற்றியும் சிறப்பாகச் சில கவிஞர்கள் பாடியுள்ளனர்.

சிறுவருக்கென 'மத்தாப்பு' எனும் இதழை நடத்திய மகிழ்ச்சிக் கண்ணன், 'எங்கள் கையிலே' என்ருெரு சிறுவர் கவிதைப் புத்த கத்தை வெளியிட்டிருக்கிருர்.

இந்தியாவின் சரித்திரம்
எங்கள் பையிலே
இந்தியாவின் எதிர்காலம்
எங்கள் கையிலே.

'எங்கள் பையிலே இந்திய நாட்டின் சரித்திரப் புத்தகம் இருக்கிறது. எங்கள் கையிலே இந்தியாவின் எதிர்காலம் இருக்கிறது' எனச் சிறுவர்கள் பாடும் போது, பெரியவர்களுக்கு மகிழ்ச்சியும் நம்பிக்கையும் பிறக்கிறது.

மாணவராயிருந்த போதே கதைகள் எழுதிப் புகழ் பெற்ற பூவண்ணன், சிறுவர் இலக்கியத்தில் சிறப்பிடம் பெற்றவர். சிறுவர் இலக்கியத்தின் பல்வேறு துறைகளிலும் ஈடுபட்டுப் பல பரிசுகளும் பாராட்டும் பெற்றவர். 'பாட்டுத் தோட்டம்' என்ற இவரது நூலில், 'இந்தியரே' என்ற பாடல் சிறப்பிடம் வகிக்கிறது. இந்திய ஒருமைப் பாட்டை இளம் உள்ளங்களிலே பதிய வைக்க இப் பாடல் பெரிதும் உதவும்.

எத்தனை பட்டைகள் வயிரத்தில்
எனினும் வயிரம் ஒரு பொருளே
எத்தனை சாதிகள் இந்நாட்டில்
எனினும் இந்தியர் இந்தியரே.

எத்தனை ஆறுகள் கடல் வயிற்றில்
எனினும் பெருங்கடல் ஒரு கடலே
எத்தனை மதங்கள் இந்நாட்டில்
எனினும் இந்தியர் இந்தியரே.

எத்தனை விழுதுகள் ஆலினிலே
எனினும் ஆலம் ஒரு மரமே
எத்தனை மொழிகள் இந்நாட்டில்
எனினும் இந்தியர் இந்தியரே.

## தலைவர்கள்

'வில்லுப் பாட்டுப் பாடுவதில் வல்லவரான சுப்பு ஆறுமுகம், குழந்தைகளுக்கேற்ற முறையிலும், பல பாடல்களைஎழுதித் தந்திருக்கிறார். அப் பாடல்களில் நம் தேசத் தந்தை காந்தித் தாத்தாவைப் பற்றிய பாடல், பிள்ளைகள் பாடுதற்கேற்ற நல்லதொரு பாடலாக அமைந்துள்ளது.

காந்தித் தாத்தா பாரு
கண்ணாடி போட்டிருக் காரு
கையில் பெரிய தடியே
காணோம் தலையில் முடியே!

பொய்யே சொல்லமாட்டார்
புலால் தின்ன மாட்டார்
வையும் போதும் சிரிப்பார்
வாழ்த்துச் சொல்லிக் குதிப்பார்.

உண்மை யான தாத்தா
உலகத்துக்கும் தாத்தா
எண்ணி எண்ணிப் பார்த்தா
எனக்குப் பிடிச்ச தாத்தா.

பாடும் சிறுவனுக்கு மட்டும் தானு, பாரில் உள்ள அனைவருக்குமே பிடித்த தாத்தா, காந்தித் தாத்தா.

நேரு மாமா நேரு மாமா என்று குழந்தைகள் கொண்டாடும் நேருஜியை, 'வாழ்க, வாழ்க,' என வாழ்த்திப் பாடிய கவிஞர்கள், அவர் மறைந்தபோது மனம் உருகிப் பாடிய பாடல்கள் பல. அத்தகைய பாடல்களில் ஒன்றைக் காண்போம்.

டில்லிக்குச் சென்று நேரு மாமாவைப் பார்க்க ஆசைப்படுகிறுன் ஒரு சிறுவன். அப்போது அவர் அங்கு இல்லை என்பதைக் கேட்டு உள்ளம் துடிக்கிறுன்.

டில்லி சென்று நேரு மாமா
பார்க்கப் போனேன் நான்
இல்லை என்று சொன்னவுடன்
அழுது விட்டேன் நான்.

குழந்தை போலச் சிரித்திருப்பார்
என்று சொன்னேன் நான்
அழகு நேரு இல்லை என்ருர்
அழுது விட்டேன் நான்.

ரோஜா மலர் வைத்திருப்பார்
என்று சொன்னேன் நான்
ராஜா மறைந்துவிட்டாரென்ருர்
அழுதுவிட்டேன் நான்.

'அழுதுவிட்டேன்' என்ற இப் பாடலை கேட்டு அப்போது அழாதவராக யாருமே இருந்திருக்க முடியாது. அத்தகைய உருக்கமான பாடல். இதை இயற்றியவர், 'இனிப்பும் சிரிப்பும்' என்ற நூலின் ஆசிரியரான நாரண மணி வண்ணன் ஆவார்.

புதிய புதிய பொருள்களைப் பற்றிக் கருத்துச் செறிவும் கற்பனை நயமும் கொண்ட பாடல்களைப் பாடவேண்டும் என்ற ஆசை மிக்கவர் தம்பி சீனிவாசன். பல்லாண்டுகளாகத் தமது உழைப்பாலும் யோசனைகளாலும் எழுத்தாலும் தமிழில் குழந்தை இலக்கியத்தை வளர்த்து வருபவர் இவர். இவரது 'சிவப்பு ரோஜாப் பூ' என்ற கவிதை நூலில், 'மாடிப்படியில் ஒரு படி' என்ற தலைப்பில் ஒரு பாடல் உள்ளது.

மாடி ஏறும் படிகளிடையே
மைய மான ஒரு படி
வாடிக்கையாய் நான் விரும்பி
வந்து நிற்கும் ஒரு படி.

விருப்பமாக மேலோ கீழோ
விரைந்து செல்ல ஏற்றதாய்
திருப்பு முனையில் உள்ளதே. நான்
விரும்பும் இந்த ஒரு படி.

அந்தப் படியின் பெருமையை எடுத்துச் சொல்கிறான் அச் சிறுவன்.

அப்பா அம்மா சீறும்போது
அமைதி காட்டும்படி இது
எப்போ தேனும் தனிமை தேட
இந்தப் படியை நாடுவேன்.

உள்ளம் துள்ளும் போதிலே நான்
துள்ளிச் செல்லும் படி இது
உள்ளம் சோர்ந்த போதிலே நான்
மெள்ள ஊரும் படி இது.

'கொக்கரக்கோ,' 'சிப்பாய் வரார்' என்ற இரு நூல்களை இயற்றியுள்ள 'லெமன்' தம்பி சீனிவாசனைப் போலவே யாரும் பாடாத பொருள்களைப் பற்றிப் பாடவேண்டும் என்று ஆசைப்படுபவர், அவர் எழுதிய அனுமாரும் அணிலாரும் என்ற பாடலைக் காண்போம்:

அனுமா ருக்கும் வாலதிகம்
அணிலா ருக்கும் வாலதிகம்
அதனால் தான்ரா மாயணத்தில்
அவ்விரு வருக்கும் பேரதிகம்.

அனுமார் அரிய பணிசெய்தார்
அணிலார் ஆன பணி செய்தார்
ஆனால், ராமர் இருவரையும்
அகிலம் புகழும்படி செய்தார்.

அரிய பணி செய்த அனுமாரையும் ஆன பணி செய்த அணிலாரையும் சிறப்பிக்கும் இப் பாடல் லெமனின் பாடல்களிலே சிறந்ததெனக் கருதப்படுகிறது.

'கிருஷ்ணன் நம்பி' எழுதிய 'ராம பாணம்' என்ற பாடல் ராமருடைய பாணம் யார்யாரை என்னென்ன செய்தது என்பதை வரிசையாகக் கூறுகிறது.

கூனிமுது கில்அடித்த பாணம் — அது
குவலயத்தை நடுங்க வைத்த பாணம்
சேனை ஆயிரம் அழித்த பாணம் — துன்பம்
செய்தவர்க்குத் துன்பம் செய்த பாணம்

என்று தொடங்கும் இப் பாடல்,

ராவணன் சிரம் அரிந்த பாணம் — அது
ராட்சதர் குலங்கெடுத்த பாணம்
தேவர் துயர் தீர்த்து வைத்த பாணம் — அது
தேவி சீதை மானங்காத்த பாணம்

என்று முடிகிறது. தெலுங்கிலே சிந்தா தீட்சதலு என்னும் கவிஞர் அனுமனின் வால் என்னென்ன திருவிளையாடல்கள் புரிந்தது என்பதைச் சிறுவருக்கேற்றவாறு சுவைமிக்க நீண்டதொரு பாடலாகப் பாடியிருக்கிறார் அப் பாடலைப் போலவே இப் பாடலும் சுவையளிக்கும் பாடலாகவும் இராமாயணத்தை மேன்மேலும் அறிய உதவும் பாடலாகவும் அமைந்துள்ளது.

மேசை மேல் வைத்துள்ள Pin Cushion ஐப் பற்றி இதுவரை யாரும் பாடியதாகத் தெரியவில்லை. அதைப் பார்க்கும் குழந்தைகளுக்கு அது எவ்வாறு தோன்றுகிறதாம். மின்னூர் சீனிவாசன் கூறுகிறார்:

நீல மெத்தைப் பெட்டியிலே
நேர்த்தி யான குண்டுசி
கோலப் புள்ளி போலிருக்கும்
குத்தி வைத்த குண்டுசி.

வானம் போலப் பெட்டியிது
வட்டவடிவ மாயிருக்கும்
வான நட்சத் திரம் போல
மயக்கி மினுக்கும் குண்டுசி.

நீல வானிலே மின்னுகின்ற நட்சத்திரத்தைப் போல நீல மெத்தையிலே மின்னுகிறதாம் குண்டுசி. மிக அழகிய கற்பனை.

பாரதியார் 'ஒளி படைத்த கண்ணினாய் வா, வா, வா' என்று வருகின்ற பாரதத்தையும், 'வலிமையற்ற தோளினாய் போ, போ, போ என்று போகின்ற பாரதத்தையும் பாடினாரே, அதை மனத்தில் கொண்டு தணிகை உலகநாதன் பாடியிருக்கிறார்:

சின்னஞ் சிறிய வாய் திறந்து
சிரிக்கும் பாப்பா வா, வா, வா
சிடுசிடுத்தே அழுது கொண்டு
தேம்பும் பாப்பா போ, போ, போ!

பாடம் படிக்கப் பள்ளி செல்லும்
பட்டுப் பாப்பா வா, வா, வா
பதுங்கிக் கொண்டு மூலையிலே
தூங்கும் பாப்பா போ, போ, போ!

குழந்தைகளின் குணநலம் சிறக்கத் துணைபுரியும் இப் பாடல், குழந்தைகள் அபிநயத்துடன் ஆடிப்பாட ஏற்ற அழகான ஒரு பாடல்.

சின்னஞ்சிறு குழந்தையாக இருந்தபோது அம்புலிப் பாட்டுப் பாடி அன்னத்தை ஊட்டி வளர்த்த அன்னையைப் பார்த்து, 'அம்மா இனி அம்புலிப் பாட்டுப் பாடாதே!' என ஒரு சிறுவன் கூறுகிறான். காரணம் என்ன?

அம்புலி அம்புலி வாவா எனவே
அம்மா சும்மா பாடாதே!
அம்புலி இங்கே வரமாட்டான்
அமெரிக்க மாமா விடமாட்டான்.

அமெரிக்க மாமா அம்புலி தன்னை
அடிக்கடி எட்டிப் பார்க்கின்றான்
அவனையும் மிஞ்சி சோவியத் மாமா
சுக்கிரன் தேடிப்பறக்கின்றான்.

மாமா இருவரும் தனித்தனியாக
வான வெளியைக் கலக்குவராம்
நாமே வான மண்டலம் தேடும்
நல்ல நாளும் எந்நாளோ!

விண்ணில் தெரியும் சந்திரனும் ஒரு
விளையாட்டுப் பொம்மை இல்லையம்மா
என்னை நிலவுப் பாட்டாலே
ஏமாற்ற வேண்டாம் என்தாயே!

வியப்புக்குரிய விஞ்ஞான சாதனைகளில் ஒன்றாக விளங்கும், விண்வெளிப் பயணத்தையும் சிறுவருக்கேற்ற செந்தமிழ்ப் பாடலாக நகைச்சுவையுடன் பாடமுடியும் எனக் காட்டியுள்ளார்

புத்தனேரி ரா. சுப்பிரமணியம், தமது 'அம்புலிப் பாட்டுப் பாடாதே' என்ற கவிதை நூலில். நாடகங்களுக்கும் பல நாட்டிய நாடகங் களுக்கும் பாடல்கள் எழுதிப் புகழ்பெற்ற இவர் சிறுவருக்கும் பல இசைப் பாடல்களை இயற்றியுள்ளார்.

குழந்தைகளின் அன்றாட வாழ்க்கையை உற்றுப் பார்த்து ஊடுருவிப் பார்த்துக் கவிதை புனையும் இளையவன், மலேசியக் கவிஞராகிய நெடுமாறன், கொ. மா. கோதண்டம் போன்றவர் களின் பாடல்களும் குழந்தைகள் விரும்பும் வகையில் புதுமை நோக் குடன் அமைந்துள்ளன.

### நகைச்சுவைப் பாடல்கள்

தமிழில் குழந்தைகளுக்கான நகைச் சுவைப்பாடல்கள் மிகக் குறைவாகவே உள்ளன. நகைச் சுவை மிளிரப் பாடும் கவிஞர்களின் ஒருவர் கிருஷ்ணன் நம்பி. அவரது 'யவன தேச ராஜா' என்ற பாடல் எல்லாக் குழந்தைகளுக்கும் விருப்பம் தரும் ஒரு நகைச் சுவைப் பாடல்.

யானை மேலே ராஜா
எந்த தேச ராஜா
யானை மேலே ராஜா
யவன தேச ராஜா

யவன தேச ராஜா!
எங்கு போகிறாரோ?
காட்டை நோக்கி ராஜா
வேட்டை யாடப் போறார்.

விரைந்து வீரமுடன் வேட்டைக்குப் போன ராஜா ஒரு புதர் அருகில் பார்க்கிறார்.

புதர் அருகில் என்ன ?
புலி வருது ஐயோ!
வீர மகா ராஜா
வில் எடுத்தார் கையில்.

வில் எடுத்த போது
வேர்த்தது உடம்பெல்லாம்,
குறிபார்த்த போது
குலுங்கிற்று அவர் மேனி!

அம்பு விட்ட போது
ஆடினவே கைகள்
அம்பு தவறிப்போச்சு
ஆனை மிரண்டாச்சு.

மறு நிமிஷம் ராஜா
மயக்க முற்றுச் சாய்ந்தார்.

யவன தேச ராஜாவின் வீரப்பிரதாபங்களை விளக்கும் இப் பாடல் பிள்ளைகளுக்குப் பிடித்தமான சந்தத்தில் இருப்பதும், மீண்டும் மீண்டும் சில சொற்றொடர்கள் வருவதும் பாட்டின் சிறப்பைக் கூட்டுகின்றன.

நகைச்சுவைப் பாடல்கள் எழுதுவதிலே பெயர் பெற்ற, மற்றொரு கவிஞர் லெமன்.

ஆங்கிலச் சொற்களையும் கொச்சைச் சொற்களையும் சேர்க்காமலே நகைச் சுவைப்பாடல் எழுத முடியும் எனக் காட்டியிருக்கிறார் பாரதிதாசன், 'வானூர்தி' என்ற பாடலில்.

வான ஊர்திக்கும் ஒரு சிறுவனுக்கும் நடக்கும் உரையாடலாக அமைந்தது இப் பாடல்.

'வான ஊர்தி, வான ஊர்தி
எங்கே போகின்றாய்?' — 'நான்
வாடிக்கையாய்ப் போவதே — இ
லங்கை மாநகர்.'

பானை ஒன்று குறுக்கில் வந்தால்
என்ன செய்குவாய்?— 'அட
பானை ஏது சட்டி ஏது
வான வெளியிலே!'

'ஆனை ஒன்று குறுக்கில் வந்தால்
என்ன செய்குவாய்!' — 'அட,
ஆனை ஏது பூனை ஏது
வான வெளியிலே.'

இப்படி நகைச்சுவை ததும்ப எழுதப் பெற்ற வினா — விடைப் பாடலில் 'அட பானை ஏது, சட்டி ஏது வான வெளியிலே' என்று மிக அலட்சியமாக, உற்ற ஒரு நண்பனிடம் பேசுவதுபோல் உரிமையோடு பேசுகிறது வானஊர்தி! இப் பாடலில் வரும் 'அட' எனும் சொல் எத்தகைய உயிர்த்துடிப்புடன் விளங்குகிறது!

பாலர்களுக்காகப் பால முருகனைப் பற்றி, திருச்சி பரதன் வேடிக்கையாகப் பாடிய பாடல், இன்று பக்தர்கள் பலரின் உள்ளத்தையும் கவர்ந்துள்ளது. பழனிக்குக் கால் நடையாகச் செல்லும் ஆயிரமாயிரம் பக்தர்கள் பாடி மகிழும் ஒரு பாடலாகத் திகழ்கிறது.

பாலனைப் போல் தோன்று கின்ற
பழனிவேலா — நீயும்
பண்டாரம் போல் நிற்பதேனோ
பழனிவேலா ?

எனத் தொடங்குகிறது பாடல்.

உண்டியலில் பணம் இருக்கு
பழனிவேலா — நல்ல
உடைகள் தைத்து அணிந்தால் என்ன
பழனிவேலா?

துண்டு கட்டி நிற்பதேனோ
பழனிவேலா — பட்டுத்
துணிக ளெல்லாம் வாங்கிடலாம்
பழனிவேலா!

அம்மா உமா தேவியாரும்
பழனிவேலா — உனக்கு
அன்பாய்த் தலை அலங்கரிப்பாள்
பழனிவேலா!

சும்மா ஏனோ செலவு என்று
பழனி வேலா — மொட்டை
சுருக்க மாக அடித்த னையோ
பழனிவேலா!

விடுகதைகள் புதிர்கள் போன்றவை சிறுவருக்கு இன்பமூட்டுபவை. பொழுது போக்க உதவுபவை. இரா. தண்டாயுதம், பூவண்ணன் போன்றவர்கள் இத்தகைய பாடல்களில் சிலவற்றைத் தங்கள் நூல்களில் தந்திருப்பினும், பிறைடணிவேலனைப் போல் ஒரு தனிப்புத்தகத்தைத் தரவில்லை.

'உங்களுக்குத் தெரியுமா?' என்ற நூலில் உள்ள புதிர்களும் விடுகதைகளும் சிறுவரின் அறிவுத்திறனைச் சோதிக்கவும் நினைவாற்றலைத் தூண்டவும் பயன்படுகின்றன.

சந்திரனுக்கு முதன் முதலில்
சரியாய்ச் செலுத்தி ராக்கெட்டை
எந்த நாடிவ் வுலகிலே
ஏற்றங் கொண்ட தெனச் சொல்வாய்?

என்பது அப் புத்தகத்திலுள்ள 124 பாடல்களில் ஒன்று.

சிறுவருக்கு விஞ்ஞான விந்தைகளையும் அந்த விந்தைகளைக் கண்டுபிடித்த விஞ்ஞானிகளையும் பற்றி பெ. நா. அப்புஸ்வாமி, நாரண. மணிவண்ணன், மயிலை சிவமுத்து, ஆ. வீரராகவன், பொன்ராசன் போன்ற கவிஞர்கள் பாடியிருப்பினும் ஒரு புத்தகம் முழுமையும் விஞ்ஞானக் கருத்துக்களைப் பாடல்களாகப் பாடியிருப்பது தமிழிலே புது முயற்சியாகும். இந்த முயற்சியில் ஈடுபட்டு வெற்றியும் கண்டிருக்கிறார் அரு. சோமசுந்தரம்.

தம்பி தங்கை விஞ்ஞானத்தில்
தளரக் கூடாது — சிறு
செம்புத் தண்ணீர் போல அறிவு
தேங்கக் கூடாது.

எனப் பாடும் கவிஞர், சிறுவரின் அறிவு வளர்ச்சிக்கு — அறிவியல் அறிவு வளர்ச்சிக்குத் துணை புரியும் வகையில், விஞ்ஞான ஊர்திகள், விஞ்ஞானப் புதுமைகள், விஞ்ஞான வசதிகள் என மூன்று பகுதிகளாகப் பிரித்து ஒவ்வொரு பகுதியிலும் எளிமையாக, தெளிவாக மொத்தம் 40 பாடல்களைத் தந்திருக்கிறார்.

தாமஸ் ஆல்வா எடிசனைப் பற்றிப் பாடும்போது,

எடிசன் என்னும் விஞ்ஞானி—அவர்
இணையில்லாத பெரும் ஞானி
செடியில் லாமல் பூப்பது போல்—அவர்
திறமை வியப்பைத் தருகுதடா!

செடியில்லாமல் பூப்பது போல் அவர் திறமை ,வியப்பைத் தருகிறதாம். விஞ்ஞான உண்மைகளையும் இலக்கிய நயத்துடன் எடுத்துக் கூற முடியும் என்பதற்கு இது ஒரு சான்று.

விஞ்ஞானப் பாடல்கள் தனி நூலாக வெளி வந்திருப்பதுபோல், நாரா. நாச்சியப்பன் தனித்தனியாக மூன்று நூல்களை வெளியிட்டிருக்கிறார். சிறுவர்கள் அறிந்து கொள்ள வேண்டிய பல்வேறு கருத்துக்களை 'கல்வி நெறி' என்ற நூலிலும், சிறுவருக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் பெரியோர்களின் செயற்கரிய செயல்களைச்

'சான்ருேர்கள்' என்ற நூலிலும், சிறுவர் செம்மையாக வாழும் வழிகளை 'செம்மைநலம்' என்ற நூலிலும் பாடல்களாகத் தந்திருக்கிருர்.

சிறுவர் கவிதை நூல்களில் மற்றும் ஒரு குறிப்பிடத்தக்க நூல் 'சிறுவர் உலகம்' என்பது. பு. ஆ. முத்துக்கிருஷ்ணன் இயற்றிய இந் நூலில் நம் நாட்டிலுள்ள பிற மாநிலச் சிறுவர்களையும் வெளி நாட்டுச் சிறுவர்களையும் காணலாம். ஒவ்வொரு சிறுவனும் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு, தமிழகச் சிறுவரை நோக்கிப் பாடுவது போல் அமைந்துள்ள இப் பாடல்கள் வாயிலாக பூகோளம், சரித்திரம், பருவநிலை, வாழ்க்கை முறை போன்றவற்றை அறிந்து கொள்ள லாம்.

பெரியோரின் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சிகளைப் பல கவிஞர்கள் தங்கள் நூல்களிலே சேர்த்திருந்தாலும், பெரியோரின் வாழ்க்கை வரலாற்றைப் பாடலாக எழுதியவர்கள் மிகக் குறைவே. ர. அய்யாசாமியின் 'மோகன காந்தி', அழ. வள்ளியப்பாவின், 'பாட்டிலே காந்தி கதை', 'நேரு தந்த பொம்மை', நாக. முத்தையாவின் 'சிறுவருக்கு லெனின் கதைகள்' ஆகியவை இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை.

"பள்ளிக்கூடம் போகலையோ காக்கா, பாடங்கள் படிக்கலையோ காக்கா", எனப் பாப்பா கேட்பதும், 'பள்ளிக்கூடம் போய் வந்தேன் பாப்பா,பாடங்கள் படித்து வந்தேன் பாப்பா', எனக் காக்கை பதிலளிப்பதுமாக குழந்தை இலக்கிய முன்ஞேடிகளில் ஒருவரான பி. ஆர். ராஜ சூடாமணி பாடியுள்ளார். இத் தகைய விஞ-விடைப் பாடல்கள் பலவற்றைப் பல கவிஞர்களின் நூல்களிலே காண்கிருேம். அவற்றில் சில அறிவுரைப் பாடல்களாக இருக்கின்றன. வேறு சில வேடிக்கைப் பாடல்களாக இருக்கின்றன. இன்னும் சில கதைப் பாடல்களாக இருக்கின்றன.

சிறுவர்கள் கதைகளையும் விரும்புகிருர்கள். பாடல்களையும் விரும்புகிருர்கள். ஆயினும், அவர்கள் மிகுதியாக விரும்புவது கதையும் பாட்டும் கலந்த கதைப் பாடல்களேயாகும்.

கதைப் பாடல் எழுதி வழிகாட்டிய கவிமணியைத் தொடர்ந்து இன்று பலர் கதைப் பாடல்கள் எழுதி வருகின்றனர். குழந்தைகளுக்கான பல கவிதை நூல்களில் கதைப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. சிலர், மற்றப் பாடல்களுக்கு இடையே ஒரு சில கதைப் பாடல்களைத் தந்துள்ளனர். வேறு சிலர், 'கதைப் பாடல்கள்' என்று ஒரு பகுதியையே ஒதுக்கி, அதில் பல 'கதைப் பாடல்களை அளித்துள்ளனர்.

முதல் முதலாகக் கதைப் பாடல்களை இயற்றி அவற்றை நூலாக வெளியிட்ட பெருமை பெ. நா. அப்புஸ்வாமிக்கே உரியது. ஆம்., 'சித்திரக்கதைப்பாட்டு' என்ற பெயரில் நிறைய்ச் சித்திரங்களுடன் 1948ஆம் ஆண்டு இரு தொகுதிகளையும் 1949ஆம் ஆண்டு மூன்றும் தொகுதியையும் அவர் வெளியிட்டார். இத் தொகுப்புக்களிலுள்ள பாடல்கள் பெரும்பாலும் மேல்நாட்டுக் கதைகளை அல்லது பாடல்களைத் தழுவியவையே. அதன் பிறகு, பலர் தங்களின் கதைப் பாடல்களைத் தனிப்புத்தகங்களாக வெளியிட்டனர். ஆயினும், ஆங்கிலத்தில் இருப்பதுபோல், பல கவிஞர்களும் இயறறிய கதைப் பாடல்களின் தொகுப்பு (Anthology of Story poems) தமிழில் வெளிவரவில்லையே என்ற குறை இருந்தது. தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கத்தார் 1877ஆம் ஆண்டு தாங்கள் வெளியிட்ட 'சிறுவர்கதைப் பாடல்கள்' என்ற நூலின் மூலம் அக் குறையை ஓரளவு நிறை செய்துள்ளனர். இத் தொகுப்பில் 60 கவிஞர்களின் கதைப் பாடல்கள் இடம் பெற்றிருக்கின்றன. இத் தொகுப்பில் கவிஞர்களின் கற்பனையில் எழுந்த கதைப் பாடல்கள் பாதிக்குமேல் உள்ளன. அக்காலப் புலவர்கள், அரசர்கள் பெருமையை எடுத்துக் காட்டும் பாடல்கள், பெரியோர்கள் வாழ்க்கை நிகழ்ச்சிகளைப் படம் பிடித்துக் காட்டும் பாடல்கள், ஆங்கிலக் கதைகள் அல்லது பாடல்களைத் தழுவி எழுதப் பெற்ற பாடல்கள் எனப் பல பாடல்களையும் இத் தொகுப்பில் காணலாம்.

குழந்தைகளுக்கான கவிதை நாடகம், தமிழில் இதுவரை இரண்டுதான் வெளிவந்திருப்பதாகத் தெரிகிறது. ஒன்று இலங்கையில் குழந்தை இலக்கிய முன்னோடியாகவும்,

ஆடிப் பிறப்புக்கு நாளை விடுதலை
ஆனந்தம் ஆனந்தம் தோழர்களே!
கூடிப் பனங்கட்டிக் கூழும் குடிக்கலாம்
கொழுக்கட்டை தின்னலாம் தோழர்களே!

என்று சிறுவர்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தி வருபவருமாகிய க. சோமசுந்தரப் புலவர் இயற்றிய 'சிறுவர் சல்லாப நாடகம்' என்பது. தாய் எலி, சேய் எலி, பூனை, சேவல், இந்த நான்கு பாத்திரங்களையும் வைத்து எழுதப் பெற்றது. படிப்பதற்கு ஏற்றதாக இது இருப்பினும், நடிப்பதற்கு இயலாததாகத் தோன்றுகிறது. மற்றொரு கவிதை நாடகம் ஆலந்தூர் மோகன ரங்கன் எழுதியது. பொய்யே நீ 'போய்விடு' எனும் இந்த இசை நாடகம் மேடையில் நடிப்பதற்கு மிகவும் ஏற்றது.

இதுவரை குழந்தைப் பாடல்களுக்கான இந்திய அரசினர் பரிசை 7 நூல்களும், தமிழக அரசினர் பரிசை 6 நூல்களும் பெற்றுள்ளன. இந்திய அரசினர் பரிசு பெற்றவை : அழ. வள்ளியப்பாவின் 'மலரும் உள்ளம்' (முதல் தொகுதி), 'பாட்டிலே காந்தி கதை'; மயிலை சிவமுத்துவின் 'முத்துப் பாடல்கள்'; பு. ஆ. முத்துக்கிருஷ்ணனின் 'குழந்தைப் பாக்கள்'; அ. கி. பரந்தாமனாரின் 'எங்கள் தோட்டம்;' ர. அய்யாசாமியின் 'பால ராமாயணம்'; லெமனின் 'கொக்கரக்கோ'. தமிழக அரசினர் பரிசு பெற்றவை: அழ. வள்ளியப்பாவின் 'மலரும் உள்ளம்' (முதல் தொகுதி), 'பாப்பாவுக்குப் பாட்டு', 'கவிமணியின் 'குழந்தைச் செல்வம்'; தூரனின் 'நல்ல நல்ல பாட்டு'; பூவண்ணனின் 'பாட்டுத் தோட்டம்'; மு. வை. அரவிந்தனின் 'சிறுவர் உலகம்'.

இது வரை நாம் உயர்ந்த கருத்துக்களை, சிறந்த கற்பனைகளை, புதிய உவமைகளை, புதிய உத்திகளை, இனிய சந்தங்களைப் பலரது பாடல்களிலும் கண்டு மகிழ்ந்தோம். எவருமே பாடியிராத பொருள்களைப் பற்றிப் பாட வேண்டும் என்ற முனைப்புடன் சில கவிஞர்கள் பாடி வருவதும் மகிழ்ச்சிக்குரியதே. மீண்டும் மீண்டும் ஒரே பொருளைப்பற்றிப் பலர் பாடுவது, ஒரே கருத்து, ஒரே மாதிரியான வர்ணனை போன்ற குறைகள் தவிர்க்கப்பட்டால், குழந்தை இலக்கியம் மேலும் செழிப்புறும்.

பொதுவாகக் குழந்தைகளுக்கு எழுதும்போது எளிமைக்கே முதலிடம் தர வேண்டும். எளிமையை மறந்து சிலர் தங்களது புலமையைக் காட்ட முயலும்போது, அவர்களின் நூல் எதிர்பார்த்த பலனைத் தருவதில்லை. மிகுதியான அருஞ்சொற்களை ஒரு சிலரது கவிதை நூல்களில் காணும்போது 'யாருக்காக இதை எழுதுகிறோம்?' என்பதையே இக் கவிஞர்கள் மறந்து விட்டனரோ என்ற ஐயம் எழுகிறது.

மேஜை மேலிருக்கும் தட்டிலே கண்ணைக் கவரும் ஆப்பிள் பழம் ஒன்றிருக்கிறது. அதைக் கண்ட ஒரு குழந்தை, "ஆ, அதோ ஆப்பிள்' என்று கூறி, அதை ஆவலாக எடுத்துக் கடிக்க முயலுகிறது. கடிக்க முடியாத அளவு அது கடினமாக இருக்கவே, குழந்தை அதை உற்றுப் பார்க்கிறது. உடனே "ஐய, இதை உண்மையான ஆப்பிள் என்றல்லவா நினைத்தேன், மரத்தால் செய்து வர்ணமல்லவா கொடுத்திருக்கிறார்கள்" என்று ஏமாற்றத்துடனும் ஏக்கத்துடனும் கூறி, அதைக் கீழே வீசி எறிகிறது. இதே போலத்தான், கவர்ச்சியான அட்டையும் பல வண்ணப்படங்களும் உயர்ந்த தாளும் நேர்த்தியான அச்சும் கொண்ட ஒரு கவிதை நூலில், கடினமான நடை இருப்பின் குழந்தைகளுக்கு ஏமாற்றமும் ஏக்கமுமே மிகுதியாகும்.

பாரதியார் கூறுகிறார் :

> "உலகத்தாருக்குப் பொருள் விளங்காதபடி இலக்கியம் செய்வோன் அந்த சக்தியைக் கரித்துணியாலே மூடுகிறான். வெள்ளைக்கலை யுடுத்துவதில்லை. இலக்கியத்துக்குத் தெளிவும் உண்மையுமே உயிரெனலாம்."

பாரதியாரின் வாக்கு, குழந்தைகளுக்காக இலக்கியம் படைப்பவருக்கு நல்லதொரு அறிவுரையாகும்.

குழந்தைப் பாடல்களில் பிற மொழிச் சொற்களை அளவுக்கு அதிகமாக ஒருசிலர் பயன்படுத்துகின்றனர். குழந்தைகளின் மகிழ்ச்சியை மிகுதிப்படுத்த வேண்டும் என்ற நோக்கில் எழுதப் படும் நகைச்சுவைப் பாடல்களிலே அப்படிப்பட்ட சொற்கள் கையாளப்படுகின்றன. ஆயினும், அளவிற்கு மீறிப் பயன்படுத்தப் படும் ஆங்கிலம் போன்ற சொற்களை, அச் சொற்களை அறியாத குழந்தைகள்-குறிப்பாக, கிராமத்துக் குழந்தைகள்-எவ்வாறு புரிந்துகொள்வர் ? புரிந்துகொள்ளவே முடியாத போது, அவர்களால் அப் பாடல்களை எவ்வாறு அனுபவிக்க முடியும் ?

இதே போல்தான், அளவுக்கு மீறிக் கொச்சைச் சொற்களைப் பயன்படுத்துவதையும் தவிர்க்க வேண்டும். சொற்களின் உண்மையான வடிவத்தைச் சரியாகத் தெரிந்துகொள்ளும் முன்பே, வடிவம் சிதைந்த ,கொச்சைச் சொற்களை மிகுதியாகப் பயன்படுத்தினால், குழந்தைகள் உள்ளத்திலே குழப்பம்தான் ஏற்படும்.

சில புத்தகங்களில் 'காஸபியாங்கா', இஞ்ச் கேப் பாறை', 'அணைகாத்த சிறுவன்' என்ற கதைப் பாடல்களைப் படிக்கும்போது, 'இவ்வளவு நல்ல கதைப் பாடல்களை ஆங்கிலத்தில் எழுதிய கவிஞர்கள் யார் யார் ? அவர்கள் ஆங்கிலத்தில் கொடுத்துள்ள தலைப்புக்கள் யாவை ?' என்று அறிந்துகொள்ளச் சில சிறுவர்கள் விரும்புவார்கள். பிற்காலத்தில் ஆங்கில அறிவு பெற்று அப் பாடல்களைப் படிக்கும் போது அவர்கள் இரட்டிப்பு மகிழ்ச்சி அடைவர். சில நூல்களில் ஆங்கில மூலப் பாடல்களின் பெயர்களோ, அவற்றை இயற்றியவர்களின் பெயர்களோ இல்லாதது பெருங் குறைதான்.

இன்னும் சில பாடல்களில் 'தபால்காரன் வருகிறான்', 'உருவம் செய்தான் ஒரு குயவன்', 'வள்ளுவனைப் பாடுவோம்', 'பாரதி போல் ஒரு கவிஞன் இல்லை' போன்ற வரிகளைக் காண்கிறோம். தபால்காரன், குயவன், வள்ளுவன், கவிஞன் என்ற சொற்கள் தபால்காரர், குயவர், வள்ளுவர், கவிஞர் என்றே இருக்க வேண்டும். எத்தொழில் செய்பவராயிருப்பினும், வயதிலே மூத்தவர்களையும்,

சான்றோர்களையும் குழந்தைப் பாடல்களிலே மரியாதையுடன் குறிப்பிடுவது மிக அவசியம்.

குழந்தைகள் விளையாடும் போது, பாடுவதற்கென்றே பல பாடல்கள் வாய்மொழியாக நம் நாட்டில் வழங்கி வருகின்றன. இன்று நம் குழந்தைகள் விளையாடும் புதுப்புது விளையாட்டுக்களுக்கு ஏற்பப் பல புதுப்புதுப் பாடல்களையும் நம் கவிஞர்கள் இயற்றித் தரலாம்.

குழந்தைகளின் விழாக்கள் நடக்கும் போது, நிகழ்ச்சி தொடங்குவதற்கு முன்பே குழந்தைகள் கூடிவிடுகின்றனர். நிகழ்ச்சி தொடங்கும் வரை அவர்களை நல்ல முறையில் ஈடுபடுத்தப் பாடல்களைப் பயன்படுத்தலாம். விழாவுக்கு வருகை தந்துள்ள குழந்தைகள் அனைவரும் ஒன்றுசேர்ந்து பாடுவதற்கு ஏற்ற சில பாடல்களை (Group Singing) மேடையிலிருந்து ஒருவர் பாட, குழந்தைகள் அவரைப் பின்பற்றிப் பாடுவார்கள். ஒன்றாக அனைவரும் ஈடுபடும் போது ஏற்படுகின்ற மகிழ்ச்சிக்கு ஈடு இணை எதுவுமே இராது. இதற்கான கூட்டுப் பாடல்கள், எளிய நடையில் எல்லாக் குழந்தைகளும் பாடுவதற்கு ஏற்றவாறு அமைய வேண்டும். குழந்தைகள் அவர்கள் நிலைக்கு அப்பாற்பட்ட, திரைப்படப் பாடல்களைப் பாடும் போது முகம் சுளிக்கிறோம். பின்னணி இசையுடன் பாடப்பெறும் அப்பாடல்கள் குழந்தைகளைக் கவருகின்றன. அதனால் பொருள் புரியாத போதிலும் அவர்கள் அப் பாடல்களைப் பாடிக் கொண்டிருக்கின்றனர். குழந்தைப் பாடல்களையும் நல்ல பின்னணி இசையுடன் பாடுவதற்கு ஏற்பாடு செய்தால், நிச்சயம் நற்பயன் விளையும். சென்னை வானொலி நிலையமும் மற்றும் சில வானொலி நிலையங்களும் சில குழந்தைப் பாடல்களுக்கு இசை அமைத்து ஒலி பரப்புகின்றன. இம் முயற்சியில், இன்னும் அதிகமாக அவர்கள் ஈடுபட வேண்டும். குழந்தைகளுக்காக இசைத்தட்டுக்கள் அபூர்வமாகவே காணப்படுகின்றன. இக் குறை நீங்கினால், குழந்தைப் பாடல்களைக் குழந்தைகளே விரும்பிப் பாடும் காட்சியைத் தமிழகம் முழுதும் காணலாம்.

இதுவரை நம் நாட்டிலும் இலங்கை, மலேசியா போன்ற பிற நாடுகளிலும் குழந்தைக் கவிதைகள் எவ்வாறு வளம் பெற்று வருகின்றன என்பதை ஓரளவாவது எடுத்துக் காட்ட முடிந்தது. குழந்தைக் கவிதை உலகின் பரப்பையும் ஆழத்தையும் அறிந்து கொள்ளவும் இது ஒரு வாய்ப்பாக இருக்குமென நம்புகிறேன்.

# சிறுகதைகள்

வீட்டிலே ஒரு பாட்டி இருப்பாள். அந்தப் பாட்டியைச் சுற்றி உட்கார்ந்து கொள்வார்கள் குழந்தைகள். 'பாட்டி பாட்டி, ஒரு கதை சொல்லு பாட்டி' என்று ஆசையாகக் கேட்பார்கள். உடனே பொக்கைவாய்ப் புன்னகையுடன் கதை சொல்லத் தொடங்கி விடுவாள் பாட்டி.

இராமாயணம், பாரதம் போன்ற இதிகாசக் கதைகளையும் அவற்றில் வரும் துணைக் கதைகளையும் பாட்டி கூறுவாள். விக்கிரமாதித்தன் கதை, பஞ்ச தந்திரக் கதை, புத்தர் ஜாதகக் கதை போன்ற கதைகளையும் நாடோடிக் கதைகளையும் சொல்லுவாள். இக் கதைகளெல்லாம் குழந்தைகளுக்காக எழுதப்பெற்றவையல்ல வாயினும், குழந்தைகளுக்கு ஏற்றபடி அன்போடு, கனிவோடு பாட்டி கூறுவாள். கதைகளைக் கேட்கும்போதே அவற்றில் வரும் நீதிகளும், நல்ல கருத்துக்களும் குழந்தைகளின் மனத்திலே பசுமரத் தாணிபோல் நன்கு பதிந்துவிடும். உள்ளத்தைப் பண்படுத்த ஓர் உயர்ந்த கருவியாக அம் முறை உதவியது. ஆனால், பாட்டியோ தாத்தாவோ, அப்பாவோ அம்மாவோ கதை சொல்லும் காட்சியை இன்று காண்பது அபூர்வமாகவே இருக்கிறது. டாக்டர் மு. வரதராசனார் கூறுகிறார்:

"தமிழ்நாட்டில் சில தலைமுறைகளுக்கு முன் சிறுவர்களுக்குக் கதையும் பாட்டும் ஊட்டி வளர்க்கும் முறை இருந்து வந்தது. கதை யுணவும், பாட்டுணவும் பள்ளிக்கூடங்களில் தருவதைவிட மிகுதி யாக வீடுகளில் பாட்டிமாரும் பெற்றோரும் அளித்து வந்தார்கள். காலம் மாறியது. உணவைப் பிசைந்து ஊட்டும் நிலை குறைந்து, உணவைத் தாமே அள்ளி உண்ணும் நிலை உள்ளது. ஆகையால், கதை நூல்களும் பாட்டு நூல்களும் எழுதி அளிப்பவர் தேவையான காலம் இது."

டாக்டர் மு. வ. இன்றைய தேவையை நன்கு எடுத்துக்காட்டி யுள்ளார். இத் தேவையை நிறைவேற்றும் முயற்சியாகப் பலர் குழந்தை இலக்கியத் துறையில் ஈடுபட்டுள்ளனர்.

கதையை விரும்பாத குழந்தையே இருக்க முடியாது. மிகவும் சிறு குழந்தைகள் தேவதைக் கதைகளையும் பிராணிகள் பற்றிய கதைகளையும் பெரிதும் விரும்புகின்றனர். கொஞ்சம் வளர்ந்த குழந்தைகள் வீரதீரக் கதைகளையும் சாகசக் கதைகளையும் விரும்புகின்றனர்.

தமிழில் சிறுகுழந்தைகளுக்கான கதைகளை எழுதுவோர் மிகவும் குறைவே. ஐந்து முதல் ஏழு வயதுவரையுள்ள குழந்தைகளுக்கு மிக எளிய சொற்களும், எளிய சொற்றொடர்களும் இருந்தால்தான் அவர்களால் எளிதில் புரிந்துகொள்ள முடியும். ஓசை நயத்துடன் அக் கதைகள் இருந்தால் இன்னும் சிறப்பாயிருக்கும்.

5வயது முதல் 7வயது வரையுள்ள குழந்தைகள் படிப்பதற்கேற்றவாறு எழுதப்பெற்றுள்ள கதைகளை 3முதல் 5வயது வரையுள்ள குழந்தைகளுக்குப் பெற்றோர்களோ அல்லது வீட்டிலுள்ள பெரியவர்களோ படித்துச் சொல்லலாம். இதனால், இரண்டு வயதுப் பிரிவினருக்கும் மகிழ்ச்சி ஏற்படும்.

இந்த வயதுக் குழந்தைகளுக்கு எழுதுவது எளிதன்று. குழந்தை இலக்கிய முன்னோடிகளில் ஒருவரான பி. ஆர். ராஜ சூடாமணி, 'சூடாமணி' என்னும் புனைபெயரில் எழுதியுள்ள 'என் பேர் என்ன?' என்ற கதை,

> ''குப்பை மேட்டில் ஈ ஒன்று இருந்தது.
> அதற்கு ஓர் ஈப்பாப்பா இருந்தது. அந்த
> ஈப்பாப்பாவுக்கு ஒருநாள்
> தன் பெயர் மறந்து போய்விட்டது''

என்று தொடங்குகிறது. அது கொழு கொழு கன்றிடம் செல்கிறது. பிறகு அதன் தாயிடம் செல்கிறது. கடைசியில் குதிரையிடம் செல்ல, குதிரை ஈ ஈ ஈ என்று கனைத்தவுடன் பெயரைத் தெரிந்து கொள்கிறது. கதை பழைய கதைதான். கதையின் இடையிடையே பாட்டு வருகிறது.

> ''கொழு-கொழு கன்றே
> கன்றின் தாயே
> தாயை மேய்க்கிற ஆயா''

என ஒவ்வொரு சந்திப்புக்கும் பிறகு, பாட்டிலே ஒரு வரி கூடுகிறது. பாட்டுடன் கலந்த இக் கதையைச் சின்னஞ் சிறு குழந்தைகள் பெரு மகிழ்ச்சியுடன் கேட்கிறார்கள்; மகிழ்ச்சியுடன் திருப்பிச் சொல்லுகிறார்கள்.

சூடாமணி எழுதிய 'கோழி விதைத்த நெல்', 'அலமு' என்னும் கதைகளும் இடையிடையே பாடல் கலந்த கதைகளே.

தி. ஜ. ர. வின் 'ரோஜாப் பெண்' என்ற புத்தகத்திலுள்ள 14 கதைகளில் பெரும்பாலான கதைகள் பாட்டுடன் கூடிய கதைகளே.

அழகான ஆட்டுக்குட்டி ஒன்று இருந்தது. அது ஒருநாள் பாட்டி வீட்டுக்குப் போயிற்று. வழியிலே குள்ள நரி அதைப் பார்த்து, "நில் நில், ஆட்டுக்குட்டியே, உன்னை நான் தின்னப் போகிறேன்" என்கிறது.

"பாட்டி வீடு போகிறேன்
பழைய சோறு தின்னுவேன்
தேட்ட மாக வளருவேன்
திரும்பி வந்து சேருவேன்
தின்னலாம் என்னை—நீ"

என்று பாடித் தப்பித்துக் கொள்கிறது. இப்படியே அது கழுகிடமும் புலியிடமும் பாடிப் பாடித் தப்பித்துச் செல்கிறது.

கதையில் மீண்டும் மீண்டும் இதே பாடல்கள் வருவது குழந்தைகளின் மகிழ்ச்சியை மிகுதிப்படுத்துகிறது.

'சோமசன்மா'எனும் புனைபெயர்கொண்டவர் எழுதிய 'கொக்கு டாக்டர்', 'பாயசம் குடித்த குருவி', 'கழுகும் கிளியும்', 'தவளையும் காளையும்' முதலிய புத்தகங்களிலும், சிறுகுழந்தைகளுக்கு ஏற்ற பல கதைகளைக் காணலாம்.

பழைய கதைகளையே இக்காலச் சூழ்நிலைக்கு ஏற்ப, வேடிக்கையான உரையாடல்களுடன் எழுதியிருக்கிறார். ஆயினும், முடிவுகளை அவர் விருப்பம்போல் மாற்றியிருக்கிறார். 'பல்லாண்டுகளாகப் பரம்பரை பரம்பரையாகக் கூறிவந்த கதைகளின் முடிவுகளை அவர் மாற்றியிருப்பது குழந்தைகள் உள்ளத்தில் குழப்பத்தையே உண்டுபண்ணும், அதற்குப் பதில் அவர் புதிய கதைகளை எழுதியிருக்கலாமே!' என்று தோன்றுகிறது.

'காக்கையும் நாகப்பாம்பும்' என்ற கதை எல்லாருக்கும் தெரியும். தான் இடும் முட்டைகளை மரத்தடியிலிருக்கிற நாகப் பாம்பு தினமும் திருடித் தின்பதை அறிந்த காகம், நரியின் யோசனைப்படி அரச குமாரியின் முத்துமாலையைத் தூக்கிவந்து நாகம் வசிக்கும் பொந்திலே போட, அரண்மனைச் சேவகர்கள் நாகத்தைக் கொன்று முத்துமாலையை எடுத்துச் சென்றது பழைய கதை; பரம்பரைக் கதை.

ஆனல், சோமசன்மா கூறியுள்ள கதையில், முத்துமாலையுடன் பறந்து சென்ற காகம், ஒரு மரக்கிளையில் உட்கார, அப்போது அதற்குத் தெரியாமல் பின்புறமாக ஒரு சேவகன் வந்து, அதன்மேல் கல் எறிகிருன். அது கீழே விழுகிறது. மற்ருெருவன் தடியை ஓங்கி அதை அடிக்கப் போகிருன். காக்கை நடந்தவற்றையெல்லாம் சொல்லி 'என்னை விட்டுவிடு' எனக் கெஞ்சுகிறது.

சேவகன் அதன் மண்டையில் 'படார் படார்' என்று நாலடி போட்டு முத்து மாலையைப் பிடுங்கிக்கொண்டு போய்விடுகிருன்.

இந்தக் கதையின் இறுதியில் நீதியையும் அவர் தனியாகக் கூறியிருக்கிருர்.

"ஆகையினல் பிள்ளைகளே! பொல்லாதவர்களைத் தந்திரத்தால் தான் கொல்ல வேண்டும் என்ருலும், அதற்காகப் பிறர் சொத்தைப் போய்த் திருடுவது அல்பத்தனம் என்பது இதனல் தெரிகிறது"

காலத்திற்கு ஏற்றபடி கதையை மாற்றிவிட்டதாகக் கருதும் அவர், இக் காலத்திற்கு ஒவ்வாத 'ஆகையால் பிள்ளைகளே' என்று கதையின் முடிவில் நீதி கூறியிருப்பது பொருத்தமாகத் தெரியவில்லையே!

சிறு குழந்தைகளுக்கு ஏற்றவாறு, இன்னும் சிலர் கதைகள் எழுதியுள்ளனர். அக்கதைகளில் தூரனின் 'கடக்கிட்டி, முடக்கிட்டி', 'நாட்டிய ராணி', 'ஓலைக்கிளி', 'நிலாப் பாட்டி' போன்றவை குறிப்பிடத்தக்கவை. தூரனின் 'கடக்கிட்டி முடக்கிட்டி' என்ற கதைப் புத்தகம் கழுதைக்கும் புத்திக் கூர்மை உண்டு என்று காட்டும் வேடிக்கையான பல கதைகளின் தொகுப்பாகும். 'ஓலைக்கிளி' என்னும் கதையில், தன் பாட்டி ஓலையில் செய்கின்ற கிளிகளில் ஒன்றைக்கூடத் தனக்குத் தராமல் விற்றுவிடுகிருளே என ஏங்கும் சிறுவனுக்கு, கிழிந்துபோன ஓர் ஓலைக்கிளி கிடைக்கிறது. அதை வைத்துக்கொண்டு அவன் சுவையான ஒரு கனவு காண்கிருன்; அதிலே மனநிறைவு பெறுகிருன்.

குழந்தைகளுக்காக முதல்முதலாக வெளிவந்த வாரப் பத்திரிகையின் ஆசிரியரும், புத்தக உலகுக்குப் புத்துயிரளித்தவருமான வை. கோவிந்தன், 'அணில் அண்ணன்' என்ற பெயரில் சில கதைகளை எழுதியிருக்கிருர். அவற்றுள் ஒன்று, 'எனக்கா சட்டை?' எனும் கதை. தன் சிநேகிதியின் பிறந்த நாளுக்குத் தானும் புதுப் பாவாடை சட்டை அணிந்துகொண்டு செல்ல வேண்டுமென அம்மாவிடம் அடம் பிடிக்கிருள் அழகம்மை. முதல் நாள் இரவு சாப்பிடாமலே தூங்கிவிடுகிருள். இரவு ஒரு மணிக்கு, கீழே ஏதோ சத்தம் கேட்டு மாடியில் படுத்திருந்த அழகம்மையும் அவள் அண்ணனும் எழுந்து சென்று பார்க்கிருர்கள். அம்மா இரவெல்லாம் விழித்துப் புதுப்

பாவாடை சட்டை தைப்பதைக் கண்டு அழகம்மை மனம் வருந்தி அம்மாவிடம் மன்னிப்புக் கேட்க, அம்மா, "அழாதே கண்ணு, உங்களுக்காகத்தானே வாழ்கிறேன்" என்கிருள்.

அப்பம் சுட்டு விற்கும் கிழவி, தான் சுடும் அப்பங்களில் மீதியிருப்பதை நாள்தோறும் காக்கைகளுக்கும் ஏழைகளுக்கும் தருவாள். ஒரு நாள் அந்தப் பாட்டி வெகுநேரம் வரை வராததால் காக்கைகள் சிறிது தூரத்திலிருந்த அவளது குடிசைக்குச் செல்கின்றன. அங்கே இறந்துகிடக்கும் பாட்டியைக் கண்டதும் இறக்கைகளை மார்பில் அடித்துக்கொண்டு 'அக்கா, அக்கா' என்று நாலுபுறமும் பறந்து சென்று ஊரையே கூட்டிவந்துவிடுகின்றன. இது மிக உருக்கமான ஒரு கதை. இக்கதையை எழுதிய மயிலை சிவமுத்து, 'தங்க நாணயம்', 'நல்ல பையன்', 'நல்ல எறும்பு' என்ற பல நல்ல கதைகளை எழுதியதோடு நகைச்சுவை ததும்பவும் எழுதியுள்ளார்.

கோவூர்த் தவளை குன்றத்தூரைப் பார்க்கவும், குன்றத்தூர்த் தவளை கோவூரைப் பார்க்கவும் ஒரே சமயத்தில் புறப்படுகின்றன. வழியிலே ஒன்றை ஒன்று சந்திக்கின்றன. ஒன்றை ஒன்று பிடித்துக் கொண்டு நின்ருல் பார்க்கவேண்டிய ஊரைப் பார்த்துவிடலாம் என்று பேசிக்கொள்கின்றன. அவ்விதமே எழுந்து நின்று பார்க்கும் போது, அதனதன் ஊரையே அவை பார்த்துவிட்டுத் திரும்புகின்றன. காரணம், தவளைக்குக் கண் தலையின் உச்சியில் இருப்பதால், இரண்டும் எழுந்து நின்றபோது அதனதன் ஊர்தானே தெரிந்திருக்கும்? உரையாடலாக அமைந்த இக் கதை விஞ்ஞான உண்மையையும் கூறுகிறது.

சில கதைகளில் வரும் இவரது தமிழ் நடையைப் பார்க்கும் போது, அக்கதைகள் பள்ளிப் பாட நூல்களில் சேர்ப்பதற்காக அல்லது துணைப் பாட நூல்களாக வைப்பதற்காக எழுதப்பெற்றவைபோல் தோன்றுகின்றன. இருப்பினும் குழந்தைகள் சுவைக்கும் வகையில் கதைகள் உள்ளன.

பி. இ. பாலகிருஷ்ணன் எழுதிய 'நிழலைக் கண்டு பயப்படலாகாது என்பதை எடுத்துக்காட்டும் 'ஏமாந்த நாய்க்குட்டி' என்ற கதையும், பேய் பிசாசுக்கு அஞ்சலாகாது எனத் தைரியமூட்டும் 'பயந்த குரங்குக் குட்டி' என்ற கதையும் சிறு பிள்ளைகளுக்கு மிகவும் பிடிக்கும்.

காலில் அடிபட்டுத் துடிக்கும் பூனைக்குட்டியை எடுத்துவந்து, அதனிடம் அன்பு காட்டி, அதன் நோயைக் குணப்படுத்த அரும்பாடு படுகிருன் பால்வண்ணன் என்ற சிறுவன். எங்கோயிருந்த ஒரு பிராணியிடம் அவன் காட்டும் அன்பைக் கண்டு தந்தையின் மனம் மாறுகிறது. ஊரிலே நோயால் வருந்தும்! சிற்றன்னையை அழைத்துவர

உடனே ஊருக்குப் புறப்படுகிறார். குழந்தையின் அன்பு, பெரியவர்களின் மனத்தையும் மாற்ற வல்லது என்பதைக் காட்டும் 'குப்பை மேட்டுப் பூனைக்குட்டி' என்ற கதையை எழுதியவர் ஆலந்தூர் கோ. மோகனரங்கம்.

தமிழில் குழந்தை இலக்கியம் வளரப் பலவகையிலும் தொண்டு புரிந்தவர் ர்த்னம். அவர் எழுதிய பல கதைகளில் 'பறவைகளின் மகாநாடு' ஒரு கதை.

மனிதர்களுக்குத் தொல்லை தந்த நரகாசுரனைக் கொன்ற மகாவிஷ்ணுவிடம் பறவைகளின் தூதுக்குழு சென்று, தங்களுக்குத் தொல்லை தரும் கழுகைக் கொல்லுமாறு வேண்டுகின்றது. "நீங்கள் யாரையும் கொல்லாமல் இருக்கிறீர்களா? சேவல் புழுவைக் கொல்கிறது. கொக்கு மீனைத் தின்கிறது. இப்பொழுது புழு என்னிடம் வந்து 'சேவலைக் கொல்லுங்கள்' என்றால் நான் சேவலைக் கொன்றுவிடுவதா?" என்று கேட்கிறார் மகாவிஷ்ணு. உடனே தூதுக்குழுவினர், "மனிதர்களுக்காகத்தானே நரகாசுரனைக் கொன்றீர்கள்? அவர்கள் மட்டும் யாரையும் கொல்லாமல் இருக்கிறார்களா? புறா, கோழி, வாத்து எல்லாவற்றையும் கொன்று தின்கிறார்களே!" என்று பதிலுக்குக் கேட்கின்றன.

"நரகாசுரனை யாராலும் கொல்ல முடியாததால் நான் கொன்றேன். கழுகைக் கொல்ல ஒரு வேடன் போதுமே! என்னால் உதவ முடியாது" என்று மறுத்துவிடுகிறார், மகாவிஷ்ணு.

பிறகு பிரம்மாவிடம் செல்லுகின்றன. அவரும் மறுத்துவிடவே பறவைகளெல்லாம் ஒன்றுதிரண்டு, 'விஷ்ணு ஒழிக!', 'பிரம்மா ஒழிக!' என முழங்குகின்றன. ஆனால், அம் முழக்கம் திடீரென நின்றுவிடுகிறது. பறவைகள் நாலாபக்கமும் பறந்து ஓடுகின்றன. காரணம், எதிரே கழுகுராஜா வந்துவிட்டதுதான்!

எளிய நடையில், சிறு சிறு வாக்கியங்களில் கதைகள் எழுதுவதில் கைதேர்ந்தவர் ரத்னம்.

பழங்காலக் கதைகளைப் போல, கற்பனை வளம் நிறைந்த புதிய கதைகளை எழுதுவதில் வல்லவர் ஈஸ்ரீ. ஒரு நாய் ஐந்து குட்டிகள் போட்டதில், ஒன்றின் முகத்திலும் உடலிலும் வெளுத்த மஞ்சள் கோடுகள் இருப்பதைக் கண்ட ஒரு சிறுவன் அதை எடுத்துப் போகிறான். "பார்த்தாயா, உன்னை அவன் எடுத்துவந்தபோது உன் தாய் சும்மா பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் மிகவும் பொல்லாதவள்" என்று பூனைக்குட்டி இரவிலே வந்து மஞ்சள் நாய்க்குட்டியிடம் சொல்லுகிறது. ஆனால், அந்த மஞ்சள் நாய்க்குட்டி மூலமாக மற்ற நான்கு குட்டிகளுக்கும் நல்ல வாழ்வு ஏற்படுகிறது.

அப்போது, மஞ்சள் நாய்க்குட்டியிடம் தாய் நாய் சொல்லு கிறது : "பிள்ளைகளுக்குத் தாய் தப்பு செய்யமாட்டாள். கெட்ட பிள்ளை இருக்கலாம்; கெட்ட தாய் இருக்கமாட்டாள்.'' ஈஸ்ரீயின் இந்த 'மஞ்சள் நாய்க்குட்டி' கதை, எல்லா வயதுக் குழந்தைகளையும் ஈர்க்கக்கூடியது.

ராஜாஜியின் கதைகளை இன்று படித்தாலும், நேரில் அவர் கூறுவதுபோலவே இருக்கும். காரணம், அக் கதைகளிலுள்ள எளிமையும், அவை சொல்லப்பட்டுள்ள முறையுமேயாகும்.

ஏழைக் குடியானவன் ஒருவனுக்குக் கண்ணபிரான் வரம் தர முன் வருகிறார். 'உனக்கு என்ன வேண்டும்? கேள், தருகிறேன். ஆனால் உனக்குத் தருவதை எல்லாருக்கும் தருவேன்'' என்கிறார் கண்ண பிரான்.

குடியானவன் 'சரி' என்கிறான். "ஆண்டவனே, என் பெட்டி நிறையப் பணம்—வெள்ளி ரூபாயாக இருக்கவேண்டும். எவ்வளவு எடுத்தாலும் குறையக்கூடாது'' என்று வரம் கேட்டுப் பெறுகிறான்.

கை நிறையப் பணத்தை எடுத்துக்கொண்டு புடைவை வாங்கக் கடைத்தெரு செல்கிறான். எல்லாரிடமும்தான் பெட்டியில் பணம் இருப்பதால் எவரும் ரூபாயை வாங்கத் தயாராயில்லை. அரிசியோ, பருப்போ, கடலையோ வேண்டுமென்கிறார்கள். பாவம், ஏழைக் குடியானவனால் எதுவுமே வாங்க முடியவில்லை. "நானும் என் குடும்பமும் பசியால் செத்துப்போவோமே!'' என்று குடியானவன் அழுகிறான். கடைசியில் கண்ணபிரானைப் பார்த்து, "உன் வரத்தை நீயே எடுத்துக்கொண்டு போ. நான் முன்போல் உழைத்துப் பிழைக்கிறேன்'' என்கிறான்.

இக் கதையைப் படிக்கும் குழந்தைகள், 'பணம் இருந்தால் போதும். அதனால் எதையும் வாங்கலாம், எதுவும் செய்யலாம்' என்றொரு எண்ணங் கொண்டிருந்தால், அதை மாற்றிக்கொள் வார்கள். அத்துடன் உழைப்பின் பெருமையையும் உணர்ந்து கொள்வார்கள். ராஜாஜியின் மற்றொரு கதையைக் கேளுங்கள்:

ஒரு பால்காரன், நீரிலும் மிக மோசமான நீரைப் பாலில் நிறைய நிறையக் கலந்து விற்பனை செய்கிறான். இதைக் கண்டு வேதனையடையும் நெல்லூர்ப் பசு, "அப்பனே, கன்றை ஏமாற்றிப் பால் கறந்துகொண்டு போகிறாய். அதில் தண்ணீர் சேர்த்து விற்கிறாய். என்னுடைய பால் நன்றாக இல்லை என்று எல்லாரும் ஏசுகிற பேச்சு எனக்குக் கேட்கக் கஷ்டமாக இருக்கிறது'' என்று கன்றை நக்கியவண்ணம் சொல்கிறது. பால்காரனுக்குப் பசுவின்

பேச்சு விளங்கவில்லை. அப்போது அந்தக் கன்று, "அம்மா, பால் பால் என்கிறார்களே, அது என்ன அம்மா" என்று பரிதாபமாகக் கேட்கிறது. தாய்ப்பசுவின் கண்களில் நீர் வழிகிறது. கன்றை அழுத்தி நக்குகிறது. இப்படி ஒரு சோகக் காட்சியைப் பிள்ளை களுக்குக் காட்டுகிறார் ராஜாஜி.

நகரங்களில் இன்றுவரை நடந்துவரும் இக் கொடுமைக்கு வருங் காலத்திலாவது அணை போட்டுத் தடுக்க வேண்டுமென்பதே ராஜாஜியின் ஆசை.

ராஜாஜி அறுபதுக்கு மேற்பட்ட குழந்தைக் கதைகளை எழுதி யிருக்கிறார். அவர் தமது 'கற்பனைக் காடு' என்ற கதைத் தொகுதி யின் முன்னுரையில், "கற்பனையும் உபதேசமும் ஓரளவு வேடிக்கை யும் கலந்த புதர்க் காடாக இதை வைத்துக் கொள்ளலாம். இந்தக் காட்டில் விஷ ஜந்துக்கள் இல்லை. பயப்படாமல் பிரவேசிக்கலாம்" என்கிறார். உண்மைதான். ராஜாஜியின் கதைகளில் புலியும் பாம்பும் வரும்; கொசுவும் குரங்கும் வரும். ஆனால், அவை எதுவுமே குழந் தைகளின் உடலையோ உள்ளத்தையோ ஊனப்படுத்தாது. உயர்வுக் குத்தான் வழி வகுக்கும்.

மிருகங்களையும் பறவைகளையும் தேவதைகளையும் வைத்து நூற்றுக்கணக்கான கதைகளை எழுதியவர்கள், கோபு, முத்து என்ற புனைபெயர்களில் எழுதிய எஸ். கோபாலகிருஷ்ணனும், ராஜி என்ற புனைபெயரில் எழுதிய எஸ். நடேசனும் ஆவர். குண்டுமணி, நா. வயிரவன், முரசொலி அண்ணா, கல்வி கோபாலகிருஷ்ணன், அரிமழம் இராம கணபதி ஆகியோரும் சிறு குழந்தைகளுக்குக் கதை கள் எழுதியவர்களில் குறிப்பிடத்தக்கவராவர்.

ஒன்பது வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கு எழுதுவதில் பலர் ஈடுபட்டுச் சிறப்பாக எழுதி வருகின்றனர்.

கடந்த 30 ஆண்டுகளாகச் சிறுவர் இலக்கியம் வளரப் பணி புரிந்துவரும் நெ. சி. தெய்வசிகாமணி எழுதிய 'அன்புடன் புளியோ தரை' என்ற கதை அவரது பல சிறந்த கதைகளுள் ஒன்று.

ஓர் ஏழைச் சிறுவனுக்கு ஒரு பணக்காரச் சிறுவன் தன் பகல் உணவைத் தினமும் பகிர்ந்து தருகிறான். ஒருநாள் ஏழைச் சிறுவன் தன் தாயார் செய்த புளியோதரையை எடுத்துக்கொண்டு பணக்கார நண்பனின் வீடு சென்று கொடுக்கிறான். "இந்தப் பையனைப் பார்த்தாலே சாப்பிடப் பிடிக்காது. போதாக்குறைக்கு இவர்கள் வீட்டில் செய்த புளியோதரையை வேறு வாங்கிச் சாப்பிடுவதா?" என்று பணக்காரச் சிறுவனின் அம்மா சீறுகிறாள்.

அதற்குள் ஏழைப்பையனின் அம்மா, மகனைத் தேடி அங்கு வர, அவள் பணக்காரப் பையனின் அம்மாவை அடையாளம் கண்டு கொள்கிறாள். இருவரும் சிறு வயதில் ஒன்றாய்ப் படித்தவர்கள். பணக்காரி, சிறுவயதில் ஏழையாயிருந்தபோது, அன்று பணக்காரியா யிருந்து இன்று ஏழையாயிருக்கும் அம்மா எவ்வளவு தூரம் தனக்கு உதவினாள் என்பதையும், எத்தனை தடவை அவளுடைய வீட்டி லிருந்து பலகாரங்களைக் கொண்டுவந்து தந்திருக்கிறாள் என்பதை யும் பணக்காரி நினைத்துப் பார்த்து மனம் உருகுகிறாள். இரு அம்மாக்களும் இரு சிறுவர்களையும்போல நெருங்கிய நட்புக் கொள்கின்றனர்.

"அன்புக்கு முன்னே அனைத்தும் துச்சம். அன்பே தெய்வம் இதை வலியுறுத்த எத்தனை கதை வேண்டுமானாலும் எழுதலாம்" என்கிறார் தெய்வசிகாமணி.

நகைச்சுவை ததும்ப எழுதுவதில் வல்லவரான மாயூரன், 'தஞ்சாவூர் நந்தி' என்னும் புதுமையான ஒரு கற்பனைக் கதையை எழுதியிருக்கிறார்.

பிற்காலத்தில் இராஜராஜனாக விளங்கிய அருள்மொழிவர்மனும் அவரது சகோதரிகளான குந்தவை, நந்தினி ஆகிய மூவரும் திருநாகைப்பட்டினம் சென்றபோது அங்கிருந்த நந்தி மண்டபப் படித்துறையில் அமர்ந்திருக்கின்றனர். அப்போது குந்தவையும் நந்தினியும் கண்ணாம்பூச்சி விளையாடுகின்றனர். குந்தவை மண்ட பத்திலிருந்த ஒரு சிறிய நந்தியின் பின்னால் ஒளிந்துகொள்ள, நந்தினி அவளை எளிதில் கண்டுபிடித்து விடுகிறாள்.

உடனே அருள்மொழிவர்மன், "இந்தச் சிறிய நந்தியின் பின்னால் ஒளிந்ததால்தானே கண்டுபிடிக்க முடிந்தது? நான் பெரியவனானதும், நம் தலைநகரத்தில் ஒரு மிகப்பெரிய நந்தியின் சிலையை அமைப் பேன்" என்கிறான்.

"நந்தியின் சிலை மிகப்பெரிதானால், அதைவிடப் பெரிதாகச் சிவ லிங்கம் இருக்க வேண்டுமே!" என்கிறாள் குந்தவை.

வலிங்கம் மிகப்பெரிதானால் அதைவிடப் பெரிய கர்ப்பக் கிரு ஹம் வேண்டும். கர்ப்பக் கிருஹம் பெரிதானால், கோயில் விமான மும் மிகப்பெரிதாக இருக்க வேண்டும் என்று படிப்படியாக அவர் களின் பேச்சிலே வளர்ந்துவிட்டது பெரிய கோயில்.

"அத்தகைய பெரிய கோயிலை நான் பெரியவனானதும் கட்டு வேன்" என்று ஆவேசம் வந்தவன்போல் பேசுகிறான் அருள்மொழி வர்மன்.

இது தஞ்சைப் பெரிய கோயிலைப் பார்க்கச் சென்று, அங்குள்ள நந்தி மண்டபத்தில் ஓய்வெடுத்துக்கொண்ட சிறுவன் உறங்கும் போது கண்ட கனவு என முடிக்கிறார் மாயூரன்.

ஆர். பொன்னம்மாள் எழுதிய 'மனமாற்றம்' என்ற கதையில்

ஒரு சின்னஞ்சிறு கிராமத்திற்கு மாற்றலாகி வரும் ராஜசேகரின் மகள் மல்லிகா, பள்ளியில் தன்கூடப் படிக்கும் ஏழைக் குழந்தை களின் அழுக்கு உடைகளையும், பரட்டைத் தலைகளையும் கண்டு அவர் களை வெறுக்கிறாள். அவர்களுடன் சேர்ந்து படிக்க மறுக்கிறாள் ஒருநாள் திருவிழாவுக்குச் சென்ற மல்லிகாவை, யாருக்கும் தெரி யாமல் ஒரு திருடன் தூக்கிச் சென்று, மல்லிகாவை மிரட்டி நகை களைப் பறிக்கிறான். அப்போது அங்கே சுள்ளி பொறுக்கிக்கொண் டிருந்த கிராமத்துப் பெண்கள் ஓடிவந்து, திருடன்மேல் பாய்ந்து, அவனிடமிருந்த நகைகளை எடுத்துக்கொண்டு, அவனைக் கயிறுகளால் கட்டிப்போட்டு, மல்லிகாவைக் காப்பாற்றுகிறார்கள். தங்களுக்கு ஏற்பட்ட காயங்களையும் பொருட்படுத்தாமல் அவளைக் காப்பாற்றி யவர்கள் வேறு யாருமல்லர். அவளது வகுப்பிலே யார் யாரை அவள் அதிகமாக வெறுத்தாளோ, அந்தக் குழந்தைகளின் அம்மாக் களும் அத்தைகளும்தான்!

கிராம மக்களின் சூதுவாதறியாத வெள்ளை உள்ளத்தையும் ஆபத்துக்கு உதவும் அருங்குணத்தையும் எடுத்துக்காட்டும் இனிய கதை இது.

நாரா நாச்சியப்பன் எழுதிய பல கதைகளுள் 'மூன்றாவது இளவரசன்' என்னும், திருக்குறளின் உயர்வை விளக்கும் கதை குறிப் பிடத் தக்கது.

உலகைவிடப் பெரியது எது? கடலைவிடப் பெரியது எது? மலை யைவிடப் பெரியது எது? என்ற கேள்விகளுக்குப் பதில் கண்டுபிடிக்க மூன்று இளவரசர்கள் சேர, சோழ, பாண்டி நாடுகளில் சுற்றி வருகின்றனர். பாண்டி நாடு சென்ற மூன்றாவது இளவரசன், திருக்குறள் கருத்துக்களைக் கொண்டுவந்து, பதிலாகத் தந்து பட்டம் சூடுகிறான்.

க. ஜெயம்கொண்டானின் 'உச்சாணிக் கிளை' என்பது நல்ல தோர் உருவகக் கதை.

உச்சியிலுள்ள ஒரு கிளை அடிமரத்தைப் பார்த்து, "என்னுடைய உயரம், கவர்ச்சி, நான் காற்றிலே அசைந்தாடும் அழகு இவையெல் லாம் உனக்கு வருமா? உன்னைச் சுற்றி எறும்பு மொய்க்குது. உன் மீது எருமை மாடு உடம்பைத் தேய்க்குது" என்று கேலி செய்கிறது.

"உன் மாதிரி எல்லாரும் உயரத்திலே இருந்தால், யாருக்கும் எந்தவிதமான உதவியும் கிடைக்காது. யாரும் நெருங்கவும் முடியாது. ஒருத்தருக்கும் உதவாமே இருக்கிறதைவிட இல்லாமலே போயிடறது ரொம்ப நல்லது" என்கிறது அடிமரம்.

திடீரெனப் புயல் வீச, உச்சாணிக் கிளை ஒடிந்து அடிமரத்தின் காலடியில் விழுகிறது.

முரசொலி சொர்ணம் சிறுவருக்காகப் பல கதைகள் எழுதியுள்ளார். அவற்றில் ஒன்று 'புத்தர் பொம்மை' என்னும் கதை.

பொம்மைக்காரரிடம் வேலை பார்க்கும் சிறுவன், தள்ளுவண்டியில் பொம்மைகளை வைத்து' விற்கச் சென்றபோது, புத்தர் பொம்மையைப் பார்த்துப் பார்த்து ஏங்கிய ஏழைச் சிறுமிக்கு, அதை இலவசமாகக் கொடுத்துவிடுகிறான். அதற்குரிய விலையைத் தன் சம்பளத்தில் பிடித்துக்கொள்ளச் சொல்லியும், முதலாளி அவன்மீது கோபம் கொண்டு வேலையைவிட்டு நீக்கிவிடுகிறார். வருத்தத்துடன் வந்த அவன், புத்தர் பொம்மையைப் பெற்றுச்சென்ற சிறுமி மகிழ்ச்சியாக அதை வைத்து விளையாடுவாள் என்று நினைத்து அவளது குடிசைப் பக்கம் செல்கிறான். அப்போது, குடிசைக்குள்ளிருந்து வீசி எறியப்பட்ட பொம்மை அவன் தலையைத் தாக்கிக் கீழே விழுந்து நொறுங்குகிறது. சிறுமி, வீட்டிலிருந்த காசைத் திருடித்தான் அந்தப் பொம்மையை வாங்கியதாக நினைத்து, அவள் அப்பா கோபமாகப் பொம்மையை வெளியே எறிந்ததை அறிந்த அவன், 'எனக்கு வாய்த்த முதலாளியும், இந்தப் பாப்பாவுக்கு வாய்த்த அப்பாவும் இப்படி அன்பே இல்லாதவர்களாக இருக்கிறார்களே!' என வருந்துகிறான். அவ்வளவுதான் கதை. அதற்குமேல் வளர்த்தவில்லை!

பல சிறுகதைகளையும் நாவல்களையும் கடந்த 30 ஆண்டுகளாக எழுதிவரும் ஜெ. எத்திராஜன், 'சோம்பல் ஒழிந்தது' என ஒரு கதை படைத்துள்ளார்.

தாயைக் காக்க வேண்டிய கடமையுள்ள ஒரு சிறுவன், படிக்காமல் சோம்பேறியாயிருக்கிறான். அவனை ஆசிரியர் பள்ளியிலிருந்து நீக்கிவிடுகிறார். அம்மா தன் மீது கொண்டுள்ள பாசத்தையும் ஆதரவற்ற அம்மாவைக் காக்க வேண்டிய தனது கடமையையும் அவன் பிறகு உணருகிறான். பகலில் இரும்புத் தொழிற்சாலையில் கடுமையாக உழைத்துப் பணம் சம்பாதிக்கிறான். இரவில் இரவுப் பள்ளியில் ஏட்டுக் கல்வி படித்து முன்னேறுகிறான். அன்னைக்குப் பாரமாக இல்லாமல் ஆதரவாக இருப்பதில் அவனும் மகிழ்ச்சி அடைகிறான். அம்மாவும் மகிழ்ச்சி அடைகிறாள்.

நூற்றுக்கணக்கான சிறுகதைகளை எழுதியுள்ள பி. எஸ். மணி (குண்டுமணி) எழுதிய கதைகளுள் 'பாலுவின் சைக்கிள்' குறிப்பிடத் தக்கது.

பாலு என்னும் பணக்காரப் பையன் ரகு என்ற ஏழைப் பைய னிடம் தன் சைக்கிளைத் துடைக்கச் சொல்லிவிட்டு விளையாடச் செல்கிறான். திரும்பி அவன் வரும்போது ரகு தன்னுடைய சைக் கிளில், தான் கூப்பிடுவதைக்கூடக் கேட்காமல் வேகமாகச் செல் வதைக் கண்டு கோபமடைகிறான். பிறகுதான் விவரம் தெரிகிறது, அவனுக்கு. மாடியிலிருந்து விழுந்து அடிபட்ட தன் தங்கையைக் காப்பாற்றவே அந்த ஏழைச் சிறுவன் தன் சைக்கிளில் விரைந்து சென்றான் என்பதை உணருகிறான்.

ராஜா ராணிகளையும் மிருகங்களையும் தேவதைகளையும் வைத்துக் கதை எழுதும் குண்டுமணி, இக்காலச் சூழ்நிலையை வைத்து எழுதி யதே மேலே சொல்லப்பட்ட கதை.

கடந்த முப்பது ஆண்டுகளாகத் தொடர்ந்து சிறுவருக்கு எழுதி வருபவர் தங்கமணி, நூற்றுக்கணக்கான சிறுவர் கதைகளைப் படைத்தவர் அவர். இவரது நடை, கதைக் கரு, கற்பனை, உத்தி, இடையிடையே பளிச்சிடும் உவமை யாவுமே சிறுவர் உள்ளத்தைப் பெரிதும் கவர்வன.

'நானா' என்ற தலைப்புடன் தங்கமணி ஒரு கதை எழுதியிருக் கிறார்.

தான் ஓர் அனாதை எனப் பொய் சொல்லி, ஒரு டாக்டரின் அனு தாபத்தைப் பெற்று, அவரது ஆதரவிலே வளர்ந்து வருகிறான் கிருஷ்ணன் என்ற சிறுவன். அவர் நம்பும்படி நடித்து, அவரது அன்பையும் பெற்றுவிடுகிறான்.

ஒரு நாள், அவனுக்குத் திரைப்படக் கொட்டகையில் சேர்ந்து வேலை பார்க்க வேண்டுமென்னும் ஆசை பிறக்கிறது. டாக்டரிடம் தன் ஆசையை வெளியிட்டு, ஒரு சிபாரிசுக் கடிதம் தருமாறு வேண்டு கிறான்.

டாக்டர் சிபாரிசுக் கடிதம் கொடுக்கிறார். அதைப் பையிலே வைத்துக்கொண்டு படுத்திருந்த அவனுக்கு இரவிலே தூக்கம் வர வில்லை. எழுந்து வெளியிலே வந்து, தெரு விளக்கிலே அக் கடிதத் தைப் படித்துப் பார்க்கிறான். மீண்டும் மீண்டும் படித்துப் பார்க் கிறான். பிறகு, உணர்ச்சி வயப்பட்டு, 'டாக்டர் எவ்வளவு நல்லவர்! அனாதை என்று பொய் சொல்லி டாக்டரை நம்ப வைத்தேனே, நானா உண்மையானவன்? நல்லவன் மாதிரி நடித்து டாக்டரை ஏமாற்றி வருகிறேனே, நானா யோக்கியமானவன்? டாக்டருக்குத் தெரியாமல் அவரது மருந்துகளைத் திருட்டுத்தனமாக விற்றேனே, நானா நாணயமானவன்? என்னை நம்பி அவர் சிபாரிசுக் கடிதத்தில் எழுதியிருக்கிறாரே, நானா உண்மையானவன்? நானா யோக்கியமான

வன்? நானா நாணயமானவன்?' என்று திரும்பத் திரும்பத் தன்னையே கேட்டுக்கொள்கிறான். விடிந்ததும் டாக்டரின் காலிலே விழுந்து, உண்மையைக் கூறி மன்னிப்புக் கோருகிறான். அவர் அவனை மன்னித்துத் தம்மிடமே வைத்துக்கொள்ளுகிறார்.

தங்கமணியின் 'திலீபன்' என்ற கதையில், தான் ஒரு சிறந்த சிற்பி எனக் கர்வம் கொண்டிருக்கும் ஓர் இளஞ்சிற்பி, சூரியநாதர் எனும் வயதான சிற்பியைச் சந்தித்து அவரது திறமையை இழிவு படுத்துகிறான். பிறகு, அவரது 'காவலாளிக் கிழவன்' சிற்பத்தைப் பார்த்து, அதை உயிருள்ள காவலாளி என எண்ணி ஏமாறுகிறான். சிற்பியின் மகளைக் கண்டதும், ஓர் அருமையான சிற்பமென நினைத்து அவள் அருகே செல்கிறான். அவள் சிற்பமல்ல; உயிருள்ள பெண் என அறிந்து திகைத்து நிற்கிறான். அப்போது அம் முதியவர் "திலீபா, உண்மையும் உயிரும் தவழும் மகத்தான சிற்பங்களைச் சிருஷ்டிக்கும் ஒரே ஓர் உன்னதச் சிற்பி, இறைவன்தான். அவனுடைய சிற்பங்களைப் போன்று உயிரற்ற சிற்பங்களைச் சிருஷ்டிக்கும் நாமெல்லாம் போலிச் சிற்பிகளே! நாம் சிருஷ்டிப்பவையெல்லாம் உயிரற்ற உண்மையற்ற போலிச் சிற்பங்களே" என்கிறார்.

சிறந்த இலக்கிய மேதையாகவும் பெரியவர்களுக்காகப் பல கதைகளைப் படைத்தவருமாகிய கு. அழகிரிசாமி சிறுவருக்கும் பல கதைகளை எழுதியிருக்கிறார். அவரது கதைகளில், 'பயந்தாங் கொள்ளி'க் கதை நகைச்சுவை மிக்கது.

பட்டாளத்திலிருந்து சொல்லாமல் கொள்ளாமல் ஊருக்கு ஓடி வந்துவிட்ட நடராஜன், அந்த ஊருக்கு வேறு ஏதோ வேலையாக வந்த போலீஸாரைக் கண்டு பயந்து வீட்டுக்குள் ஓடி, மூலையிலுள்ள சாக்குப் பைக்குள் ஒளிந்துகொள்கிறான். முன்னால் மிளகாய் வற்றல் போட்டு வைக்கப்பட்டிருந்த சாக்குப் பையாக அது இருந்ததால், அதற்குள்ளே நடராஜனால் இருக்க முடியவில்லை. கண்களில் நீர் வழிய, உடம்பெல்லாம் எரிய, தும்மல் தொடர்ந்துவர அவன் படும் தொல்லைகளை வேடிக்கையாகக் கூறுகிறது இக் கதை. அழகிரிசாமியின் கதைகளில் பெரும்பாலானவை பெரியவர்களையே கதாபாத்திரங்களாகக் கொண்டவை.

அக்காலத்தில் நடந்த வானர சேனை, பாலர் மலர், கல்கண்டு ஆகிய மூன்று பத்திரிகைகளிலும் கதைப் போட்டிகளில் பரிசு பெற்றவர் கே. கண்ணுசாமி. அவர் எழுதிய கதைகளில் 'அதிர்ஷ்டம் யாருக்கு?' என்பது திடீர்த் திருப்பமுள்ள கதை.

மரக்கிளையில் ஊஞ்சலாடிக்கொண்டிருந்த சரசா, கிளை முறிந்து கீழே விழுந்து கால் சுளுக்கிக்கொண்டதால், நொண்டி நொண்டி

நடக்கிருள். டாக்டர் 'பார்த்தும் சரியாகவில்லை. ஒரு நாள் அண்ணனைத் துரத்திக்கொண்டு நொண்டி நொண்டி ஓடி வந்த அவள்மீது, பாலு என்னும் சிறுவன் சைக்கிளை ஏற்றிவிடுகிருன். கீழே விழுந்த சரஸாவின் சுளுக்கியிருந்த காலில், சுளுக்கியிருந்த இடத்திலே சைக்கிள் ஏறியதால், கால் முன்போல் சரியாகிவிடு கிறது.

ஓ ஹென்றியைப் போல், எதிர்பாராத முடிவுகளைக் கண்ணு சாமியின் கதைகளிலும் காணலாம்.

தணிகை உலகநாதனின் சிறுகதைகளில் மிகவும் குறிப்பிடத் தக்கது 'கிளிக்கு விடுதலை' என்ற கதை.

அக்காளும் அண்ணனும் எவ்வளவோ சொல்லியும் கேளாமல் கதிர்வேலன் என்ற சிறுவன் ஒரு கிளியைப் பிடித்துவந்து கூட்டில் அடைத்து வைக்கிருன். ஒருநாள் கதிர்வேலன் அறையில் தூங்கும் போது, அண்ணன் கதவைப் பூட்டிச் சாவியுடன் வெளியேறிவிடு கிருன் தூங்கி எழுந்த கதிர்வேலன், கதவைத் திறக்க முடியாமல் கத்துகிருன்; அழுகிருன். "தலை வலிக்கிறதே!" என்கிருன் "தலைவலி மருந்து தருகிறேன்' என்கிருள் அக்காள். தாகத்திற்குத் தண்ணீரும், பசிக்கு உணவும் தருகிறேன் என்று அக்காள் கூறியும் அவன் கேட் கவேயில்லை. "நண்பர்களுடன் விளையாடவேண்டாமா? என்னை அடைத்து வைக்காதீர்கள்" என்கிருன்.

"உன்னைப் போலத்தானே அந்தக் கிளியும் அடைபட்டு வாடு கிறது. பாலும் பழமும் கொடுத்தால் போதுமா? சுதந்திரமாக மற்றப் பறவைகளுடன் சேர்ந்து பறக்கவேண்டாமா?" என்று கேட்டதும், அவன் மனம் மாறுகிறது. அண்ணு கதவைத் திறந் ததும், அவன் கூண்டைத் திறந்து கிளியைப் பறக்கவிடுகிருன்.

குழந்தைகளுக்கு விடுதலை வேட்கையை ஊட்டவும், உயிர் களிடத்தில் அன்பு வேணும் எனும் உண்மையை உணர்த்தவும் துணைபுரியும் இக்கதை இடம் பெற்றுள்ள 'நல்ல கதைகள்' எனும் நூல் தமிழக அரசின் பரிசு பெற்றது.

கால் நூற்றுண்டுக்கும் மேலாகக் குழந்தைகளுக்கு எழுதிவரும் சௌந்தரின் 'நல்ல கைகள்' என்பது குறிப்பிடத்தக்கதொரு கதை. இது இந்திய அரசினர் பரிசு பெற்றது.

எந்த மாணவி தன் கைகளை மிகவும் அழகாக அலங்கரித்துக் கொண்டு வருகிருளோ அவளுக்குப் பரிசு தருவதாகப் பள்ளியில் அறிவிக்கிருர்கள். ஒவ்வொரு மாணவியும் ஒவ்வொரு விதமாக அலங்கரித்துக் கொண்டு வருகிருள். வழியில், வயதான ஓர் அம்மா

தூசி படர்ந்த அடுப்புக்கரி மூட்டையைத் தூக்கித் தன் தலையில் வைக்க உதவுமாறு ஒவ்வொருவரையும் கேட்கிறாள். எவரும் உதவ முன்வராதபோது, எழிலரசி என்ற மாணவி அவளுக்கு உதவுகிறாள். மருதாணி வைத்துக்கொண்டிருந்த தன் கைகள் கருநிறமாக மாறியதையும், தான் கைகளுக்குச் செய்துகொண்டிருந்த ஒப்பனைகள் கலைந்து போனதையும், அவள் பொருட்படுத்தவில்லை. போட்டியில் மிக அழகாக அலங்காரம் செய்து கொண்டுவந்த கைகளுக்குப் பரிசு கிடைக்கவில்லை. 'ஒருவருக்கு உதவி செய்ததன் மூலம் கருமை படர்ந்த கைகளுக்கே பரிசு!' எனக் கூறி எழிலரசிக்கே பரிசை வழங்குகிறார் நடுவர்.

பிறர்க்குதவும் பெருங்குணத்தை அழகாகச் சித்திரிக்கிறது இக்கதை.

பல நிலைக்களன்களைக் கொண்டு, சிறுகதைகளை எழுதி வெற்றி பெற்ற பூவண்ணனின் 'பொல்லாத குண்டு' என்னும் கதை மிகச் சிறந்த கதைகளுள் ஒன்று.

தன் தந்தையாகிய விஞ்ஞானி விக்டர், ஒரு பொல்லாத குண்டைக் கண்டுபிடிக்கிறார். ஒரு நாட்டையே நொடியில் அழிக்க வல்லது அக்குண்டு. புகழை நினைத்துத் தந்தை மகிழ்ச்சியடையும் போது, 'ஐயோ, இக்குண்டுக்கு மனித குலம் இரையாகப் போகிறதே' என்று கவலைப்படுகிறான் மகன். அந்தக் குண்டின் கண்டுபிடிப்பைப் பற்றிய குறிப்புக்களை அடியோடு அழித்துவிடுகிறான். அதன்மூலம், ஒரு பெரும் ஆபத்தைத் தடுக்கிறான்.

உயிரோட்டமுள்ள நடையில் எழுதப்பெற்றுள்ளது இக்கதை.

விஞ்ஞான உணர்வுகளை இளம் நெஞ்சங்களில் ஊட்டவல்ல கதைகளையும், நம் நாட்டுப் புராதனக் கலைகளான 'புரவி நாட்டியம்' போன்றவற்றைப் பேணிக்காக்க வேண்டுமென்ற கருத்தினை வலியுறுத்தும் கதைகளையும் கொண்டது, வெ. நல்லதம்பியின் 'புதுமைக் கதைகள்' என்ற நூல்.

நேதாஜி படையில் சேர்ந்து பணியாற்றிய கேப்டன் பெருமாள் எழுதிய 'வீரன் பாபு' என்னும் கதை, தேசபக்தியை ஊட்டும் சிறந்த ஒரு கதை. சிறுவன் பாபு பாலர் சேனையில் சேர்ந்து நம் நாடு விடுதலை அடையவேண்டுமென்ற ஆர்வமுடன் 174-வது கொரில்லாப் படைத்தலைவருக்கு உதவியாகச் செல்கிறான்.

173-வது படைத் தலைவரிடம் ஒரு தகவலை அறிந்து வரச்சென்ற அவன், திரும்பி வரும்போது, எதிரிகளின் ஒற்றர்கள் கண்ணில் பட்டுவிடுகிறான். அவர்கள் பாபுவை நோக்கிச் சுடுகிறார்கள். குண்டு

பாபுவின் காலிலும், தோளிலும் பாய்ந்த நிலையிலும், அவன் ஊர்ந்து சென்று தலைவனிடம் தகவலைக் கூறிய பின் அங்கேயே தரையில் வீழ்ந்துவிடுகிறான். சாகும் தறுவாயிலும் "என்னால் முடிந்ததைச் செய்துவிட்டேன். இந்தியா சுதந்திரம் அடையும்வரை விடாமல் போர் செய்யுங்கள். ஜெய் ஹிந்த்! நேதாஜிக்கு ஜே!" என்று முழக்க மிட்டுவிட்டு வீர சுவர்க்கம் அடைகிறான்.

புவனை கலைச்செழியனின் 'என் தம்பி', பூவண்ணனின் 'குறுக்கு வழி' ஆகிய கதைகள் கதாபாத்திரங்களே கதையைக் கூறுவனபோல் அமைந்துள்ளன.

நெ. சி. தெய்வசிகாமணியின் 'அப்பாவும் மகனும்', ஜெ. எத்தி ராஜனின் 'பிறந்த நாள் பரிசு'—இரண்டிலும் கடிதங்கள் எழுது வதன் மூலமே கதைகள் வளர்ந்துள்ளன. ஜெ. எத்திராஜனின் மற்றொரு கதையான 'நொண்டிக் கன்று' என்ற கதையில் நொண்டிக் கன்றும், சுருமீன் என்பவர் எழுதிய 'ஏழாவது பிளாட்பாரம்' என்ற கதையில் பிளாட்பாரமும், உடுமலை பொன்னுசாமியின் 'வேலனின் சேவ'லில், சேவலும் தாங்களே கதை கூறுவனபோல் அமைந் துள்ளன.

பூவண்ணனின் 'காந்தி மொழிக் கதைகள்' (இரு நூல்கள்) வி. எஸ். மணியின் 'சரித்திரப் புகழ் பெற்ற சிறுவர்கள்', செந்துறை முத்துவின் 'சிறுவர் போர்க் கதைகள்' ஆகியவை சிறுவருக்கு மிகவும் பயன் தரும் புத்தகங்கள்.

நாக முத்தையாவின் 'பெரியோர் சொன்ன கதைகள்', தமிழ் முடியின் 'மேதைகள் சொன்ன நீதிக் கதைகள்', இராமகிருஷ்ண பரமஹம்ஸரின் உபதேசக் கதைகளைத் தழுவி ர. அய்யாசாமி எழுதிய 'கிணற்றுத் தவளை', கல்வி கோபாலகிருஷ்ணன் தொகுத்த 'பாலர் கதைக் களஞ்சியம்' ஆகியவை குறிப்பிடத்தக்க நூல்கள்.

பி.ஏ. தாஸின் 'ஏசுநாதரின் கதைகள்', ரஹ்மானின் 'இஸ்லாமிய வரலாற்றுக் கதைகள்', சிவனடியானின் 'சிறுவர் பக்திக் கதைகள்' போன்றவை ஒவ்வொரு மதத்திலுமுள்ள நல்ல கொள்கைகளை எடுத்துக் காட்ட உதவுகின்றன.

நம் குழந்தைகளுக்கு நாடோடிக் கதைகளையும், இதிகாசக் கதை களையும், புராணக் கதைகளையும் கூறுவோர் மிகக் குறைவு. அக் குறையை ஓரளவு நிறைவு செய்வதற்கேற்ற வகையில் பல நூல்கள் வெளி வந்துள்ளன.

1943-ல் புத்தனேரி ரா. சுப்பிரமணியம் தொகுத்த 'தமிழ் நாட்டுச் சிறுகதைகள்' என்னும் நூலையடுத்துப் பழங்காலக் கதைத் தொகுப்பு நூல்கள் பலவற்றைக் கழகம் வெளியிட்டுள்ளது.

தமது 'அணில்' இதழில் வேண்டுகோள் விடுத்து வை. கோவிந்தன் பாட்டி காலத்துப் பழங்கதைகள் பலவற்றை நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் திரட்டினர். அவற்றில் சில புத்தக உருப்பெற்றுள்ளன. அவரைப் போலவே என் கே. வேலன், அ லெ. நடராசன், ராஜம், ர. சண்முகம், நெ சி. தெய்வசிகாமணி, ப. ராமசாமி, எல்லார்வி முதலியோர் பழங்காலக் கதைகளையும், தம்பி சீனிவாசன், வாண்டுமாமா, ர. அய்யாசாமி, நாகமுத்தையா, தங்கமணி போன்றோர் வெளி நாட்டுக் கதைகளையும் வெளியிட்டுள்ளனர்.

இராமாயணம், 'மகாபாரதம், பாகவதம், பெரிய புராணம் ஆகியவற்றிலுள்ள கதைகளை எச். வைத்தியநாதன், பூவை அமுதன், கி. மா. பக்தவத்சலம், தே. ப. பெருமாள், வலம்புரி அண்ணாமலை முதலியோரும், சேரர், சோழர், பாண்டியர் கதைகளை அரசு மணியும் ஆத்திசூடிக் கதைகளை எஸ். ரங்கநாயகியும், கொழும்பு நா. மகேசனும், பாரதி ஆத்திசூடிக் கதைகளைக் குயிலி ராஜேஸ்வரியும், நல்வழிக் கதைகளைத் தி. தண்டபாணியும், திருக்குறள் கதைகளைப் பூவண்ணன், சொர்ணம், கல்வி கோபாலகிருஷ்ணன் ஆகியோரும், உலக நீதிக் கதைகளை ரிப்பன் ராமுவும், ஈசாப் கதைகளை அ. லெ. நடராசன், வை. கோவிந்தன், எச். ராமச்சந்திரன், வி. எஸ். வெங்கடேசன் ஆகியோரும், பஞ்ச தந்திரக் கதைகளை வி. எச். சுப்பிரமணிய சாஸ்திரியும் அ. லெ. நடராசனும், காரணக் கதைகளைப் ப. குணசேகரும், நன்னெறி புகட்டும் நகைச்சுவைக் கதைகளை நாக சண்முகமும், பழமொழிக் கதைகளைக் க. இனியனும் எல்லார்வியும் வெளியிட்டுள்ளார்கள்.

# நாவல்கள்

சிறுவர்களுக்கான நெடுங்கதைகள் அல்லது நாவல்கள் 20 ஆண்டுகளுக்கு முன்பு மிகவும் குறைவாகவே இருந்தன. இப்போது நூற்றுக்கு மேற்பட்ட நாவல்கள் வெளிவந்திருக்கின்றன. அந்நாவல்களில் பல பத்திரிகைகளில் வெளி வந்தவை. சில வானொலியில் வாரந்தோறும் சொல்லப்பட்டவை. மற்றும் சில, குழந்தை எழுத்தாளர் சங்கப் போட்டிகளுக்காக எழுதப்பெற்றவை. வேறு சில, பிற மொழிகளிலிருந்து பெயர்க்கப்பெற்றவை அல்லது தழுவி எழுதப் பெற்றவை.

இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு பெஸ்கி என்னும் வீரமாமுனிவரால் எழுதப்பெற்ற 'பரமார்த்த குரு கதை'யில் பரமார்த்த குருவின் ஐந்து சீடர்களும் செய்கின்ற செயல்கள் யாவும் நகைச் சுவை ததும்ப இருப்பதால், பெரியவர்களையும், சிறுவர்களையும் அது பெரிதும் கவர்ந்துள்ளது. பெரியவர்களைக் காட்டிலும், சிறுவர்கள் அக்கதையை விரும்பிப் படிக்கின்றனர். இதைச் சிறுவருக்கான முதல் நெடுங்கதையாகக் கொள்ளலாமெனச் சிலர் கருதுகின்றனர்.

சிறுவர் நாவல்கள் நிறைய வெளிவர வேண்டுமென்ற நோக்குடன், நாவல் போட்டிகள் நடத்திப் பரிசுகள் வழங்கி வந்தது 'கண்ணன்' பத்திரிகை. பரிசு பெற்ற நாவல்கள் கண்ணனில் தொடர் கதைகளாக வெளிவந்து, பின்னர்ப் புத்தக வடிவம் பெற்றன.

1948-இல் அணில் வார இதழில் தமிழ்வாணன் எழுதிய 'பயம்மா இருக்கே!' நாவலில், 'பிளாக் மார்க்கெட் பெருச்சாளிகளை ஒழிக்கணும்; பணத் திமிங்கிலங்களைக் கலக்கணும்' என்ற நோக்குடன் முகமூடி அணிந்து ஒரு தலைமை ஆசிரியரும், சில மாணவர்களும் செய்கின்ற சாகசச் செயல்களைக் காணலாம். துப்பாக்கி, முகமூடி, மண்டையோடு எல்லாம் வருகின்ற இக்கதையில், கையாளப் பட்டுள்ள வேகமும் விறுவிறுப்பும் நிறைந்த நடை, அக்காலச் சிறுவரைப் பெரிதும் கவர்ந்தது.

"ஒரே இருட்டு! கருக்கிருட்டு! கும்மிருட்டு!"

"அம்மாவின் தலை சுற்றியது; கிர், கிர், கிர் என்று
சுற்றியது; சக்கரம் மாதிரி சுற்றியது!"

இது தமிழ்வாணனின் நடை.

சிறுவர்க்கான நாவல்களை எழுதியவர்களில் தங்கமணி, நெ. சி. தெய்வசிகாமணி, பூவண்ணன், ஆர்வி, தூரன், வாண்டுமாமா, ரேவதி போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

பூவண்ணன் 'பூஞ்சோலை' யில் எழுதிய 'பாபு சர்க்கஸ்', ஆனந்த விகடனில் எழுதிய 'ஆலம் விழுது' இரண்டும் மிக நல்ல வரவேற்பைப் பெற்றன.

வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்ட முடியாமல் பெற்றோர்கள் திணறுகிறார்கள். பிள்ளைகளோ தங்களுக்குப் போதுமான வசதிகள் செய்து தரவில்லை என்று குறைபடுகிறார்கள். குடும்பச் செலவைப் பிள்ளைகள் அறியவேண்டும் என்பதோடு, குடும்பப் பொறுப்பை அவர்களும் ஓரளவு பகிர்ந்துகொள்ள வேண்டும் என்ற நோக்குடன் எழுதப்பெற்றது 'ஆலம் விழுது' என்னும் நாவல்.

இது தமிழ், கன்னடம், இந்தி ஆகிய மொழிகளில் திரைப்பட மாக வந்து 1970-ஆம் ஆண்டின் 'சிறந்த திரைப்படக் கதாசிரியர்' என்ற விருதையும், ஐயாயிர ரூபாய்ப் பரிசையும் ஆசிரியருக்குப் பெற்றுத் தந்தது. கன்னடத்திலும் மொழி பெயர்க்கப்பெற்றது இந்நாவல்.

"அன்பினால் ஆகாதது ஒன்றுமில்லை; அன்பை நாம் எங்கு செலுத்துகிறோமோ அங்கிருந்து நமக்கு அன்பு கிடைக்கும்" என்ற கருத்துக்களை எடுத்துச் சொல்வது பூவண்ணனின் மற்றொரு நாவ லான 'காவேரியின் அன்பு'. 'இன்று வைரம்' என்ற தலைப்பில் இதை நாடகமாக்கிச் சென்னை வானொலி ஒலி பரப்பியது

இந்திய அரசினரின் சிறுவர் இலக்கியப் பரிசைப்பெற்ற இக் கதையும் 'அன்பின் அலைகள்' என்ற திரைப்படமாக வந்தது. சிறந்த குழந்தைப்படக் கதாசிரியர் என்ற தமிழக அரசின் விருதும், தங்கப் பதக்கமும் பூவண்ணனுக்குக் கிடைத்தன.

இவரது 'மகன் புகழ்' என்ற நாவல், பெற்றோரின் செல்வத்தா லும் செல்வாக்காலும் மகன் புகழ் பெறுவது உண்மையான புகழன்று என்பதை உணர்த்தி, ஒவ்வொருவரும் சொந்த முயற்சியால் புகழ் ஈட்ட வேண்டுமென்பதை வலியுறுத்துகிறது. இன்னுமொரு குறிப் பிடத்தக்க நாவலான 'மரகதக் கண்ணன்', பார்வை இழந்த சிறு வனைக் கதாநாயகனாக வைத்து, உறுப்பு ஊனமானாலும் உழைப் பாலும் அறிவாலும் உயரலாம் என்னும் கருத்தைக் கூறுகிறது.

கதாபாத்திரங்கள் தங்கள் கதையைத் தாங்களே கூறும் பாணியில் அமைந்த 'பாண்டி முத்து' என்னும் இவரது நாவல், நல்லவன் சேர்க்கையால் திருடன்கூட நல்லவனாகலாம் என்பதை விளக்குகிறது.

சிறுவருக்காகப் பூவண்ணன் எழுதிய 'புலவர் மகன்', 'ஆளப் பிறந்தவன்', 'பல்லவ மன்னன்'—மூன்றும் ஆதாரப் பூர்வமான சரித்திர அடிப்படையில் எழுதப்பெற்றவை.

இவற்றில் 'புலவர் மகன்' இந்திய அரசின் பரிசு பெற்றது.

புலவர் மகனுன நம்பி, சிறுவயதிலே போர்த் தொழிலில் ஆர்வங்கொண்டு, தன் வயதொத்த பாண்டிய மன்னனுன நெடுஞ் செழியனைச் சந்தித்து, அவனது நண்பனுகி, அவனுக்குத் துணை நின்று, சேர சோழர்களை வெல்லப் பலவகையிலும் உதவி, மாவீரன் எனப் பெயரெடுக்கிறுன். ஆயினும், அவனது மறைந்த தந்தையாகிய, புலவர் பூங்கண்ணன் விரும்பியதுபோல், அவனைப் புலவனுக்க அவனுடைய தாத்தா பலவகையிலும் முயலுகிறுர். இறுதியில் அவரது ஆசை நிறைவேறுகிறது. நம்பியாக இருந்த அவன், மிகப் பெரும் புலவனுக—குடபுலவியனுர் எனும் பெயருடன் விளங்கி, முப்பது ஆண்டுகள் கழித்து நெடுஞ்செழியனைச் சந்தித்து, பிறகு இருவரும் இணைபிரியாத நண்பர்களாகிறுர்கள்.

"புறநானூற்றில் காணப்படும் குடபுலவியனுரின் இரு பாடல்கள், இரண்டாயிரம் ஆண்டுகளாகியும் அவரது பெருமையை அறிவித்துக்கொண்டிருக்கின்றன. அவைகளுக்கு அழிவே இல்லை" என்று கூறுகிறுர் நூலாசிரியர்.

பெரியவர்களுக்காக எழுதிப் பெரும் புகழ் பெற்ற அகிலன், 'தங்க நகரம்' என்ருெரு நெடுங்கதையைச் சிறுவருக்காகத் தந்துள்ளார்.

அரண்மனையையும் தோட்டத்தையும் தவிர வெளி உலகமே தெரியாது வாழ்ந்த தங்க நகரத்து அரசனின் மகன் சந்திரனும், மகள் மல்லிகாவும் ஒரு நாள் காரிலே ஊரைச் சுற்றிப் பார்த்த போது, ஏழைகள் படும் இன்னல்களைக் கண்டு வருந்துகிறுர்கள்

மிக விகாரமான குடிசைகளையும், சாக்கடை நாற்றம் பொறுக்க முடியாத இடத்தில் சின்னஞ்சிறு குழந்தைகள் பரட்டைத் தலையுடனும் சூம்பிய கைகளுடனும், ஒட்டிய வயிறுடனும் விளையாடுவதைக் கண்டு, "இவையெல்லாம் நம் ராஜ்யத்துக் குழந்தைகள் தானே! ஏன் இவர்களுக்கு அப்பா ஒன்றும் வாங்கிக் கொடுப்பதில்லை. எனக்கும் மல்லிகாவுக்கும் மாத்திரம் எல்லாம் செய்கிறுரே!" என்று கேட்கிறுன் சந்திரன், மெய்காப்பாளரைப் பார்த்து.

பிறகு, ஒரு நாள் சந்திரனும் மல்லிகாவும் ஏழைக் குழந்தைகள் போல் மாறு வேஷம் போட்டுக்கொண்டு ஊருக்குள் சென்று. அங்கு ஏழைகள் படும் தொல்லைகளையெல்லாம் அறிந்து வருந்துகின்றனர்.

அவர்களது முயற்சியால் தங்க நகரம், உண்மையிலே தங்க நகரமாகிறது. புதுக்கோட்டையிலிருந்து வெளிவந்த 'பாலர் மலர்' எனும் பத்திரிகையில் தொடர்கதையாக வெளியிட வாங்கிய கதை, பாலர் மலர் நின்றதால், வெளிவராதிருந்தது. பிறகு புத்தகமாக வெளிவந்தது. இதன் சிறப்பை அறிந்து, புத்தகமாக வெளிவந்த கதையை மீண்டும் கல்கியிலே வெளியிட்டார்கள் தமிழக அரசின் பரிசு பெற்ற இவரது 'கண்ணுன கண்ணன்' எனும் நெடுங்கதை, சாதியில் தாழ்ந்தவன் என வெறுக்கப்பட்ட கண்ணுசாமியின் தியாகத்தால் தீவிபத்திலிருந்து கிட்டு காப்பாற்றப்படும் உருக்கமான நிகழ்ச்சியைக் கூறுகிறது.

இருபத்திரண்டு ஆண்டுகளாக மிக நல்ல முறையில் நடந்த 'கண்ணன்' பத்திரிகையின் ஆசிரியராயிருந்து பல எழுத்தாளர்களை உருவாக்கிய ஆர்வி எழுதிய 'அசட்டுப் பிச்சு' நகைச்சுவை மிக்க ஒரு நாவல். ஐயாசாமியின் மகன் பிச்சுமணியின் பெயரை எ பி எனச் சுருக்கி, பிறகு எ என்றால் அசடு, பி என்றால் பிச்சு என விரித்து 'அசட்டுப் பிச்சு' எனப் பட்டம் சூட்டுகிறார்கள் அவனது தோழர்கள். காக்கை உட்காரப் பனம்பழம் விழுவதுபோல், பல கொள்ளைகளையும் பக்காத் திருடர்களையும் காணமற்போன ஒரு பெண்ணையும் கண்டு பிடித்து மேலும் மேலும் புகழ் பெறுகிறான் அசட்டுப் பிச்சு.

அசட்டுப் பிச்சுவைப் பற்றி ஆர்வி சொல்லுகிறார் :

"பேரும் புகழும் வந்தால் அசட்டுத்தனத்தை யார் கவனிக்கிறார்கள். அவன் சிரித்தாலே, அதில் ஏதோ அர்த்தம் இருக்கும் என்றார்கள்; அவன் விழித்தால், அதற்கும் ஓர் அர்த்தம் இருக்குமென்று கருதினார்கள். அவன் வாயைத் திறந்து அசட்டுப் பிசட்டு என்று பேசினால் பெரிய ஹாஸ்யமாக எண்ணி ஆரவாரம் செய்தார்கள்."

பெரியவர்களுக்காகத் 'துப்பறியும் சாம்பு'வைத் தேவன் படைத்ததுபோல், சிறுவருக்காக 'அசட்டுப் பிச்சு'வை அழகாகப் படைத்திருக்கிறார் ஆர்வி.

பலவித இன்னல்களுக்கிடையே படித்து முன்னேறும் சிறுவனது கதையான 'லீடர் மணி', பற்பல தொல்லைகளுக்கு ஆளாகிக் கடைசியில் திரைப்பட நட்சத்திரமாகும் பாலு என்ற சிறுவனின் கதையான 'புதிய முகம்', திகைப்பையும் வியப்பையும் ஊட்டும் வண்ணம் சிங்கம், புலி, மோட்டார், கப்பல், மோட்டார்ப் படகு எல்லாம் வருகின்ற துப்பறியும் கதையான 'ஜம்பு' முதலியன 'ஆர்வி' யின் நாவல்களில் குறிப்பிடத்தக்கவை.

'ஜனு' எனும் புனைபெயரில் ஆர்வி எழுதிய 'சந்திரகிரிக் கோட்டை' தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசு பெற்றது. இது சரித்திரக் கதை போன்ற ஒரு கற்பனைக் கதை. கற்பனையாயிருந்தாலும், நம் சரித்திரப் போக்குக்கு ஏற்றவாறு எழுதப் பெற்றுள்ளது. இரட்டையராகப் பிறந்த அரசகுமாரர்களாகிய அமலனும் விமலனும் அவன் மாமனுகிய சந்திரகிரி நாட்டு மன்னன் இறந்ததும், அந்த நாட்டை அடையப் போட்டியிடுகிருர்கள். குதிரைச் சவாரியும் பல பந்தயப் போட்டிகளும் 'அடுத்து என்ன?' என்ற ஆவலைத் தூண்டுகின்றன.

ஆசிரியர் சொல்லுகின்ற முறையால், ஏதோ நேரில் நடப்பதைப் பார்ப்பதுபோல ஒவ்வொரு கட்டமும் இருக்கிறது.

சந்திரகிரிக் கோட்டையைப்போல, நீண்ட காலமாகக் குழந்தைகளுக்கு எழுதிவரும் ஜோதிர்லதா கிரிஜா எழுதிய 'சுவடிகள் சொன்னதில்லை' என்ற கதையும் உண்மையான வரலாற்றுக் கதை அல்ல; ஆயினும், வரலாற்றில் நிகழ்ந்த ஒரு சிறு நிகழ்ச்சியை வைத்து, சரித்திர காலத்துச் சூழ்நிலையும், சரித்திர காலப்பெயர்களும் கொண்ட ஒரு கதையாக இது எழுதப்பெற்றுள்ளது.

ஆழ்கடலில் மீன் பிடிக்கச் சென்ற அப்பாவையும், அண்ணனையும் பறிகொடுத்த மருக்கொழுந்து எனும் சிறுவன், மலைப்பாறைகளுக்கு இடையே அழுகிக்கிடந்த பெண்ணின் பிணத்தைக் கண்டு "ஆ! அம்மா!" என்று அலறுகிருன். பிறகு கவலையுடன் மனம் போனபடி நடந்து, அருகிலுள்ள நகரத்தை அடைந்து, ரிக்ஷாக்காரக் கிழவர் வீட்டிலிருந்துகொண்டு, மிட்டாய் விற்றுப் பிழைக்கிருன். கடைசியில், இறந்ததாக எண்ணிய தன் தாய் இறக்கவில்லை; அண்ணனை எண்ணி எண்ணி அவள் பைத்தியமாக அலைகிருள் என்பதை அறிந்து, அவளைத் தேடிக் கண்டுபிடித்துவிடுகிருன். 'மருக்கொழுந்து' எனும் இந்நாவலின் இடையிடையே சில பாடல்களை ஆசிரியர் சேர்த்திருப்பது மிகவும் பொருத்தமாயுள்ளது. பசியினுல் வாடி வதங்கும் கதாநாயகச் சிறுவனுன மருக்கொழுந்துவிடம் திருடன் இரண்டு ஒற்றை ரூபாய் நோட்டுக் கற்றைகளை எடுத்துக் கொடுத்தபோது, "வேண்டாம், இது திருட்டுப்பணம்" என்று வாங்க மறுத்துச்செல்கிருன், மருக்கொழுந்து. அவன் செல்லும் திசையைப் பார்த்துக்கொண்டே திருடன் சொல்லுகிருன்: "ஹூம், பணத்துக்காகப் பண்பு தவறும் இந்தப் பச்சோந்தி உலகிலே—அடே மருக்கொழுந்து—நீ ஒரு லட்சியப் பூ."

இதேபோல் தன்னை ஆதரித்த ரிக்ஷாக்காரக் கிழவரிடம் "மாட்டை மாடு சுமப்பது கிடையாது; குதிரையைக் குதிரை சுமப்பது கிடையாது; கழுதையைக் கழுதை சுமப்பது கிடையாது.

ஆனால், மனிதன் மனிதனைச் சுமந்து இழுப்பதா? இது எனக்குப் பிடிக்கவில்லை; பிடிக்கவே இல்லை'' என்கிறான் மருக்கொழுந்து.

ஆளை வைத்து ஆள் இழுக்கும் அநாகரிகம் ஒழிய வேண்டுமெனத் தங்கமணி போன்றவர்கள் கண்ட கனவுதான் இப்போது பலித்திருக்கிறது.

'மாற்கு'வின் சுவிசேஷத்தில், ஏசுவின் பின்னால் சென்ற ஒரு சிறுவன், தன்மேல் போர்த்துக்கொண்டிருந்த துப்பட்டியைப் போட்டுவிட்டு நிர்வாணமாக ஓடிவிட்டதாகக் கூறப்பட்டுள்ளதை ஆதாரமாக வைத்து, மேலும் ஆராய்ந்து தங்கமணி எழுதியுள்ள 'ஒரு பூ மலர்கிறது' என்ற நாவலும், கிருஷ்ணதேவராயரைப் பற்றிய உணர்ச்சி ததும்பும் உரையாடல்களுடன் கூடிய 'மானங்காத்த மகன்' என்ற நாவலும் தங்கமணிக்குப் புகழ்தேடித் தரும் நாவல்கள்.

நெ. சி. தெய்வசிகாமணியின் நாவல்களில், 'பரமன் அருள்' பள்ளி மாணவர்களின் சூழ்நிலையை வைத்து எழுதப் பெற்றது. இடையிடையே பழைய வேடிக்கைக் கதைகளை அத்தியாயங்களின் தொடக்கத்தில் கூறி, கதையுடன் தொடர்புபடுத்திச் செல்லும் உத்தி நன்றாயுள்ளது.

பரமன் என்ற சிறுவனின் அறிவு நுட்பத்தையும், பிறர்க்குதவும் பெருங்குணத்தையும், விடா முயற்சியையும், அஞ்சாநெஞ்சத்தையும் எடுத்துக் காட்டுகிறது இக்கதை. பரமனால், அவனுடைய நண்பன் வாசுவின், காணாமல் போன தந்தை திரும்பக் கிடைக்கிறார்; கவண் கல்லை வைத்துக்கொண்டு பறவைகளுக்கும், மிருகங்களுக்கும் சில சமயங்களில் மனிதர்களுக்கும்கூடத் தொல்லை கொடுத்து வந்த 'கவண் கல் கந்தசாமி' மனம் திருந்தி நல்ல மாணவனாகவும், கெட்டிக்காரனாகவும் மாறிப் பள்ளியில் பரிசும் பெறுகிறான். எதையும் சுவையாகவும் நகைச்சுவையோடும் எழுதவல்ல தெய்வசிகாமணியின் 'பளிங்கு மண்டபம்' என்ற நாவலும் சிறந்த நாவல்களில் ஒன்றாகத் திகழ்கிறது.

குழந்தை இலக்கிய வளர்ச்சி கருதிக் கடந்த கால் நூற்றாண்டாக இடையறாது தொண்டாற்றிவரும் 'ரேவதி', வரலாற்றுக் கதைகள் எழுதுவதில் வல்லவர். கடல் கொந்தளிப்பைக் கருவாக வைத்து, ஆவலைத் தூண்டும் பல அற்புத நிகழ்ச்சிகளை அழகாகக் கோத்து, 'கார்வண்ணன் கண்ட கனவு' எனும் நாவலை உருவாக்கியிருக்கிறார். மறைந்த லெமூரியாக் கண்டம், கபாடபுரத்தின் அழிவு, கடைச் சங்கத்தின் தொடக்கம் ஆகியவற்றைப் பின்னணியாய்க்கொண்டு, சிறுவருக்கு ஏற்ற முறையில் புனையப் பெற்ற நாவல் இது.

பல்லவர்களின் முன்னேற்றைப் பற்றிச் சிறுவர்களுக்காக எழுதப் பெற்று, 'கண்ணன்' நாவல் போட்டியில் பரிசு பெற்ற 'பகையை வென்ற பல்லவன்' என்ற நாவலும், குழந்தை எழுத்தாளர் சங்க ஏவி எம் அறக்கட்டளைப் பரிசு பெற்ற, பிற்காலப் பாண்டியர்களின் எழுச்சியைப் பின்னணியாகக்கொண்ட 'பாண்டிய பரதன்' என்ற நாவலும் ரேவதியின் சிறந்த சரித்திர நாவல்கள்.

காந்தியடிகளின் சத்தியாக்கிரக இயக்கம் தீண்டாமை ஒழிப்பு இயக்கம் ஆகியவற்றைப் பின்னணியாகக்கொண்டு சிறுவருக்கு எழுதப்பெற்ற நாவலைக் காண்பது அரிது. காந்தியடிகள் தமிழகத்திற்கு வந்தபோது, அரிஜனங்களுக்குக் குற்றால அருவியில் குளிக்க உரிமையில்லை என்பதை அறிந்து, 'அவர்களுக்கு மறுக்கப்பட்ட உரிமை எனக்குத் தேவையில்லை' எனக் கூறி, அருவியில் குளிக்காமலே திரும்பிவிடுகிறார். இதை மையமாக வைத்து ரேவதி எழுதிய நாவல் தான் 'கொடிகட்ட வந்தவன்' என்பது.

> "உலகத்தையே உய்விக்க வந்த மகான் என்னிடத்தில் நீராடி என்னைப் புனிதப்படுத்தப்போகிறார் என்று பெருமைப்பட்டேனே, எனக்கு அந்தப் பேறு கிடைக்காமல் போய்விட்டதே!"

என்று அப்போது குற்றால அருவி கண்ணீர் விட்டதாம்!

ரேவதியின் கற்பனைக்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

ராஜியின் 'தங்க மாம்பழம்' நாவல், மந்திர தந்திரங்களும், மாயாஜாலங்களும், நம்ப முடியாத சம்பவங்களும் கொண்டிருந்தாலும், குழந்தைகள் மிகுந்த ஆர்வத்துடன் அதைப் படித்து மகிழ்கிறார்கள். 'கல்கி' யில் தொடர்கதையாக வந்த இக்கதையில், மாயக் கிழவியும், பொல்லாத அரசனும் பிரபாகரனையும், அவன் தங்கை உமாவையும் எப்படி எப்படியெல்லாம் கொடுமைப்படுத்துகிறார்கள், அவர்களிடமிருந்து எப்படித் தப்பித்துக்கொள்ளுகிறார்கள் கடைசியில் கல்லறைத் தீவிலே சிலையாய்க் கிடந்த பெற்றோருக்கு எவ்வாறு உயிர் கொடுக்கிறார்கள் என்பவற்றையெல்லாம் தெளிவான தமிழில், எளிய சொற்களில் எழுதியிருக்கிறார் ராஜி.

காட்டு மக்களுள் ஒருவனான சீனன் என்ற சிறுவன், சிறுத்தைக் குட்டியை வளர்த்து அதனுடன் சேர்ந்து புரிந்த சாகசங்களைக் கூறுவது ராஜியின் மற்றொரு நாவலான 'சிறுத்தைச் சீனன்'.

ஜேக் லண்டன் எழுதிய 'Call of the wild' என்ற புகழ்பெற்ற நாவலை 'கானகத்தின் குரல்' என்ற பெயரில் பெரியவர்களுக்காகத்

தமிழிலே தந்திருக்கிறார் தூரன். அக்கதையில், செல்வர் ஒருவரின் வீட்டிலே வளர்ந்த நாய் எப்படியோ தங்கம் தேடுகின்ற கூட்டத்தாரிடம் அகப்பட்டு, பிறகு பனிக்கட்டிப் பாலைவனத்தில் வாழ்ந்த ஓநாய்களுடன் சண்டையிட்டு, அவற்றை வென்று, ஓநாய்க் கூட்டத்திற்கே தலைமை தாங்குகிறது. நகரத்தில் வாழ்ந்த நாய், கடைசியில் காட்டில் வாழும் ஒரு கொடிய மிருகமாக மாறுகிறது. ஆனால், தூரனின் 'சூரப்புலி என்ற நாவலில் மனிதரை வெறுத்துக் காட்டு விலங்காக வாழ்ந்த நாய் ஒரு சாதுவின் அன்புக்கு அடிமையாகி, அவருடனே வாழ்ந்து, தன்னையும் அறியாமலே பக்குவம் அடைகிறது.

வானொலியில் தொடர்கதையாக ஒலிபரப்பப்பட்ட தூரனின் 'மாயக் கள்ளன்' என்ற நாவலில், ஆத்மரங்கன் என்னும் சிறுவன் மலையுச்சியிலிருக்கும் தன் பெற்றோரைக் காணச் செல்கிறான். வழியிலே வந்த மாயக்கள்ளன் அவனை வசப்படுத்திச் சுவையுள்ள கதைகளைச் சொல்லிப் படிதோறும் உறங்க வைத்துவிடுகிறான். இறைவனைக் காண விரும்பி முன்னேறும் ஆன்மாவை மயங்க வைப்பது மாயைதானே! இதை விளக்கும் இந்நாவல் பெரியோர், சிறுவர் இருவருக்கும் பயன்படும்படி இருபொருள் கொண்டதாக அமைந்துள்ளது. விக்கிரமாதித்தன் கதைகளைப் போன்ற அமைப்பு உடையது.

'கொல்லிமலைக் குள்ளன்' என்ற தூரனின் நாவலில், தங்கமணி, அவன் தங்கை கண்ணகி, அத்தை மகன் சுந்தரம், ஜின்கா என்ற குரங்கு ஆகிய பாத்திரங்கள் வருகின்றன. இதே பாத்திரங்களை வைத்து, இவர் 'சங்ககிரிக்கோட்டை' என்ற நாவலையும் எழுதியிருக்கிறார். இரண்டும் வீர தீர சாகசச் செயல்கள் நிறைந்த விறுவிறுப்பான கதைகள்.

பெரியவர்களுக்காகவும் சிறுவர்களுக்காகவும், இனிய கதைகளை எழுதும் 'இனியவன்' தந்த நாவல் 'பொன் மனம்'. ஒரே மாதிரித் தோற்றங்கொண்ட இரு சிறுவர்களை வைத்துப் புனையப்பட்ட நாவல் இது. நல்லவனாகச் செல்வமும், கெட்டவனாக ஆனந்தனும் இக்கதையில் வந்து, பல குழப்பங்களை உண்டாக்கி, இறுதியில் மனமாற்றத்தால் இருவரும் அண்ணனும் தம்பியுமாகின்றனர். எதிர்பாராத பல திடீர்த் திருப்பங்கள் கொண்ட இந்நாவல் 'கண்ணன்' நாவல் போட்டியில் பரிசு பெற்றது. இந்நாவலில் பல இடங்களில் உவமை நயத்தைக் காணலாம்.

"அவனுடைய இதயம், குறும்புக்காரப் பையனிடம்
சிக்கிய புறாவைப்போல் துடிக்கிறது."

"செல்வத்தின் இளம்உள்ளம் ஏங்கி ஏங்கி அழுதது.
புகை நடுவினில் தீயைப் போன்ற அழுகை அது.''

'வாண்டுமாமா' கடந்த முப்பது ஆண்டுகளாகக் குழந்தைகளுக்கு எழுதி வருபவர்; சிறுவருக்காகப் பல பத்திரிகைகளை நடத்தியவர். மிருகங்களை வைத்து அவர் எழுதியுள்ள நாவல்களில் 'காட்டுச் சிறுவன் கந்தன்', 'அதிசய நாய்'—இரண்டிலும் மிருகங்களின் பல்வேறு குணநலன்கள் கதையோடு பின்னி எழுதப்பட்டுள்ளன

பல ஆண்டுகளுக்கு முன்பு ஓநாய்ச் சிறுவன் ஒருவனைப்பற்றிய செய்திகள் பரபரப்பாகப் பத்திரிகைகளில் வெளிவந்தன. மிருகங்களிடையே வளர்ந்த, மிருகங்களாலே வளர்க்கப்பட்ட மனிதக் குழந்தைகளைப் பற்றிய செய்திகளை இப்போதும் சில சமயங்களில் காண்கிறோம். அப்படிக் காட்டிலே வளர்ந்து, பிராணிகளின் உள்ளத்தைப் புரிந்துகொண்டு, அவைகளை அன்பினால் அடக்கித் தோழமை கொண்டு வாழும் சிறுவன் கந்தன், நாட்டிற்குள் நுழைகிறான். அங்கு மனிதர்களின் பல தீய குணங்களைக் கண்டு மனம் வெதும்புகிறான். பஞ்சவர்ணக்கிளி, வெள்ளெலிக்குட்டிகள் விரியன் பாம்புக்குட்டி எல்லாம் அவனுக்கு உற்ற தோழர்களாகின்றன. டார்ஜான் கதைப் பாணியில் எழுதப்பட்ட 'காட்டுச் சிறுவன் கந்தன்' என்னும் இந்நாவல், விறுவிறுப்பும் வேகமும் கொண்டது.

எளிய முறையில் அறிவைப் பயன்படுத்தித் துப்பறிகின்ற கதைகளாக இவரது 'அதிசய வீணை', 'மூன்று நண்பர்கள்', 'மந்திரச் சிலை' -மூன்றும் விளங்குகின்றன. இவரது 'பச்சைப்புகை', 'மந்திரக் கம்பளம்'—இரண்டும் நகைச்சுவை கலந்த மந்திர மாயாஜாலக் கதைகள்.

அம்மாவை இழந்த முத்து, முரட்டுத்தனமும் பிடிவாதமும் கொண்டவனாக வளருகிறான். அன்புள்ளம் கொண்ட சித்தி அவனுக்கு வாய்த்தும்கூட அவன் அவளை வெறுக்கிறான். வீட்டை விட்டு ஓடிப் பல தொல்லைகளை அனுபவித்து, வீணாகத் திருட்டுப் பட்டமும் பெற்றுச் சீர்திருத்தப் பள்ளியில் ஆறு மாதம் இருந்து வீடு திரும்புகிறான். தான் ஓடிப்போன கவலையில் சித்தி இறந்ததும், அப்பா படுத்த படுக்கையானதும் அவனை வாட்டுகின்றன. மூட்டை தூக்கியாவது அப்பாவையும் அன்புமிக்க அக்காளையும் காப்பாற்ற முடிவு செய்கிறான். கதையில் வரும் அவனுடைய அக்காளான இந்து, தன் தம்பிகளுக்காகச் செய்யும் தியாகம் போற்றுதற்குரியது.

சித்திகளிலும் நல்லவர்கள் உண்டு என்பதையும், அன்பின் பெருமையையும் விளக்கும் 'அன்பின் வலிமை' என்ற இந்நாவல்,

பெரியவர்களுக்காகப் பல கதைகள் எழுதிப் புகழ் பெற்றுச் சிறுவருக்கும் பல நூல்களைப் படைத்த கே. ஜெயலட்சுமி எழுதியது.

பாரதத்தின் ஒருமைப்பாட்டு உணர்வைச் சிறுவர் நெஞ்சங்களில் ஊட்ட வல்லது பூவை அமுதனின் 'பலே சந்துரு' என்னும் நாவல்.

பம்பாயில் வெற்றிலைக் கடை வைத்திருக்கும் ஒரு தமிழர், சிவசேனையின் வெறிச் செயலால் உயிரிழக்க நேரிடுகின்ற நிகழ்ச்சியையும், இறந்த அவருடைய மகன் ஒரு வடஇந்தியச் சிறுவனுடன் நட்புக்கொண்டதன் விளைவாக நடைபெறும் சில சம்பவங்களையும் அடிப்படையாக வைத்து எழுதப்பெற்றது இந்நாவல். நட்பின் சிறப்பையும், குறுகிய நோக்கமுள்ள 'சிவசேனை' போன்ற இயக்கங்களால் நாட்டில் ஏற்படும் சீர்கேடுகளையும் எடுத்துக் கூறும் இக்கதை, இக்கால நிகழ்ச்சிகளையும் வைத்துச் சிறுவர் நாவல் எழுத முடியும் என்பதற்குச் சான்றாக விளங்குகிறது.

ஜெ. எத்திராஜனின் 'நீல மலை மேலே' என்ற நாவல், முருகன் என்னும் சிறுவனின் தூய அன்பையும், உண்மைக்காகப் பாடுபடும் உறுதியையும், பயமின்றித் திருடனை விரட்டிச் சென்று பிடிக்கும் வீரத்தையும் எடுத்துக் கூறுகின்றது. தொடக்கத்தில் வயிற்றுப் பசியோடு அரசமரத்தடியில் இருந்த முருகன், நீல மலை மேலே கல்விக் கோயிலைப் புதுப்பித்து, அங்கே அறிவுப்பசி தீரக் கல்வி கற்பதைக் காட்டுகிறது இந்நாவல். மாயமந்திரங்களோ, தந்திரங்களோ இன்றி முயற்சியால் படிப்படியாக உயர்ந்து சிறப்புறும் ஒரு சிறுவனின் இக்கதை, 'கல்விச் செல்வமே சிறந்தது' என்பதை இளம் நெஞ்சங்களில் எழுப்ப வல்லது.

கந்தன் எனும் சிறுவன் தனது கடற்பயணத்தின்போது எதிர்பாராது ஏற்பட்ட பல விபத்துக்களில் சிக்கி, வீர உணர்ச்சியுடன் போராடி, ஒவ்வொரு விபத்தினின்றும் தப்பி முன்னேறும் கதையைக் கூறுகிறது, இவரது மற்றொரு நாவலான 'கந்தனின் கதை.'

ஜே. எம். சாலியின் 'இரு கண்கள்' என்பது குறிப்பிடத்தக்க ஒரு நாவல்.

இனிய குரலில் பாடக்கூடியவன் சுந்தர். தீபாவளியன்று அணுகுண்டு வெடியிலிருந்து கிளம்பிய தீப்பொறிகள் அவன் முகத்தில் பட்டதால் அவனது இரு கண்களும் பார்வையை இழந்து விடுகின்றன. பார்வையிழந்த அவனை வீட்டிலுள்ளவர்கள் உதாசீனம்

செய்கிறார்கள். அவன் கடற்கரையில் தனியாக அமர்ந்து பாடியதைக் கேட்ட நல்லதம்பி நட்டுவனார், அவனை வீட்டிற்கு அழைத்துச் சென்று இசைப்பயிற்சி அளிக்கிறார். அவனது புகழ் பரவுகிறது; திரைப்படத்தில் நடிக்கவும் வாய்ப்புக் கிடைக்கிறது. சுந்தரின் உயிர் நண்பனான மஸஹரின் முயற்சியால், சுந்தர் இழந்த கண் ஒளியை மீண்டும் பெறுகிறான். மர்மம் நிறைந்த சுந்தரின் வாழ்க்கைப் புதிரும் விடுபடுகிறது. இந்து-முஸ்லீம் ஒற்றுமையையும், நட்பின் சிறப்பையும் விளக்கும் நல்லதொரு நாவல் இது.

வளர்ந்து வரும் சமுதாயத்தில் மாணவரின் பங்கு மகத்தானது. கல்வியின் நோக்கத்தை உணர்ந்து சத்தியப் பாதையில், அன்பு நெறியில், அகிம்சை முறையில் நடக்க வேண்டும் என்பதை பாபுவும் அவனைத் தலைவனாக ஏற்ற மாணவர்களும் உணர்ந்து செயலாற்றுகின்றனர். ஆனால், மூர்த்தியும் அவனுடைய நண்பர்களும் பாபுவுக்கும் மற்றவர்களுக்கும் பல விதங்களில் தொல்லை கொடுக்கின்றனர். இறுதியில் பாபுவின் உறுதியான கொள்கையின் முன்பாக, மூர்த்தியும் அவனது நண்பர்களும் தலை குனிகின்றனர்.

ஆரம்பப்பள்ளி முதல் தொழிற்கல்லூரிகள் வரை இன்று நடந்துவரும் குழப்பங்களுக்கெல்லாம் மாற்று மருந்து கண்டு பிடிக்க முயன்றிருக்கிறார், கே. பி. நீலமணி. ‘ஒரு மாணவன் மகாத்மாவாகிறான்’ என்ற இந்த நாவலின் ஒவ்வோர் அத்தியாயத்தின் தொடக்கத்திலும், அறிஞர் பெருமக்களின் பொன் மொழிகள் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று :

> “ஜீவராசிகள் அனைத்திடமும் அன்பு செய்யத் தூண்டுவதே உண்மையான கல்வி. ஆனந்தம் அளிப்பதும் அதுவே.”
>
> —ரஸ்கின்

பண்ணையார் வேஷத்திலும் அதே சமயம் மந்திர மனிதன் வேஷத்திலும் உலவி வரும் கொள்ளைக் கூட்டத் தலைவன், பாலன் என்ற சிறுவனிடம் அன்பாகப் பழகி வருகிறான். அவன் ஒரு கொள்ளைக் கூட்டத் தலைவன் என்று தெரியாத பாலனும் அவரோடு நெருங்கிப் பழகுகிறான். கடைசியில், கொள்ளைக்கூட்டத் தலைவனின் குட்டு வெளிப்படவும், அவனது கூட்டத்தாருடன் அவன் பிடிபடவும் பாலனே முன்னின்று உதவுகிறான், குண்டுமணியின் ‘மந்திர மனிதன்’ என்கிற இந்த நாவலில். பிறர் பொருளுக்கு ஆசைப்படாத நற்பண்பினைக் கொண்ட பாலுவின் பேச்சும் செயலும் மனத்தைக் கவருகின்றன.

ஓவியப் போட்டியில் வெற்றி பெற்று ரஷ்யாவுக்குச் சென்று, அங்கு உலகத்தின் பல நாடுகளையும் சேர்ந்த, வெண்புறாவின் நிறம் போன்ற தூய மனம் கொண்ட குழந்தைகளைக் கண்டு, அங்கே பல அனுபவங்களையும் பெற்றுத் திரும்பும் கண்ணனின் கதையை 'வெண் புறுக்கள்' எனும் நாவலாகத் தந்துள்ளார், திருச்சி பாரதன். இக் கதையில் நடைபெறும் சம்பவங்களில் பெரும்பாலானவை ரஷ்ய நாட்டில் நடைபெறுகின்றன. உலக ஒருமைப்பாட்டுக்கு உதவு கின்றது இந்நூல்.

இதேபோல், 'உலகம் ஒன்று' எனும் உணர்வையூட்டும் மற்றொரு நாவல், ஞா. ஜெயசீலனின், 'ஒரு ரயில் புறப்படுகிறது' என்பதாகும். குழந்தை எழுத்தாளர் சங்க ஏவி.எம் தங்கப் பதக்கம் பெற்ற இந் நாவலில் பல நாட்டுக் குழந்தைகளும் ஓரிடத்தில் ஒன்றுகூடிப் பேசிச் சிரித்து மகிழ்ந்து விளையாடுவதோடு, பல மேலான செயல்களைச் செய்து பாராட்டையும் பெறுகின்றனர்.

சில புதிய நிலைக்களன்களைக்கொண்டு ஆலந்தூர் கோ. மோகன ரங்கன் எழுதிய நாவல்களில் ஒன்று 'சந்திர மண்டலத்தில் மந்திரவாதி.'

மந்திரக்கோல் உதவியினல் ஒரு சிறுவன் சந்திரமண்டலம் செல்கிருன். அங்கே ஒரு புதிய உலகத்தைப் படைக்கிருன். பொய் யில்லாத, போரில்லாத அந்த உலகத்தில் அன்பும் அறமுமே செங் கோல் செலுத்துகின்றன. வறுமையில்லாத மக்களும், திருடர்கள் இல்லாத ஊர்களும் அங்கே காணப்படுகின்றனர். பூவுலக மனிதர் களிடமிருந்து மாறுபட்ட புதிய மனிதர்களைச் சிறுவருக்கு அறிமுகப் படுத்துகிறது இந்நாவல்.

'கதை சொல்லத் தெரியாத பாட்டி' என்பது இவரது மற்றொரு நாவல். கதை சொல்வதிலே கைதேர்ந்த ஒரு பாட்டி திடீரெனக் கதை சொல்வதை நிறுத்திவிடுகிருள். காரணம் என்ன என, மணி முடி எனும் சிறுவன் வற்புறுத்திக் கேட்கவே, அவள், "உயிர்களி டத்தில் அன்பு வேணும் என்பதை வற்புறுத்த நான் எத்தனையோ கதைகளைச் சொல்லியிருக்கிறேன். அவ்வளவையும் கேட்ட பிறகு, ஒரு சிறுவன் நாயின் மீது கல்லைப் போட்டுக் கொன்றுவிட்டான். நான் கதை சொல்லி என்ன பயன்?" என்கிருள். மணிமுடி, தான் எதிர்பாராமல் செய்துவிட்ட தவறுக்கு வருந்துகிருன். மணி முடியின் கதை கேட்கும் ஆர்வத்தையும், பாட்டியின் கதை சொல்லும் நோக்கத்தையும் தெளிவாகக் கூறும் கதை இது.

'பர்மா ரமணி' எனும் அழ. வள்ளியப்பாவின் நாவல், அநாதைச் சிறுவனுன ரமணி, தன்னை ஆதரித்தவர்களிடம் எவ்வளவு அன்பாக, நன்றியோடு நடந்துகொள்கிறுன் என்பதையும், தமிழ்நாட்டிலும் பர்மாவிலும் நடைபெறும் வியப்புக்குரிய பல நிகழ்ச்சிகளால் அன்பின் பெருமை எவ்வாறு படிப்படியாக உயருகிறது என்பதையும் எடுத்துக்காட்டுகிறது. நட்பின் பெருமையை உணர்த்தும் 'நீலா-மாலா'வும், தான் வளர்த்த ஆட்டுக்குட்டி பலியாகாமல் அரசனிடமிருந்து அதை மீட்டுவந்த கந்தனின் விடாமுயற்சியை விளக்கிக்கூறும் 'மணிக்கு மணி'யும் இவர் தந்த பிற நாவல்கள்.

கண்ணன் போட்டியில் பரிசு பெற்ற நாவல்களுள் ஒன்றுன 'புதுமை நெஞ்சம்' இளையவனின் நல்லதொரு நாவலாகும்.

ஓட்டப்பந்தய வீரன், பள்ளிப் பெருமை காக்கும் பண்பாளன், தேசத்துரோகக் கும்பலை ஒழித்த தீரன், சிதறிக்கிடந்த குடும்பத்தை ஒன்று சேர்த்த செல்வன் என்றெல்லாம் பலரும் பாராட்டும் நிலையை எய்திய ராஜுவின் கதையைப் புதுமை நெஞ்சத்திலே தோன்றும், பல புதுமைகளுடன் எடுத்துக் கூறுகிறுர் இளையவன்.

புவனை கலைச்செழியனின் 'அன்பு தோற்காது' என்ற நாவலில் சித்தியின் கொடுமை தாங்காமல், வெள்ளாற்றில் விழுந்த மல்லிகாவைக் காப்பாற்றிய பூவழகன், அவள் அண்ணன் போலவே இருந்து அவளுக்குப் பலவகையிலும் உதவுகிறுன். மல்லிகாவை அவள் அப்பாவின் யோசனைப்படி பூவழகனும் அவன் அப்பாவும் சித்திக்குத் தெரியாமல் பத்திரமாக வைத்து, அன்பாக வளர்த்து வருகிறுர்கள். இறுதியில், சித்தியே மனம் மாறி, அவளைத் தேடி வந்து அழைத்துச் செல்கிறுள்.

"பிரிந்தவர் கூடினர். துண்டித்த உறவு துளிர்த்தது; புதிய சொந்தம் பிறந்தது. இத்தனையும் சித்திக்கக் காரணமாயிருந்தது நெஞ்சிலே விளைந்த அன்பு; அந்த அன்பின் வலிமை, அந்த வலிமை விளைத்த வெற்றி. ஆம், அன்பு ஒரு நாளும் தோற்காது!" என்ற வரிகளுடன் கதை முடிகிறது.

தென்ஞர்க்காட்டின் இயற்கை அழகையும், கதை நிகழ்கின்ற பல இடங்களைப் பற்றிய விவரங்களையும் இந்நாவலில் படம் பிடித்துக் காட்டுகிறுர் நூலாசிரியர்.

உலகப் புகழ்பெற்ற சில சிறுவர் நாவல்களும், மற்ற இந்திய மொழிச் சிறுவர் நாவல்களும் தமிழிலே வெளிவந்துள்ளன.

'Alice in Wonder Land' என்ற கதையை 'அலமுவின் அதிசய உலகம்' என தி.ஜ.ர.வும் 'கமலாவின் கதை' என ஆர். பத்மநாபனும்

'ஆலிசின் அற்புத உலகம்' என என்.கே. வேலனும், 'குழந்தை உலகம்' எனக் கா. அப்பாத்துரையாரும் தமிழில் தந்துள்ளனர். 'The Adventures of Pin cchio' என்ற கதையை 'மரப்பாச்சியின் கதை' என நாகமுத்தையா வெளியிட்டுள்ளார்.

ஜான் துரைராஜின் 'மருத்துவர் மகள்' (Surgeon's Daughter), 'இலட்சிய வீரன்' (Robroy), பூவை அமுதனின் 'வீரமகள்' (Joan of Arc), 'அனாதைச் சிறுவன்' (Oliver Twist), நெ. சி. தெய்வசிகாமணியின் 'நெசவாளியின் புதையல்' (மூல ஆசிரியர்: ஜான் எலியட்), 'காத்திரு காலம் வரும்' (மூல ஆசிரியர்: டூமாஸ்), மாஜினியின் 'உல்லாசக் குடும்பம்' (மூல ஆசிரியர்: நொசாவ்), வாண்டுமாமாவின் 'மீன் அழகி' (Mermaid), ப. ராமசாமியின் 'அல்லாவுதீனும் அற்புத விளக்கும்', ர அய்யாசாமியின் 'ஷேக் சில்லி கதைகள்', என். கே. வேலனின் 'கலிவரின் யாத்திரைகள்', 'சிந்துபாது கடற்பயணம்,' 'போர் மலர்கள்', ரத்னத்தின் 'சங்கனும் ரங்கனும்' (ஆங்கில நாடோடிக் கதை) முதலியவை மேல்நாட்டுக் கதைகளில் சிலவாகும்.

பாலகுருவின் 'விஷமக் கோபுவின் விசித்திர யாத்திரை' (மூலம்; தெலுங்கு), சௌரியின் 'காட்டு யானை', எம் பி. சுப்பிரமணியனின் 'மிருகங்கள் நடத்தும் சர்க்கஸ்', ஆ. மாதவனின் 'பரிசு', மங்கையர்க்கரசியின் 'சுட்டி ராமன்' (நான்கும் மலையாள மூலம்), ஆர். கே. நாராயணன் ஆங்கிலத்தில் எழுதி சாந்தலட்சுமி மொழி பெயர்த்த 'ராஜாவும் காட்டு எருமையும்' போன்ற நாவல்களும் குறிப்பிடத்தக்கவை.

இதுவரை சிறுவருக்காக வெளிவந்துள்ள பல்வேறு வகையான சிறுகதைகளிலும், நெடுங்கதைகளிலும் நாவல்களிலும் காணப்படும் கதைக்கரு, கற்பனை, உள்ளடக்கம், உத்தி, நடை போன்றவற்றை ஓரளவு தெரிந்துகொண்டோம்.

மிகச்சிறு குழந்தைகளுக்குத் தேவதைக் கதைகளையும் பிராணிகளைப்பற்றிய கதைகளையும எழுதுவதைச் சிலர் குறை கூறுகின்றனர். 'விஞ்ஞான உலகில் குழந்தைகளுக்கு இன்றுள்ள சூழ்நிலையை வைத்து எழுதாமல் தேவதைக் கதைகளை எழுதினால், மூட நம்பிக்கை தானே வளரும்? மிருகங்களும் பறவைகளும் பேசுவதாக எழுதுவது இயற்கைக்கு முற்றிலும் முரணானதல்லவா?' எனச் சிலர் கேட்கின்றனர். "தேவதைக் கதைகளையும், பிராணிகளின் உரையாடல்கள் அடங்கிய கதைகளையும் சின்னஞ்சிறு வயதிலே கேட்டாலும், நாளடைவில் உண்மைக்கும் கற்பனைக்கும் உள்ள வேற்றுமையைக் குழந்தைகள் எளிதிலே உணர்ந்துகொள்வர்" என்று உளவியலார் திட்டவட்டமாகக் கூறுகிறார்கள்.

ஆண்டர்சன் கதைகளையும் கிரிம் சகோதரர்கள் திரட்டிய தேவதைக்கதைகளையும் (Grimms Fairy Tales) 'அதிசய உலகில் ஆலிஸ்' (Alice in Wonderland) என்ற கதையையும் படித்து வளர்ந்த மேனாட்டுக் குழந்தைகள் பிற்காலத்தில் மூடநம்பிக்கையில் மூழ்கி விட்டதாகத் தெரியவில்லையே!

"மனிதர்களைப் பற்றிக் கூறினால்தானே மனிதப் பண்பு வளரும்? மிருகங்களைப் பற்றிக் கூறுவதனால் என்ன பயன்?" எனக் கேட்போரும் உள்ளனர். மிருகங்களிடத்திலும் சில மனிதப் பண்புகள் உள்ளன; மனிதர்களிடத்திலும் சில மிருகப் பண்புகள் உள்ளன என்பதை எவரேனும் மறுக்க முடியுமா?

பஞ்சதந்திரக் கதைகளிலும், ஈசாப் கூறிய 300-க்கு மேற்பட்ட குட்டிக்கதைகளில் பெரும்பாலானவற்றிலும் மிருகங்களும், பறவைகளுமே பேசுகின்றன. ஆறறிவுள்ள மனிதர்களைக்கொண்டு, மனிதர்களுக்கு அறிவுரை வழங்குவதைவிட, ஐந்தறிவுள்ள மிருகங்கள் பறவைகளின் உரையாடல் மூலம் பல உண்மைகளை உணர்த்துவது நல்லது என ஈசாப் கருதியிருக்கலாம்.

சற்று வளர்ந்த குழந்தைகள் வீரதீர சாகசக் கதைகளை (Adventure Stories) விரும்பிப் படிக்கின்றனர் என்பது உண்மையே. நம் குழந்தைகள் கோழைகளாக இருக்கக்கூடாது, நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமும் கொண்டவர்களாக விளங்கவேண்டும் என்ற ஆசை நம் அனைவருக்குமே இருக்கிறது. அதற்காகத் திருட்டு, கொலை, கொள்ளை ஆகியவற்றை மையமாக வைத்துக் கதை படைப்பது சரியன்று.

20 ஆண்டுகளுக்கு முன்பு 'பயங்கரக் கதை', 'மயிர்க்கூச்செறியும் கதை', 'கொள்ளையும் கொலையும் நிறைந்த கதை' என்று கொட்டை எழுத்துக்களுடன் சிறுவர் தொடர்கதைகளை விளம்பரப்படுத்தும் சுவரொட்டிகள் தமிழகத்தில் காட்சியளித்தன. சில குழந்தைப் பத்திரிகை ஆசிரியர்களும், குழந்தைக் கதை எழுதுவோரும் 'பயங்கரம்' என்று சொன்னால்தான், குழந்தைகள் வாங்குவார்கள் என்று நினைத்து இவ்வாறெல்லாம் விளம்பரப்படுத்தி வந்தார்கள். ஆனால் குழந்தை எழுத்தாளர் சங்கமும், சில குழந்தைப் பத்திரிகைகளும், எதிர்த்துப் போர் முழக்கம் செய்யவே, அத்தகைய கதைகள் கொஞ்சம் கொஞ்சமாகக் குறையத் தொடங்கின. ஆயினும் அந்நிலை இப்போது முற்றிலும் மாறிவிடவில்லை. அறத்தை அடிப்படையாகக் கொள்ளாத எந்தச் செயலும் வீரமாகாது. நேர்மைக்கும் நீதிக்கும் அஞ்சாமல் போரிடும் அருங்குணத்தைக் குழந்தைகள் உள்ளத்தில் விதைக்கவேண்டும்.

தொடர்ந்து கேடுகளையே செய்துவரும் ஒருவன், கடைசியில் திடீரென மனம் மாறி நல்லவனுகின்ற காட்சியைச் சில கதைகளில் காணுகின்றோம். தக்க காரணத்தோடு, படிப்படியாக அவன் மனம் மாறுவதைக் காட்டினுல்தான் பொருத்தமாயிருக்கும்; நம்பத்தக்க தாகவும் இருக்கும்.

குழந்தைகளுக்கான கதைகள், குழந்தைகளைப் பற்றிய கதைகள் -இவை இரண்டுக்கும் உள்ள வேற்றுமை தெரியாத சிலர் அப்பா, அம்மா திருந்த வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துவதுபோல் எழுதிவிடுகின்றனர்.

சித்தி என்ருலே கொடுமையின் உருவம் என்று சித்திரிக்கும் 'சின்ட்ரல்லா' கதைபோன்ற சில கதைகளைத் தமிழிலும் காணு கிரோம். இளம் வயதிலே, தாயை இழந்து சித்தியால் வளர்க்கப் படும் குழந்தைகள் இத்தகைய கதைகளைக் கேட்பதனுலும், அண்டை அயலாரின் தூண்டுதலாலும் சித்தி நல்லதைச் செய்தால்கூடக் கெடுதல் செய்வதாக எண்ணி, அவளை வெறுக்கத் தொடங்குவர். அன்பு மலர வேண்டிய அப்பருவத்தில் வெறுப்பு விதைக்கப்படுகிறது, முளைவிடும்போதே வாழ்க்கை கசப்பாகத் தோன்றுகிறது. இத்தகைய போக்கினை மாற்றும் வகையில் அன்புள்ளம் கொண் டுள்ள சித்தியின் கதைகளைச் சிலர் எழுதியிருப்பது மகிழ்ச்சிக்குரியது.

பழிக்குப் பழி வாங்குவதைப் பாராட்டுவது, பிற இனத்தவர், பிற மொழியினர்மீது வெறுப்பைத் தூண்டுவது, குரூரச் செயல் களையும், கொள்ளைகளையும் விவரித்து எழுதுவது-இவற்றிற்கெல்லாம் குழந்தைக் கதைகளில் இடமளிக்கலாகாது.

குழந்தைகளுக்கு நகைச்சுவைக் கதைகளை எழுதுவோரை விரல்விட்டு எண்ணிவிடலாம். நகைச்சுவை என்ற பெயரில் கை, கால் ஊனமுற்ருேரையும், ஆசிரியர்களையும், பெற்ருேர்களையும் கேலி செய்தும் சிலர் எழுதுகின்றனர். பிறர் மனத்தைப் புண்படுத்தாத தூய்மையான, உயர்ந்த நகைச்சுவைக் கதைகளே குழந்தைகளுக்குத் தேவை.

குழந்தைகளுக்கு எதை எழுதலாம், எதை எழுதக்கூடாது என்பதை அறிந்துகொள்வதே குழந்தை எழுத்தாளனின் பால பாடமாக இருக்க வேண்டும்.

பெரியவர்களாயின் நல்லது எது, கெட்டது எது என்பதை உய்த்துணரக்கூடிய ஆற்றல் பெற்றிருப்பர். பெரும்பாலான குழந் தைகளுக்கு அந்த ஆற்றல் இருப்பதில்லை. அச்சிலே வருவனவெல்லாம் சரியென நம்புகின்றனர். ஆலையில் கரும்பைக் கொடுத்தாலும்

வெட்டுகிறது; கையைக் கொடுத்தாலும் வெட்டுகிறது. இதனை உணர்ந்து குழந்தைகளுக்காக எழுதுவோர் செயலாற்றவேண்டும்.

"குழந்தைகளுக்கு இன்பமயமான கதைகளையே எழுதவேண்டும். அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கவேண்டிய பருவத்தில் பிறருடைய துன்பங்களையெல்லாம் கூறிச் சோகத்தில் ஆழ்த்தலாமா?" என்று சிலர் கேட்கின்றனர்.

நம் நாட்டுப் பழங்கதைகளில் பல, சோக முடிவுக் கதைகளே இறுதியில் இறைவன் வந்து இறந்தவர்களுக்கு உயிர் கொடுக்கின்ற பல கதைகளைக் கேட்டிருக்கிறோம். சோக முடிவுக் கதைகள் குழந்தைகள் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்துவிடுகின்றன. 'சோகத்திற்குக் காரணம் என்ன? சோகம் வராமல் தடுக்க வழி என்ன?' என்றெல்லாம் அவர்களை இக்கதைகள் நாளடைவில் சிந்திக்கவைக்கின்றன. வாழ்விலே துன்பத்தைக் கண்டு துவளாமல், நெஞ்சுறுதியுடனும், சிந்தனைத் தெளிவுடனும் முன்னேற இக் கதைகள் கை கொடுக்கலாமல்லவா? அதற்காக சோகம் ததும்பும் கதைகளையே எழுதவேண்டுமெனக் கூறவில்லை.

டாக்டர் ரிச்சர்ட் பாம்பெர்க்கர் கூறுகிறார்: "உலகத்தின் உண்மை நிலையைச் சந்திக்க ஏற்றவர்களாகச் சிறுவர்களை உருவாக்க வேண்டும். உலகத்தைப் பற்றிய தவறான அல்லது திரிக்கப்பட்ட காட்சி, சரி செய்ய முடியாத சேட்டினை விளைவிக்கலாம். வாழ்க்கையில் மோசமான பகுதிகளை அழுத்திக் கூறுவது எவ்வளவு கெடுதல் பயக்குமோ, அந்த அளவு இலட்சிய நிலையில் வைத்து அல்லது அழகான நிலையில் உலகைக் காட்டுவதும் கேடு விளைவிக்கும். சிவப்பு நிறக் கண்ணாடி மூலமாகவோ, கறுப்பு நிறக் கண்ணாடி மூலமாகவோ உலகைக் காட்டுவது நல்ல குழந்தை இலக்கியமாகாது." டாக்டர் பாம்பெர்க்கர் இவ்வாறு கூறியிருப்பது சிந்தனைக்குரியது.

பல சிறுவர் பத்திரிகைகளில் தொடர் நாவல்களாக வெளிவந்த பல கதைகள் பின்னர் புத்தகங்களாக வெளிவருகின்றன. தொடர் கதைகளாக வெளிவரும்போது, 'அடுத்து என்ன?' என்ற ஆவலைத் தூண்டும் வகையில் ஒவ்வோர் இதழிலும் கதையை ஒரு கட்டத்தில் நிறுத்துகின்றனர். ஆனால், அத்தொடர்கதை புத்தகமாக வரும்போது மீண்டும் ஒருமுறை படித்துப் பார்த்துத் தேவையான மாற்றங்களை நூலாசிரியர் செய்யாததாலும், நம் நாட்டில் பெரும்பாலான பதிப்பகங்களில் 'பதிப்பாசிரியர்' என ஒருவர் இல்லாததாலும் பத்திரிகையில் வெளிவந்தவாறே சில நாவல்கள் புத்தகங்களாகிவிடுகின்றன. இதனால் சில நாவல்களைப் படிக்கும்போது இக்குறைபாடுகள் நன்கு தெரிகின்றன. அவற்றைத் தவிர்த்திருக்கலாம்.

சிறுவருக்காகக் கதை அல்லது நாவல்கள் எழுதும்போது நம் நாட்டுச் சூழ்நிலையை வைத்து எழுதினால், அதில் நம் நாட்டு மண்

வாடை வீசச் செய்தால் அதற்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. யுனெஸ்கோ போன்ற நிறுவனங்களும், பிற நாட்டவரும் நம் நாட்டுப் பழக்கவழக்கங்களையும், வாழ்க்கை முறைகளையும் அறிந்து கொள்ள அம்மாதிரியான கதைகளையே விரும்பிக் கேட்கின்றனர். அவற்றை மொழி பெயர்க்கவும் முன் வருகின்றனர்.

நாவல்களில் வருகின்ற சில முக்கியமான இடங்களைப் பற்றியும், அவற்றிற்குத் தொடர்புடைய வரலாற்று அல்லது இலக்கியச் செய்திகளையும் முடிந்தவரை கொடுத்தால், சிறுவருக்குப் பயனளிக்கும்.

விஞ்ஞான உண்மைகளை அடிப்படையாகக்கொண்ட நாவல்கள் (Science Fiction) மேல் நாடுகளில் பல வெளிவந்துள்ளன. தமிழிலும் நம் சிறுவர் விரும்பும் வகையில் அத்தகைய நாவல்களைப் படைக்கலாம்.

ஆங்கிலமறிந்த குழந்தைகள் ‘Oliver Twist’, ‘A Tale of Two Cities’, ‘Robinson Crusoe’ போன்ற கதைகளை மிகவும் விரும்பிப் படிப்பதைக் காண்கிறோம். இக்கதைகள் சிறுவருக்காக எழுதப்பட்டவை அல்லவாயினும் சிறுவருக்கேற்ற முறையில் சுருக்கி வெளியிடப்பட்டுள்ளன. இதேபோல் கல்கியின் ‘பார்த்திபன் கனவு’ சிறுவருக்கேற்ற வகையில் சுருக்கிய பதிப்பாக வெளிவந்துள்ளது. கல்கியின் ‘சிவகாமியின் சபதம்’ போன்ற நாவல்களையும், மற்றும் சில தமிழ் நாவல்களையும் தேர்ந்தெடுத்துச் சிறுவருக்கேற்ற வகையில் சுருக்கித் தரலாம்.

பல மேனாட்டு நாவல்களை மொழி பெயர்த்தோ தழுவியோ பல புத்தகங்கள் வெளிவந்துள்ளன. இந்தப் புத்தகங்கள் சிலவற்றில் மூல நூலின் பெயரோ ஆசிரியரின் பெயரோ இல்லாதிருக்கின்றன. நாடோடிக் கதையாக இருந்தால்கூட அது நாடோடிக் கதை என்பதைக் கதை முடிவிலோ, முன்னுரையிலோ குறிப்பிடுதல் அவசியம்.

தி. ஜ. ர. தமது ‘ரோஜாப் பெண்’ என்ற புத்தகத்தில், “மறுபடியும் கூறுகிறேன். கதைகள் அத்தனையும் இரவல் கதைகள்; நான் சொந்தமாய்ப் படைத்தவை அல்ல” என்று முகவுரையில், முன்பு சொன்னதையே மீண்டும் ஒருமுறை சொல்லுகிறார். இத்தகைய நேர்மை எல்லாருக்கும் வரவேண்டும்.

தமிழிலே இதுவரை எந்த எந்தச் சிறுவர் நாவல்கள் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளன என்ற விவரம் தெரியாததால், ஒரே நூலுக்குப் பல மொழிபெயர்ப்புக்கள் வெளிவந்துள்ளன. ‘குழந்தை நூல்கள் விவரத் தொகுப்பு ஒன்றை வெளியிடக்’ குழந்தை எழுத்தாளர் சங்கம் ஏற்பாடு செய்து வருகிறது. அந்நூல் வெளிவந்தால், இக்குறை நீங்கும்.

# சிறுவர் நாடகங்கள்

"காது நிறையக் கேட்பதைவிடக் கண் நிறையப் பார்ப்பதையே குழந்தைகள் விரும்புகின்றனர்'' என்கிருர் ஹென்றி கெட்டல் என்ற கலைஞர்.

கலைஞர் அவ்வை டி. கே. சண்முகம் கூறுகிருர் : "ஒழுக்கமும் பண்பாடும் வளரவேண்டுமானுல் அது கல்வியால் மட்டும் இயலாது என்பது என் கருத்து. கருத்துக்களைக் காட்சிப்படுத்தும் சக்தி வாய்ந்த கலையினுல்தான்—அதிலும் நாடகம், திரைப்படம் ஆகிய கலைகளினுல் தான்—முடியும்.''

தற்போது நம் தமிழகத்தில் நடைபெற்றுவரும் நாடகங்களில் பெரும்பாலானவை பெரியவர்களுக்காகவே எழுதப்பெற்றவை. அவற்றில் வேடிக்கைக் காட்சிகள், நடனங்கள் முதலியன வரும் போது குழந்தைகள் ஆவலாகப் பார்த்து ஆனந்தம் அடைகின்றனர். ஆனுல், நாடகம் முழுவதையும் அவர்களால் சுவைக்க முடியுமா எனக் கேட்டால் ஒரு நாளும் முடியாது.

இதற்கு என்ன காரணம்? முதலாவதாகக் கதை அமைப்பு. பெரியவர்களுக்காகவே நாடகங்கள் தயாரிக்கப்படுவதால், பெரும் பாலானவற்றில் காதல், காமம், குரோதம், கொள்ளை, கொலை போன்ற விஷயங்களுக்கே முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. இவை யெல்லாம் குழந்தைகளுக்குப் புரிவதில்லை. புரியாமல் இருப்பதே நல்லது. வேதாந்தக் கருத்துக்கள், சிலேடைப் பேச்சுக்கள் இப்படிப் பல இருக்கின்றன.

இக்காரணங்களால்தான் குழந்தைகளுக்கென்றே நாடகங்கள் வேண்டும் எனப் பலரும் விரும்புகின்றனர். குழந்தைகளின் சூழ் நிலையை வைத்தே அந்த நாடகங்களை அமைக்கவேண்டும். வசனம் குழந்தைகள் புரிந்துகொள்ளும்படி எளிமையாக இருக்கவேண்டும்.

பள்ளி விழாக்களிலும், பொது மேடைகளிலும் குழந்தைகளின் பல்சுவை நிகழ்ச்சிகளைக் காண்கிருேம். அப்போது குழந்தைகளின் நடிப்புத் திறமையை நம்மால் நன்கு உணர முடிகிறது அத்திறமை யைத் தக்கபடி பயன்படுத்தி நாடகங்களாக்கினுல் எவ்வளவு நன்ரு யிருக்கும்! 'குழந்தை நாடகங்களும், குழந்தை நடிகர்களும் பெருக வேண்டும். அந்த நாடகங்களைக் கண்டு மற்றக் குழந்தைகளும் மகிழவேண்டும்' என்ற நோக்குடன் குழந்தை எழுத்தாளர் சங்கம்

1955ஆம் ஆண்டு 'குழந்தைகள் நாடக விழா' ஒன்றைச் சென்னையில் நடத்தியது. ராஜாஜியால் தொடங்கி வைக்கப்பெற்று, மூன்று நாள்கள் நடைபெற்ற இவ்விழாவில், ஒரு மணி நேர நாடகங்கள் ஆறு அரங்கேறின.

தமிழகத்தில் பல ஆண்டுகளுக்கு முன்பு நடந்துவந்த நாடக சபாக்களில் பெரும்பாலானவை குழந்தை நடிகர்களைக் கொண்டவை. ஆகையால்தான் 'மதுரை பால வினோத சங்கீத சபா', முத்துக் கிருஷ்ணன் பாய்ஸ் கம்பெனி' என்றெல்லாம் அவற்றிற்குப் பெயர் சூட்டியிருந்தனர். இந்தச் சபாக்களில் இருந்த குழந்தைகள் இதிகாசக் கதைகளையும், புராணக் கதைகளையும், சரித்திரக் கதைகளையுமே நடித்து வந்தார்கள். குழந்தைகளுக்கு ஏற்ற நாடகங்களை அவர்கள் நடிக்கவில்லை.

முன்பெல்லாம் பள்ளிகளிலும் இத்தகைய நாடகங்களையே நடித்து வந்தார்கள். சில பள்ளிகளில், பம்மல் சம்பந்த முதலியாரின் மனோகரன், பொன் விலங்கு, சபாபதி போன்ற நாடகங்களை நடிப்பார்கள். இந்நாடகங்கள் குழந்தைகளுக்காகவே எழுதப்பெற்றவை அல்லவாயினும், அவற்றில் சில பகுதிகளைக் குழந்தைகள் ரசித்து மகிழ்ந்தனர்.

தற்போது பள்ளிகளிலும், சிறுவர் மன்றங்களிலும், வானொலியிலும், தொலைக்காட்சியிலும் குழந்தைகளுக்கு ஏற்றவாறு பல குழந்தைகள் நாடகங்கள் நடைபெறுகின்றன. இன்னும் பலப் பல நாடகங்கள் வேண்டுமென்கிறார்கள். தமிழில் குழந்தைகளுக்கான நாடக நூல்கள் 15 ஆண்டுகளுக்கு முன்பு மிகக் குறைவாகவே இருந்தன. தற்போது 70-க்கு மேற்பட்ட நாடக நூல்கள் வெளிவந்துள்ளன. இவற்றைப் படிப்பதற்கான நாடகங்கள், நடிப்பதற்கான நாடகங்கள், படிப்பதற்கும் நடிப்பதற்கும் ஏற்ற நாடகங்கள் என மூன்று வகையாகப் பிரிக்கலாம். படிப்பதற்கும் நடிப்பதற்கும் ஏற்ற நாடகங்களைக்கொண்ட நூல்கள் 30 இருக்கலாம். வானொலியிலும், சிறுவர் மன்றங்களிலும், பள்ளிகளிலும், அவ்வப்போது நடிக்கப்பெற்ற பல நல்ல நாடகங்கள் இன்னும் நூல் வடிவம் பெறவில்லை.

1955ஆம் ஆண்டு குழந்தை எழுத்தாளர் சங்கம் நடத்திய சிறுவருக்கான நாடகம் எழுதும் போட்டியில் பூவண்ணனின் 'உப்பில்லாத பண்டம்' என்ற நாடகம் முதற்பரிசு பெற்றது. அதே ஆண்டில் இச்சங்கம் நடத்திய நாடக விழாவில் நடிக்கப்பெற்ற ஆறு நாடகங்களில் கூத்தபிரானின் 'அன்னை சொல் அமிர்தம்' முதற் பரிசு பெற்றது; தம்பி சீனிவாசனின் 'தங்கக் குழந்தைகள்' நூலாக வெளிவந்து இந்திய அரசினரின் பரிசைப் பெற்றது.

இதுவரை இந்திய அரசினர் பரிசைப் பெற்ற தமிழ் நாடக நூல் இது ஒன்றுதான். 'தங்கக் குழந்தைகள்' நாடகத்தில் அப்பாவும் அம்மாவும் குடும்பம் நடத்துவதற்கு அன்றாடம் படுகின்ற தொல்லைகளைப் பார்த்து, நம்மால் எவ்வகையில் உதவமுடியும் எனச் சிந்திக்கிறான் மணி என்ற சிறுவன். காலையிலும் மாலையிலும் வீட்டுக்கு வீடு பத்திரிகை போட்டு அவன் பணம் சம்பாதிக்கிறான். அவன் தங்கை ராஜமும் தையல் வேலை செய்தும், தோட்டத்தில் காய்கறிகள் பயிர்செய்தும் பணம் சேர்க்கிறாள். துணிக்கடையிலும், மளிகைக் கடையிலும் அப்பா வாங்கியிருந்த கடன்களைத் தீர்த்ததோடு, பெற்றோருக்குத் தீபாவளிக்கு வேண்டிய துணிகளையும் வாங்கிக் கொடுத்து அவர்களை வியப்பில் ஆழ்த்துகிறார்கள், அவ்விருவரும். பெற்றோருக்கு எப்படி எப்படியெல்லாம் உதவலாம், எவ்வாறு தேவையில்லாத செலவுகளைக் குறைத்துச் சிக்கனமாக வாழலாம் என்பதைச் சிறுவருக்கு எடுத்துக் கூறுகிறது இந்நாடகம்.

திருச்சி பாரதனின் 'அப்பாவின் ஆசை', 'பலாப் பழம்'-இரண்டும் தமிழ்நாடு சங்கீத நாடக சங்கத்தின் பரிசுகளைப் பெற்ற நாடகங்கள். குழந்தைகளுக்கான நாடகங்கள் நாடெங்கிலும் நடத்தப்படவேண்டுமென்ற அளவிலா ஆசை கொண்ட அவ்வை டி. கே. சண்முகம், தமது குழுவினருடன் மேடையேற்றிய இந்நாடகங்கள் ஒவ்வொன்றும் சுமார் 3 மணி நேரம் நடைபெறும் முழு நேர நாடகங்கள்.

பள்ளி நண்பர்கள் இருவரிலே ஒருவர் சப்-இன்ஸ்பெக்டராகிறார்; மற்றொருவர் கொள்ளைக்காரனாகிறார். இந்த நிலையில் தாயை இழந்து, தவறான வழியில் செல்லும் தந்தையையும் பிரிந்த குமார், சப்-இன்ஸ்பெக்டரின் ஆதரவிலே வளர்கிறான். சில நாள்களில் அவரையும்விட்டு அவன் பிரிய நேரிடுகிறது. 'திருடக் கூடாது, பிச்சை எடுக்கக் கூடாது, உழைச்சுச் சாப்பிடணும்,என்ற அவன் அம்மாவின் புத்திமதிப்படி உழைத்துப் பிழைக்கிறான். பிறகு உயர்வு பெற்றுத் தன் தந்தையைக் கண்ணீர்விட்டுத் திருந்தச் செய்கிறான். 'அப்பாவின் ஆசை' என்னும் நாடகத்தில், இந்நாடகாசிரியரே நல்ல கவிஞராகவும் இருப்பதால், அவரே சில இனிய பாடல்களையும் இயற்றித் தந்திருக்கிறார்.

திருச்சி பாரதனின் மற்றொரு நாடகமான 'பலாப் பழம்' சோம்பலைத் துரத்திச் சுறுசுறுப்பை அளிக்கும் நாடகம்.

மன்னருடைய மகனோ முழுச்சோம்பேறி. மன்னரோ இளவரசனைக் கண்டித்துத் திருத்த விரும்பாத பாசம் மிக்கவர். ஆனால், அவன் வளரும் போக்கைக் கண்டு வருந்துகிறார். என்னென்னவோ முயற்சிகள் செய்தும் திருத்த முடியாத சிறுவனைப் போட்டி உணர்ச்சி

திருத்தக்கூடுமல்லவா? சோம்பேறி இளவரசனுக்குப் போட்டியாக அண்டைநாட்டு இளவரசன், ஏழைபோல், வில்லனாக மாறு வேடத்தில் வந்து அவனைத் திருத்துகிறான். உருமாறிவந்த இளவரசன் பார்ப்பதற்குப் பலாப் பழம்போல இருந்தாலும், அவனது மனம் பலாச்சுளையாக இனிக்கிறது!

குழந்தைகளுக்காக அதிகமான நாடகங்களை எழுதிய பெருமை கூத்தபிரானுக்கு உண்டு. ஆம், இதுவரை 150-க்கு மேற்பட்ட நாடகங்களை இவர் எழுதியிருக்கிறார். இந்நாடகங்களில் பெரும் பாலானவை 10 நிமிஷ நேர நாடகங்களே.

குழந்தைகளையே கதாபாத்திரங்களாகவும், குழந்தைகளின் வாழ்க்கையை ஒட்டிய நிகழ்ச்சிகளையே மையமாகவும் வைத்து, குழந்தைகளைக் கொண்டே நடிக்கும் வகையில் நாடகங்களை எழுதும் ஆற்றல் மிக்கவர் கூத்தபிரான். இவரது நாடகங்களில் சில நாடகங் களே நூல் வடிவில் வந்துள்ளன.

'அச்சுபிச்சு', 'சுருக்குப்பை', 'டிகிடிகி சபதம்', 'சொப்பனக் குழந்தை', 'கண்மணிக் கண்ணன்' ஆகிய இவரது நாடகங்கள் வானொலியில் தொடராக ஒலி பரப்பப்பெற்று, பல்லாயிரக்கணக் கான குழந்தைகளை மகிழ்வித்தவை.

கூத்தபிரானின் 'முரளி பைத்தியமா?' என்ற நாடகத்தில், தன் அம்மாவிடம் யார் வந்து பேசினாலும் அம்மாவின் அருகிலே இருந்து, அவர்கள் சொல்வதை அப்படி அப்படியே திருப்பிச் சொல்லுகிறான் முரளி. இதனால், எல்லாரும் அவனைப் பைத்தியம் என்றே நினைக் கின்றனர். ஒருநாள் அவனது பள்ளி ஆசிரியை அவனை வற்புறுத்திக் கேட்கவே, "என் அம்மாவுக்குக் கொஞ்சம் காது கேட்காது. இது மத்தவங்களுக்குத் தெரிஞ்சா, எங்கம்மாவை செவிட்டம்மான்னு நாலுபேரு சொல்லுவாங்களே, அதனால்தான் அம்மா பக்கத்திலே யிருந்து அப்படித் திருப்பித் திருப்பிச் சொல்கிறேன்" என்று பதிலளிக்கிறான் முரளி.

"முரளி, நீ அபூர்வப் பிறவி. தெய்வக் குழந்தை. உன் அன்புக்கு இந்த உலகமே ஈடாகாது" என்று பாராட்டுகிறார் ஆசிரியை.

"உயிர்களிடத்தில் அன்பு வேண்டும், எந்த உயிருக்கும் துன்பம் கொடுக்கக் கூடாது" என்பதை வலியுறுத்தும் 'சின்னக்குருவி', தாயை மதித்து என்றென்றும் அன்பு செலுத்தவேண்டும் என்ற மையக் கருத்தைக் கொண்ட 'அன்னைசொல் அமிர்தம்', சண்டையின்றி வாழ்வதே நமது லட்சியமாக இருக்கவேண்டும் என்ற கருத்தை உணர்த்தும் 'பொடிப்பயல்', உலகில் எந்தக் குழந்தையும் அநாதை இல்லை என்பதை விளக்கும் 'கண்டேன், கண்டேன்', தேசபக்தியை

இளம் நெஞ்சங்களிலே எழுப்புகின்ற 'வைத்த மாநிதி', தேவைக்கு மேல் வைத்திருப்பதும் திருட்டுத்தான் என்ற காந்திஜியின் கருத்தை எடுத்துக் கூறும் 'இதுவும் திருட்டு' ஆகியவை இவரது நாடகங்களில் குறிப்பிடத்தக்கவை.

நகைச்சுவை கலந்து நாடகங்களை உருவாக்குவதில் கைதேர்ந்தவர் கூத்தபிரான்.

'பொடிப்பயல்' என்று சுப்புவைக் கூறுகிருள் சித்ரா.

"பொடியை அவமானமா அலட்சியமா நினைக்காதே. காப்பிப் பொடி, காப்பி சாப்பிட உதவறது. மிளகாய்ப் பொடி சாம்பாருக்கு உதவுறது, சீயக்காய்ப்பொடி தலைமுழுக உதவுறது" என்று பதில் சொல்கிருன், சுப்பு.

கேள்விமேல் கேள்வி கேட்கும் உஷாவிடம், "ஒரு நாலு நிமிஷம் நீ மௌனமா இரேன், எனக்குத் தலை சுத்தறது" என்கிருர் ஒருவர்.

"மின்சார விசிறி சுத்தும்; ராட்டினம் சுத்தும். தலை எப்படிச் சுத்தும்"—இது உஷாவின் கேள்வி.

வானெலி வாயிலாகவும் தொலைக்காட்சி வாயிலாகவும் பல நல்ல நாடகங்களைத் தந்தவர் தணிகை உலகநாதன்.

அந்தகக்கவி வீரராகவரின் வாழ்க்கை வரலாற்றை எடுத்துக் காட்டிச் சிறுவரிடையே தன்னம்பிக்கையை வளர்க்கும் நாடகத்தைக் கொண்டது, இவரது 'வளநாடும் இளங்கன்றும்' என்னும் நூல். இந்நூலில் குமரகுருபரர், கரிகால் வளவன் ஆகியோரது பெருமையை எடுத்துக்காட்டும் மற்றும் இரு நாடகங்களும் உள்ளன. 'கூண்டுக்கிளி' என்ற தலைப்பில், முன்பு இவர் எழுதிய சிறந்த கதையை, நாடகமாக்கியுள்ளார். 'சிறுவர் நாடக விருந்து', 'வாழையடி வாழை' ஆகிய நாடகங்கள் நூல் வடிவில் வெளிவந்துள்ளன. 'The Pied Piper' என்ற ஆங்கிலக் கதையைத் தழுவி இவர் எழுதிய 'எலி வேட்டை', மற்றும் 'அழகுப் போட்டி', 'பூம்பூம் கல்யாணம்' போன்ற நாடகங்கள் நகைச்சுவை மிக்கவை.

படிப்பதற்கும் நடிப்பதற்கும் ஏற்ற நூற்றுக்கு மேற்பட்ட நாடகங்களை எழுதியவர் பூவண்ணன். நிறைய நாடக நூல்களை எழுதி வெளியிட்டிருப்பவரும் இவரே.

பலசாலியான ஒரு சிறுவனை உதைக்க விரும்பிய சிலர், அவன் தேசிய கீதம் பாடப்படும்போது அசையாமல் நிமிர்ந்து ஒழுங்காக நிற்பான் என்பதை அறிந்து, ஒருவனைக்கொண்டு 'ஜனகணமன' பாடச் செய்கின்றனர். சிறுவன் உடனே அசையாமல் நிற்க, அவர்கள்

அடிக்கின்றனர். என்னதான் அடித்தும் அசையாமல் நிற்கும் அவனது தேசப் பற்றைக் கண்டு, அடித்தவர்கள் மனம் மாறுகின்றனர். 'இதய நாதம், தேசிய கீதம்' என்ற பூவண்ணனின் இந்த நாடகம் பலமுறை மேடையேறியுள்ளது.

இவரது 'பெயர் தந்த பெருமை' என்னும் நாடகத்தில், நேரு என்னும் பெயர் கொண்ட சிறுவன் தீய செயல்களில் ஈடுபடுகிறான். ஆயினும், அவனது பெயரைக் கேட்டதும், அத்தகைய புனிதமான பெயரை உடையவன் தவறு செய்ய மாட்டான் எனப் பலரும் நினைத்து அவனைச் சும்மா விட்டுவிடுகிறார்கள். கடைசியில், அவன் அப்பெயருக்குள்ள மதிப்பை உணர்ந்து தூயவனாகிறான். இதுவும், பகைவனுக்கு அருளும் பண்பினை எடுத்துக் காட்டும் 'அன்பு நிலையம்' என்பதும் ஒருமணி நேர நாடகங்கள்.

க, கா சொல்லத் தெரியாத மணி 'காஞ்சி' என்பதைச், சாஞ்சி என்றும், 'கவி·காளமேகம்' என்பதை சவி சாளமேகம் என்றும் கூற அதனால் ஏற்படும் குழப்பங்களை நகைச்சுவையுடன் எடுத்துக் கூறும் இவரது 'எழுத்து மாறாட்டம்' என்னும் நாடகம் இதுவரை வானொலியிலும், தொலைக்காட்சியிலும், சிறுவர் மேடைகளிலும் நூறு முறைக்கு மேல் நடிக்கப்பெற்றிருக்கிறது. சிறுவர்க்கேற்ற சரித்திர நாடகமான 'கண்ணன் மண்டபம்', இளம்பிள்ளை வாதத்தால் பாதிக்கப்பட்ட சிறுவனைக் கதாநாயகனாகக்கொண்ட 'ஊன்றுகோல்', பணமும் படிப்பும் இருந்தால் போதா, பண்பும் தேவை என்பதை உணர்த்தும், குழந்தை எழுத்தாளர் சங்கப் பரிசு பெற்ற 'உப்பில்லாத பண்டம்' ஆகியவை பூவண்ணனின் நாடகங்களில் குறிப்பிடத் தக்கவை.

ஜி. கார்த்திகேயன் எழுதி மேடையேறிய நாடகங்கள் பல.

ஒரு வீட்டிலே நாலு குழந்தைகள் இருக்கின்றனர். வாய்ப்பாட்டு, வயலின், மிருதங்கம், கடம் ஆகிய ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவர் தேர்ச்சி பெற்றிருக்கின்றனர். ஆயினும், அவர்களுக்குள் ஒற்றுமை இல்லை. அந்த வீட்டுக்கு வெளியூரிலிருந்து வரும் ஓர் உறவுக்காரப் பெண், ஒரு தந்திரம் செய்து, நால்வரையும் ஒன்று சேர்த்து, ஒரு கச்சேரி நடத்த ஏற்பாடு செய்கிறாள். கச்சேரி களை கட்டுகிறது. ஒற்றுமையின் உயர்வு புரிகிறது. இசையுடன் கூடிய 'நாலும் இணைந்தால்...?' என்னும் இந்நாடகம் பலரது பாராட்டையும் பெற்றுப் பலமுறை மேடையேறியது. இவரது, 'அல்லாப் பிச்சை', 'கிட்டுவும் பட்டுவும்' போன்ற நாடகங்களும் பலமுறை நடிக்கப்பெற்றவை.

ஆர்வியின் 'கறுப்பு ராஜகுமாரி', ராஜத்தின் 'நல்ல மனிதர்', பாணனின் 'கடவுளைக் கண்டேன்', 'சமர்த்து மீனா', நெ. சி. தெய்வ

சிகாமணியின் 'ஒருநாள் அரசன்' போன்ற நாடகங்களும் சிறுவருக்கு ஏற்றவை. நம் தேச விடுதலையை விளக்கும் வைத்தண்ணாவின் 'இன்குலாப் சிந்தாபாத்', குழந்தை எழுத்தாளர் சங்கப் பரிசு பெற்ற எஸ். வஜ்ரவேலுவின் 'கண்ணன் எங்கள் சேவகன்', பி. வி கிரியின் 'வாழைப்பூ' போன்ற நாடகங்களும் சிறுவர் நாடக வளர்ச்சியைக் காட்டுகின்றன.

பள்ளிகளிலும், குழந்தைச் சங்கங்களிலும் பல நாடகங்களை நடத்தியவர்களில் எஸ். சாந்தலட்சுமி, கி. மா. பக்தவத்சலம், மு. தமிழரசு, மு. சிவம், நாகசண்முகம், அரு. சோமசுந்தரம் ஆகியோரைக் குறிப்பிட வேண்டும். இவர்களில் இசையும் நடனமும் கலந்த நாடகங்களை எழுதிப் புகழ்பெற்றவர் சாந்த லட்சுமி.

'பொன்னம்மா ஒரு புதுமைப் பெண்' என்ற, ஆலந்தூர் கோ. மோகனரங்கன் எழுதிய நாடகம் குழந்தை எழுத்தாளர் சங்க ஏவி. எம். தங்கப் பதக்கம் பெற்றது. பொன்னம்மா, தனது அறிவாலும் பண்பாலும் சிறந்தவளாக, மற்றவர்களுக்கு வழிகாட்டி யாக விளங்குகிறாள். அதிகமாக வாயைத் திறந்து பேசாத பெண்ணைக் கலகலப்பாகவும், வாயாடியாக இருந்த பெண்ணை அடக்கமாகவும் பேசவைக்கிறாள். சர்க்கரை இல்லாமல் மருந்து சாப்பிட மாட்டேன் என்று அடம் பிடித்த சிறுவனைச் சர்க்கரை இன்றியே சாப்பிடச் செய்கிறாள். இவற்றிற்கெல்லாம் அவளது புத்திநுட்பமும், வாக்கு வன்மையும்தான் காரணம். எல்லாரும் அவளைப் போற்றுகிறார்கள். புதுமைப் பெண் என்று புகழ்கிறார்கள். 'வெற்றி எங்கள் கைகளிலே' என்ற கருத்துள்ள நாடகமும், 'நாங்கள் நல்லவர்கள்' என்ற நகைச் சுவை நாடகமும் இவரது நாடகங்களில் குறிப்பிடத்தக்கவை.

ஏவி. எம். தங்கப் பரிசு பெற்ற மற்றொரு நாடகம் கி. பானுமதி எழுதிய 'பண்பும் பாசமும்.'

தவறான பாதையில் செல்லும் அப்பாவின் மனத்தை மாற்ற என் னென்னவெல்லாமோ செய்து பார்த்த வள்ளி மனமுடைந்து, தெரு விலே சென்ற காரின் முன்னால் போய் விழுந்து உயிரைவிட முயலு கிறாள். உயிர் போகவில்லை; காலை இழந்துவிடுகிறாள். மகளின் நிலை அறிந்து மனம் திருந்துகிறார் தந்தை. இந்நாடகத்தில் உரையாடல் இயற்கையாக இருக்கிறது. வள்ளியின் பேச்சும், செயலும் நெஞ்சைத் தொடுகின்றன.

'ஒவ்வொரு மாணவனும் தனக்குப் பிடித்த—ஆனால் போற்றுதற் குரிய—படத்தைக் கொண்டுவரவேண்டும்; அவற்றில் சிறந்த ஒரு படத்தைத் தேர்ந்தெடுத்துப் பரிசு வழங்கப்படும்' எனப் பள்ளியில்

ஒரு போட்டியை அறிவிக்கிறார்கள். கடவுள்கள், தலைவர்கள், புலவர்கள், வீரர்கள் போன்றவர்களின் படங்களுக்கெல்லாம் கிடைக்காத பரிசு, வடிவழகன் கொண்டுவந்த பெற்றோர்களின் படத்திற்கே கிடைக்கிறது. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்று பெரியவர்கள் கூறியிருக்கிறார்கள். எனவே, என் பெற்றோர்களைப் போற்றி வருவதையே என் கடமையாகக் கொண்டுள்ளேன்'' என்று கூறுகிறான், சௌந்தர் எழுதிய 'பரிசுப் படம்' என்ற நாடகத்தில் வரும் வடிவழகன்.

குறுக்கு வழியில் பயன்பெற நினைப்பவரைத் திருத்தி, முயற்சியே வெற்றிக்கு அடிப்படை என உணர்த்தும் 'மாயமோதிரம்', எல்லாரையும் சமமாக மதிப்பதில்தான் இன்பமிருக்கிறது என்பதை விளக்கும் 'பிறந்த நாள் பரிசு' போன்ற பல நாடகங்களை சௌந்தர் எழுதியிருக்கிறார்.

'சிறுவர் நாடகக் கதைகள்' என்ற பெயரில் இரு நூல்களை ர. லட்சுமி எழுதி வெளியிட்டிருக்கிறார். நாடக மேடை எதுவும் இன்றிப் பேசும்போதும் படிக்கும்போதும் குழந்தைகள் தங்கள் நடிப்புத் திறனை வெளியிடும் வகையில், ஆங்கிலத்தில் பல நூல்கள் உண்டு. அவ்வகையைச் சார்ந்தவையே மேலே குறிப்பிட்ட இரு நூல்களும்.

குழந்தைகளுக்கான நாடகங்கள் கூடுமானவரை ஒரு மணி நேரத்திற்கு மேற்படாமல் இருப்பது நல்லது. நீண்ட நேரம் நடைபெறும் நாடகத்திற்கான வசனங்களை மனப்பாடம் செய்வதும், ஒப்பனை செய்துகொண்டு நீண்ட நேரம் இருப்பதும் குழந்தைகளுக்கு மிகுந்த சிரமமாயிருக்கும். அது மட்டுமல்ல;மாலை நேரங்களில் 3 மணி நேரம் நாடகம் ஒன்றை நடத்துவதானால், பார்க்கவரும் குழந்தைகளில் பலர் தூங்கிவிடுவர். இரவிலே நேரங்கடந்து உண்ண வேண்டிய கட்டாயமும் ஏற்படும். 3 மணி நேர நாடகங்களை டி. கே. எஸ். குழுவினர் போன்ற தொழில் நுட்பக் கலைஞர்களால் தான் சிறப்பாக நடத்த முடியும். வசதியும் அனுபவமும் அதிகமில்லாத சிறுவர் மன்றங்களோ, பள்ளிகளோ நடத்துவது கடினம்.

கூடுமானவரை குழந்தைகளின் சூழ்நிலையை வைத்துக் குழந்தைகளே நடிப்பதுதான் நல்லது. அப்பா, அம்மா பாத்திரங்களில் கூட, சற்று வயதான குழந்தைகள் நடிப்பதே நாடகத்திற்குச் சிறப்பளிக்கும். சிற்சில வரிகளிலே வசனங்கள் அமையவேண்டும். நீண்ட சொற்றொடர்களை நினைவில் வைத்து, நடிக்கும் குழந்தைகளால் பேச இயலாது. அப்படியே அவர்கள் மூச்சுப் பிடித்துப் பேசினாலும், பார்க்கும் குழந்தைகளுக்குப் பொறுமை இராது. வெளி

வந்துள்ள சில நாடக நூல்களில் 20, 30 வரிகள் கொண்ட வசனங்களைப் பல இடங்களில் காண்கிறோம். இது தவிர்க்கப்படவேண்டும்.

'அப்பாவின் ஆசை' நாடக விழாவிற்குத் தலைமை தாங்கிய அறிஞர் அண்ணா தமது பேச்சில் குறிப்பிட்டார்:

"தமது கற்பனையில் என்னென்ன தோன்றுகின்றனவோ அவற்றையெல்லாம் யார் வாயிலாகவாவது பேசவைக்க வேண்டும் என்று எழுத்தாளர்களுக்குத் தோன்றும். அந்த மயக்கத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு, சிறுவர்கள் எதைப் பேசுவார்களோ, எப்படிப் பேசுவார்களோ, எந்த வகையில் பேசுவார்களோ அந்த வகையிலே நாடகத்தை எழுதித்தரவேண்டும்." எழுத்தாளருக்குப் பயன் தரத்தக்கது அண்ணாவின் இவ்வறிவுரை.

குழந்தைகளுக்காக இதுவரை வெளிவந்துள்ள சில கதைகள் நாடகங்களாகியிருக்கின்றன. மேலும் பல நல்ல கதைகளை நாடகங்களாக்கலாம். பெரியோரின் இளமைப் பருவத்தில் நடந்த சுவையான நிகழ்ச்சிகளையும் விஞ்ஞான உண்மைகளை விளக்கும் கருத்துக்களையும் நாடகங்களாக்கலாம். நகைச்சுவை நாடகங்கள், பாட்டும் வசனமும் கலந்த நாடகங்கள், இசை நாடகங்கள் ஆகியன பல உருவாக வேண்டும்.

நாடகங்களின் மூலம் தெய்வபக்தி, தேசபக்தி, ஒற்றுமை உணர்வு, தன்னம்பிக்கை, விடாமுயற்சி, பிறர்க்குதவும் பெருங்குணம் ஆகியவற்றை எளிதிலே உணர்த்த முடியும்; பல பக்கங்கள் கொண்ட புத்தகத்தைக் காட்டிலும் பன்மடங்கு உணர்த்த முடியும்.

பெரியவர்களுக்காக நகரின் ஒவ்வொரு பகுதியிலும் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கலைமன்றங்கள் இருக்கின்றன. அவற்றைப் போல், குழந்தைகளுக்கான கலைமன்றங்களும், நகரின் பல பகுதிகளிலும் தோன்ற வேண்டும். குழந்தை நாடகங்கள் பெருகவும், குழந்தைகளின் கலைத்திறன் ஓங்கவும் இம்முயற்சி பெரிதும் உதவும். சென்னையில் இப்படிப்பட்ட குழந்தைகள் கலை மன்றங்கள் தோன்றினால், மற்ற நகரங்களும் சென்னையைப் பின் பற்றத் தொடங்கிவிடும்.

சென்னையிலும் மற்றும் தமிழகத்திலுள்ள பல நகரங்களிலும் சிறுவர்க்கென்றே தக்க வசதிகளுடன் கூடிய கலையரங்குகளை (Children's Theatre) அமைக்க அரசு முன் வரவேண்டும். பள்ளிகள், மருத்துவ விடுதிகள் போன்றவற்றை நிறுவுவதுபோல் சிறுவருக்கான கலையரங்குகளையும் வசதி படைத்தவர்கள் நிறுவினால், அதுவும் பயனுள்ள ஒரு பணியேயாகும்.

# வாழ்க்கை வரலாறு

இன்றுள்ள ஜனநாயக அமைப்பில், ஒரு குக்கிராமத்திலே, ஒரு சின்னஞ்சிறு குடிசையிலே பிறந்த குழந்தைகூட வருங்காலத்தில் நம் நாட்டிற்குப் பெருந்தொண்டாற்றலாம்; பெரும் பொறுப்பை ஏற்கலாம்; பெருமை தேடித் தரலாம். குழந்தைகள் அப்படிப்பட்ட நிலையை அடைவதற்கான அடித்தளத்தை அமைத்துத் தருவதில் கணிசமான பங்கு வாழ்க்கை வரலாற்று நூல்களுக்கு உண்டு.

தமிழில் குழந்தைகளுக்கான வாழ்க்கை வரலாற்று நூல்கள் பல நல்ல முறையில் வெளிவந்துள்ளன ஆசிரியரே நேரடியாக ஒருவரது வாழ்க்கையை எடுத்துக் கூறும் நூல்களே மிகுதியாக உள்ளன. உரையாடல் வாயிலாக வாழ்க்கை வரலாற்றை எடுத்துக் கூறும் நூல்களும் உண்டு. வண்ணப் படங்கள் கொண்ட சில நூல் களும், சித்திரக் கதை போல வாழ்க்கையைக் கூறும் சில நூல்களும், புகைப்படங்கள் நிறைந்த ஒருசில நூல்களும் தமிழிலே வெளி வந்துள்ளன. ஒருவர் பிறந்தது முதல் மறையும் வரை அவரது வாழ்க்கையைக் கூறுவது ஒரு வகை. ஒருவரது வாழ்க்கையில் நடந்த பல நிகழ்ச்சிகளைத் தொகுத்துக் கூறுவது மற்றொரு வகை இன்னொரு வகையும் உண்டு. பலரது வாழ்க்கையில் நடந்த சுவை யான நிகழ்ச்சிகளை ஒரே நூலில் எடுத்துக் கூறுவதே அது. இவ்வகைகள் அனைத்தையும் எழுத்தாள நண்பர்கள் ஏற்ற முறையில் கையாண்டுள்ளனர்.

ஒரு வீடு அல்லது நாடு முன்னேற வேண்டுமானால், அந்த வீட்டுக்கு அல்லது நாட்டுக்கு நற்பணியாற்றியவர்களை மறந்து விடக் கூடாது. நம்முடைய அப்பாவைப் பற்றி நாம் நம் குழந்தை களுக்குக் கூறினால்தான் அவர்கள் தங்களுடைய குழந்தைகளுக்கு நம்மைப் பற்றிக் கூறுவார்கள்.

பள்ளிப் பாட நூல்களில் சில தலைவர்களைப் பற்றிய கட்டுரை களைக் காணலாம். அவற்றில், இரண்டு மூன்று பக்கங்களில் ஒருசில செய்திகளைத்தான் கூறமுடியும். பாடம் நடத்தும் ஆசிரியர் மேலும் சில விவரங்களைக் கூறி, அத்தலைவர்களைப் பற்றி வெளிவந்த நூல்களை நூல் நிலையத்தில் படித்து அறியுமாறு தூண்டவேண்டும்.

பெரியோரின் வாழ்க்கை வரலாறுகள் பொதுவாக எல்லா ருக்குமே வழிகாட்டும் ஒளி விளக்குகள். ஆயினும், வளரும் குழந்தைகளுக்கு அவை பெரிதும் பயன்படுகின்றன.

40 ஆண்டுகளுக்கு முன்பு எம். எஸ். சுப்பிரமணிய அய்யர், நாரண துரைக்கண்ணன் போன்றவர்கள் எளிய நடையில் தேசத் தலைவர்கள், விஞ்ஞானிகள், கவிஞர்கள் முதலியவர்களின் வாழ்க்கை வரலாறுகளைச் சிறுசிறு நூல்களாகக் குறைந்த விலையில் எழுதி வெளியிட்டனர்.

கி. வா. ஜகந்நாதன், 'கண்ணன்' பத்திரிகையில் 25 ஆண்டுகளுக்கு முன்பு, சில பெரியவர்களின் இளமைப் பருவ நிகழ்ச்சிகளை 'விளையும் பயிர்' என்ற தலைப்பில் தொடராக எழுதிவந்தார். தமிழின் பெருமைக்குக் காரணமாயிருந்த புலவர்களைப் பற்றி, 'கண்ண'னில் இவர் எழுதிவந்த 'கவிஞர் கதை'யும் கதைபோல மிகச் சுவையுடையது. இரண்டுமே நூல் வடிவில் வந்துள்ளன. 1950-ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்ற 'பூஞ்சோலை'யின் ஆரம்ப இதழிலிருந்து பல பெருமக்கள், 'நான் சிறுவனாக இருந்த போது' என்ற தலைப்பில் தத்தமது இளமைப் பருவ நிகழ்ச்சிகளை அவர்களே எழுதினர். குழந்தைகளுக்காக எழுதிப் புகழ்பெற்ற சில எழுத்தாளர்களை நேரிலே பேட்டி கண்டு, விவரங்களைத் திரட்டி, 'சிறுவருக்கு எழுதும் பெரியோர்' என்ற தலைப்பில் தம்பி சீனிவாசன் அக்காலத்தில் 'பூஞ்சோலை'யில் எழுதிய கட்டுரைகள் வரலாற்றுத் துறையிலே ஒரு புது முயற்சியெனப் போற்றப்பெற்றது.

இன்று 200-க்கு மேற்பட்ட வாழ்க்கை வரலாற்று நூல்கள் வெளி வந்துள்ளன. பழனியப்பா பிரதர்ஸ் வெளியிட்டு வரும் 'நாட்டுக் குழைத்த நல்லவர்கள்' வரிசையும், 'அறிவியல் அறிஞர்' வரிசையும், வானதி பதிப்பகம் வெளியிட்டுவரும் வாழ்க்கை வரலாற்று நூல் களும் நல்ல வரவேற்பைப் பெற்றுள்ளன. இந்த நூல்களில் பல வற்றை எழுதியவர்களில் எம். வி. வெங்கட்ராமன், தி. ஊ. கலிய பெருமாள், நாகசண்முகம், செந்துறை முத்து ஆகியோர் குறிப் பிடத்தக்கவர்கள்.

குழந்தைகளை நேரிலே கூட்டிவைத்துக்கொண்டு கதை சொல்வது போல, தி. ஜ. ர. எழுதிய இரு நூல்கள் 'பாப்பாவுக்குப் பாரதி', 'பாப்பாவுக்கு காந்தி'. இவற்றுள் 'பாப்பாவுக்குப் பாரதி' தமிழக அரசின் பரிசு பெற்ற நூல்.

தி. ஜ. ர. வைப்போலவே சிறு குழந்தைகளுக்கும் புரியும்படி வாழ்க்கை வரலாற்று நூல்களை நெ. து. சுந்தரவடிவேலு எழுதி யிருக்கிறார். 'வள்ளுவன் வரிசை'யில் வெளியாகியுள்ள அந்நூல்கள் குழந்தையுடன் அண்ணா, அப்பா, அல்லது அம்மா உரையாடும் முறையில் அமைந்தவை. 'தோற்றும் வென்றவர்' என, கணித மேதை இராமானுஜத்தைப் பற்றியும், 'தங்கத் தாத்தா' என

ஆல்பர்ட் சுவைட்சரைப் பற்றியும், 'விளக்குப் பாவை' என ஃபிளாரென்ஸ் நைட்டிங்கேலைப் பற்றியும் அவர் பிள்ளைகளுக்குப் பிரியமான தலைப்புக்களைக் கொடுத்திருக்கிறார்.

வினா-விடையாக வாழ்க்கை வரலாற்றை எழுதி வெற்றி பெற்றவர்களுள் ஒருவர் மா. சண்முகசுப்பிரமணியம். காந்தியடிகளைப் போன்று பொதுநல முன்னேற்றத்திற்காகத் தம் உயிரைப் பணயமாக வைத்துப் போராடிய மார்டின் லூதர் கிங்கைப் பற்றி 'அமெரிக்கக் காந்தி' என்ற பெயரில் இவர் எழுதிய நூல் ஒரு சிறந்த நூல். இவரது 'நேரு மாமா' என்ற நூலும் 'சிங்கத் தமிழர் சிதம்பரனார்' என்ற நூலும் தமிழக அரசின் பரிசு பெற்றவை.

தேசத் தந்தை மகாத்மா காந்தியைப் பற்றிப் பல நூல்கள் வெளிவந்துள்ளன. எஸ். ஏ. ரஹீமின் 'வழிகாட்டிய உத்தமர்', எம். வேலுச்சாமியின் அன்பு வழி நடந்த அண்ணல்', மீ வி. சபரி ராஜனின் 'சத்திய வேட்கை' ஆகிய மூன்றும் தமிழக அரசின் பரிசு பெற்றவை. புதுக்கோட்டைத் தமிழ் நிலையம் வெளியிட்டுள்ள 'காந்தித் தாத்தா' என்ற நூலும் குறிப்பிடத்தக்கது. காந்திஜியைப் பற்றி நேஷனல் புத்தக டிரஸ்டும், பப்ளிகேஷன்ஸ் டிவிஷனும் வெளியிட்ட சில நூல்கள் தமிழிலே வெளி வந்துள்ளன.

நேருவைப் பற்றியும் பல நூல்கள் வெளிவந்துள்ளன பொ. திருகூடசுந்தரம் எழுதிய 'ஜவகர் கதை', முதல் முதலாக வாழ்க்கை வரலாற்றுப் பிரிவில் தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசைப் பெற்றது. வை. சுப்பிரமணியத்தின் 'நேருவின் கதை' இந்திய அரசின் பரிசு பெற்றது. பெண் எழுத்தாளரில் இருவர், வாழ்க்கை வரலாற்று நூல்கள் எழுதி, இந்திய அரசினர் பரிசு பெற்றுள்ளனர். 'கௌதம புத்தர்' என்னும் நூலை எழுதிய ஆர். வஜ்ரேஸ்வரியும், 'தாகூரின் வாழ்விலே' எனும் நூலை எழுதிய அ. திலகவதியுமே அவர்கள்.

இந்திய அரசினரும் தமிழக அரசினரும் கடந்த 24 ஆண்டுகளாகத்தான் குழந்தை நூல்களுக்குப் பரிசு வழங்கி வருகின்றனர். இதுவரை வழங்கப்பட்டுள்ள 65 அரசினர் பரிசுகளில் வாழ்க்கை வரலாற்று நூல்களுக்குக் கிடைத்த பரிசுகள் 21.

ஆர். வி யின் 'அருள் பெற்ற கவிஞர்கள்', நெ. சி. தெய்வசிகாமணியின் 'பாரதப் பெருமகன் ஜாகிர் உசேன்', ரமணீயனின் 'ராஜாஜியின் கதை', ய. லட்சுமிநாராயணனின் 'டாக்டர் 'விஸ்வேசுவரய்யா' முதலியவை சிறுவருக்குப் பயன்தரும் நூல்கள். ராஜரங்கன் எழுதிய 'ராஜாஜியின் கதை' யும் குறிப்பிடத்தக்க ஒரு நூல். குழந்தை எழுத்தாளர் சங்க ஏ. வி. எம். பரிசு பெற்றவை.

தி. சு. கலியபெருமாளின் 'சர். சி. வி ராமன்', வைத்தண்ணாவின் 'டாக்டர் ஹாஃப்கின், ஆழி வே. ராமசாமியின் 'இசை வளர்த்த தியாகேசர்', கே. பி. நீலமணியின் அன்னை தெரசா', எஸ். ராஜ லட்சுமியின் 'திரு வி. க', பூவண்ணனின் 'வீர மாமுனிவர்.' (இந்த நூல் இந்திய அரசினரின் பரிசையும் பெற்றுள்ளது.)

விஞ்ஞானிகளில் பலரது வாழ்க்கை வரலாறுகளைப் பெ. நா. அப்புஸ்வாமி எழுதியிருக்கிறார். கி. மா. பக்தவத்சலம் எழுதிய 'கண்டு பிடித்தவர் கதை', வே. தில்லைநாயகம் எழுதிய 'புதியன கண்டவர்', ஆழி வே. ராமசாமியின் 'விந்தை மனிதர் வால்ட் டிஸ்னி' போன்ற நூல்கள் சிறுவர்கள் விரும்பிப் படிக்கும் வகையில் எழுதப் பெற்றுள்ளன.

'சென்னைச் சிலைகளின் கதை' என்ற நூலில், சென்னையிலுள்ள சிலைகளைச் சுற்றிப் பார்க்கும் முருகன், செல்வி, மாமா மூவரின் உரை யாடல் மூலமாக 45 பெருமக்களின் வரலாற்றைச் சுருக்கமாக அறிய லாம். ஒவ்வொரு சிலையின் படத்தோடும் வெளிவந்துள்ள என். கே. வேலனின் இந்நூல் ஒரு புதுமையே.

பெரியோரின் வாழ்க்கையில் நடந்த சுவையான சம்பவங்களைத் தொகுத்துக் கூறும் நூல்கள், தணிகை உலகநாதனின் 'சிறியவரும் பெரியவரே', அழ. வள்ளியப்பாவின் 'பெரியோர் வாழ்விலே' (இரு தொகுதிகள்), 'சின்னஞ்சிறு வயதில்', 'பிள்ளைப் பருவத்திலே' நேருவின் வாழ்விலே நடந்த சுவையான நிகழ்ச்சிகளைப் புகைப்படத் துடன் கூறும் 'நேருவும் குழந்தைகளும்', உலகப் புகழ் பெற்ற குழந்தைக் கதாசிரியர்களைப்பற்றிக் கூறும் 'கதை சொன்னவர் கதை' (3 தொகுதிகள்) தமிழக அரசின் பரிசு பெற்ற அப்துல் கரீமின் 'கவிதை தந்தவர் கதை' ஆகியவையும் வரலாற்றுத் துறையில் புது முயற்சிகளே.

காந்தி, நேரு ஆகிய இரு தலைவர்களின் வாழ்க்கை வரலாறு, வண்ணச் சித்திரக் கதைகளாகவும் வெளிவந்துள்ளன.

பெரியோரின் வாழ்க்கை வரலாற்று நூல்கள் பலவற்றில் இளமைப் பருவ நிகழ்ச்சிகளுக்குச் சிறப்பிடம் அளித்து எழுதப் பட்டுள்ளதைக் காண்கிறோம். இதனால், அப்பெரியவர்கள் குழந்தை களாக இருந்த நிலையைக் குழந்தைகள் மனக்கண்களால் கண்டு, அவர்களுடன் ஓர் உறவை ஏற்படுத்திக்கொள்ளுகின்றனர்.

சிலர் வெறும் அடைமொழிகளை அடுக்கியும், 'தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார், தோன்றலில் தோன்றாமை நன்று',

'மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி, இவன்தந்தை—என்னோற்றான் கொல்எனும் சொல்' என்பன போன்ற மேற்கோள்களை அளவுக்கு அதிகமாக எடுத்துக்காட்டியும் நூலை நிரப்பிவிடுகின்றனர். பெரியவர்கள் எப்படிப் படிப்படியாக உயர்ந்தனர் என்பதை வரைபடம் (Graph) போட்டுக் காட்டுவதுபோல் காட்ட வேண்டும். அவர்களது வாழ்க்கைப் பாதையில் ஏற்பட்ட இன்னல்களை, அவர்கள் எவ்வாறு சமாளித்தனர், அவர்களால் விளைந்த நன்மைகள் யாவை இவற்றையெல்லாம் கற்பனைக் கதைபோல—ஆனால், உண்மைக்குப் புறம்பில்லாமல்—சுவைபடக் கூறினால், குழந்தைகள் மனத்திலே நன்கு பதிந்துவிடும்.

பெரியோரது வாழ்க்கை வரலாற்றை எழுதும்போது மனித நிலைக்கு அப்பாற்பட்ட அற்புதங்கள் நிகழ்ந்ததாலோ, மாயா ஜால மந்திர தந்திரங்களாலோ அவர்கள் உயர்வுற்றது போன்ற தோற்றத்தை நாம் உண்டாக்கிவிடலாகாது. அவர்களும் நம்மைப் போல் சிறுவராக இருந்து தன்னம்பிக்கை, தளராத முயற்சி, அறிவுத் திறன், அயராத உழைப்பு, உயர்ந்த குணம், ஊருக்குதவும் பண்பு—இவற்றில் ஒன்றோ பலவோ அவர்களிடம் இருந்ததால்தான் புகழேணியில் ஏறினர் என்ற உண்மையை உணர்த்திக் குழந்தைகளிடையே தன்னம்பிக்கையை வளர்க்க வேண்டும்.

சில தேசத் தலைவர்களின் வாழ்க்கை வரலாறுகளில் ஒத்துழையாமை இயக்கம், உப்புச் சத்தியாக்கிரகம், ஆகஸ்டுப் புரட்சி போன்ற சொற்றொடர்களுக்கு எந்த விதமான விளக்கமும் இருப்பதில்லை. இதனால், அவை தொடர்பான நிகழ்ச்சிகளின் உண்மையான தன்மையை இன்றுள்ள குழந்தைகளால் நன்கு உணர முடியாமல் போகிறது. விஞ்ஞானிகளின் வாழ்க்கையைக் கூறும் போதும் அவர்களுக்கு விஞ்ஞானத்தில் எவ்வாறு ஈடுபாடு ஏற்பட்டது, அவர்களை விஞ்ஞானிகளாக்கிய சூழ்நிலைகள் யாவை, அவர்களது செயற்கரிய செயலால் அல்லது புதிய கண்டுபிடிப்புக்களால் எந்தெந்த வகையில் மனித குலம் நன்மை அடைந்துள்ளது என்பதையும் குழந்தைகள் புரிந்துகொள்ளும் முறையிலே தக்க விளக்கங்களுடன் எழுத வேண்டும்.

நல்ல வரலாற்று நூல்களால் நல்ல தலைவர்களை உருவாக்க முடியும்; அவர்களால் நாடு நலம் பெறும்; உலகம் உய்வுறும்.

# அறிவியல்

கடலில் அலைகள் அடிப்பதேன்?—அந்தக்
கடல்தான் உலகில் இருப்பதேன்?
பறவை வானில் பறப்பதேன்? — மனிதன்
பறவா திங்கே இருப்பதேன்?
கற்கள் எரியா திருப்பதேன்?—நிலக்
கரிதான் எரித்தால் எரிவதேன்?

—இப்படி ஒரு சிறுவன் கேட்பதாகப் பாடப்பட்டுள்ள ருஷ்ய நாட்டுக் கவிதையைத் தமிழிலே தந்திருக்கிறுர்; அ. கி. பரந்தாமனுர்.

வளர்ந்துவரும் விஞ்ஞான உலகில், நவீன சாதனங்கள் பல வற்றை அன்ருட வாழ்விலே பார்த்தும், பயன்படுத்தியும் வரும் குழந்தைக்குப் பல சந்தேகங்கள் தோன்றுகின்றன. பெற்ருேரையோ, மற்ருேரையோ கேட்டுத் தெரிந்துகொள்ளக் குழந்தை ஆசைப்படு கின்றது. ஆனல், பெரும்பாலான பெற்ருேர்களுக்குப் பதில் சொல்லத் தெரியாதிருக்கிறது. சிலர், குழந்தையின் கேள்வியைக் காதில் வாங்காததுபோல் இருந்துவிடுகின்றனர். வேறு சிலர், "அதிகப் பிரசங்கி, தொந்தரவு செய்யாமல் வாயை மூடு" என அரட்டி உருட்டி அடக்க முயலுகின்றனர். குழந்தைகளின் அறிவுப் பசியைத் தீர்க்க அடக்குமுறை பயன்படாது. புத்தம் புதிய கலை களைப் பற்றிய நூல்களால்தான் அவர்களின் அறிவுப் பசியை அடக்க முடியும்.

ஏன்? எப்படி? யார்?—இந்த மூன்று கேள்விகளும் அடிக்கடி குழந்தைகள் உள்ளத்தில் எழுகின்றன. ஆயினும், மிகச்சிறு குழந்தை களைக்காட்டிலும்; சற்று வளர்ந்த குழந்தைகளுக்கே அறிவியல் நூல்கள் அதிகமாகப் பயன்படுகின்றன.

தமிழிலே இதுவரை சிறுவருக்கான அறிவியல் நூல்கள் ஏறத் தாழ 300 வெளிவந்துள்ளன. இரசாயனம், பௌதிகம், பூமி இயல், வான இயல், தாவர இயல், விலங்கியல், கடலியல் போன்ற பல துறைகளிலும் நூல்கள் வெளிவந்துள்ளன. இவற்றில் எட்டு நூல்கள் இந்திய அரசினர் பரிசையும், பன்னிரண்டு நூல்கள் தமிழக அரசினர் பரிசையும், நான்கு நூல்கள் யுனெஸ்கோ பரிசையும், ஏழு நூல்கள் குழந்தை எழுத்தாளர் சங்கப் பரிசையும், மூன்று நூல்கள் தென் மொழிப் புத்தக டிரஸ்ட்டுப் பரிசையும் பெற்றுள்ளன.

வியப்பிலே நம்மை ஆழ்த்தும் விஞ்ஞானம் போலவே, தமிழில் இதுவரை சிறுவருக்காக வெளிவந்துள்ள விஞ்ஞான நூல்களைப் பற்றிய விவரங்களும் நம்மை வியப்பிலே ஆழ்த்துகின்றன. ஆயினும், இந்நூலாசிரியர்களில் எவருமே ஆராய்ச்சியில் ஈடுபட்டு விஞ்ஞானி களாக வாழ்க்கை நடத்துபவரல்லர். பள்ளியிலோ, கல்லூரியிலோ தாங்கள் கற்ற விஞ்ஞான அறிவைக்கொண்டும், அறிவியல் துறையில் ஆர்வங்கொண்டு தாங்களாகவே பல ஆங்கில நூல்களைப் படித்து அறிந்தும், நூல்கள் எழுதி வருபவரே பெரும்பாலோர்.

ஓர் அறிவியல் நூலைப் படித்து முடித்த பிறகு, ''நான் இந்த நூலைப் படிப்பதற்கு முன்பு பெற்றிருந்த அறிவைவிட, இப்போது சற்று அதிகமான அறிவைப் பெற்றிருக்கிறேன்' என்ற எண்ணம் சிறுவருக்கு ஏற்படுகிறது. இத்தகைய மன நிறைவையும், தன்னம் பிக்கையையும் அளிக்கின்ற பல நூல்கள் தமிழிலே உள்ளன என்பதுகூடப் பலருக்குத் தெரியாது.

முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பே, பள்ளிகளில் விஞ்ஞானப் பாடங்களைத் தமிழில் சொல்லிக் கொடுக்கத் தொடங்கினர். அப்போது வெளிவந்த விஞ்ஞான நூல்களில், அறிவியல் தொடர் பான கலைச்சொற்களுக்குப் பெரும்பாலும் சம்ஸ்கிருதச் சொற் களையே பயன்படுத்தி வந்தனர். இந்நிலை சிறிது சிறிதாக மாறி இப்போது நல்ல பல கலைச்சொற்களைத் தமிழில் ஆக்கியுள்ளனர். இக்கலைச்சொற்களைத் தக்க முறையில் சிறுவருக்காக அறிவியல் நூல்களை எழுதுவோர் பயன்படுத்தி வருகின்றனர்.

அறிவியல்களைக் கதைபோல் கூறினால்தான் குழந்தைகளுக்குப் பிடிக்கிறது என்பதை உணர்ந்து பலர் கதைபோலச் சுவையாக எழுதி உள்ளனர். சிலர் வினா—விடை முறையைப் பின்பற்றி யுள்ளனர். வேறு சிலர் தாங்களே நேரில் கூறுவதுபோல் எழுதி யுள்ளனர்.

தமிழில் அறிவியல் நூல்களை எழுதி வழிகாட்டிய பெ. நா. அப்புஸ்வாமி, சிறுவருக்கான அறிவியல் நூல்கள் பல ஆக்கித் தந்துள் ளார். 'விஞ்ஞானக் கதைகள்' என்ற வரிசையில் 25 ஆண்டுகளுக்கு முன்பு அவர் எழுதிய நூல்கள், கதைபோல் அறிவியல் நூல்களை எழுதுவோருக்கு வழிகாட்டியாக அமைந்துள்ளன. 'முயல் கூண்டு', 'நான் ராஜாவாக இருந்தால்', 'முருக்கம் விதையும் சைக்கிள் பம்பும்' என்ற தலைப்புக்களில் அவர் எழுதியுள்ளவை மிகவும் பயன் தருபவை யுனெஸ்கோ பரிசு பெற்ற இவரது 'வானத்தைப் பார்ப் போம்', தந்தி, டெலிபோன், ரேடியோ, மைக்ராஸ்கோப், ஜெட் விமானம் போன்ற பலவற்றைப் பற்றிப் படக்கதைகளாக வெளி

வந்துள்ள 'விஞ்ஞானம் பேசுகிறார்', 'இரயிலின் கதை', 'இந்திய நாட்டு விலங்குகள்', இவர் மொழிபெயர்த்த 'விண்வெளிப் பயணம்', 'ராக்கெட்டுகளும் துணைக்கோள்களும்' ஆகிய நூல்கள் அறிவியல் துறைக்கு ஆக்கம் தரும் நூல்கள் ஆகும்.

என். கே. வேலன் தொடாத துறையே இல்லை. அவர் எழுதிய 'காற்றின் கதை', 'கடலின் கதை', 'நிலவின் கதை', 'மலையின் கதை', 'ஆற்றின் கதை', 'உப்பின் கதை', 'சூரியனின் கதை', 'ஒளியின் கதை', 'யானையின் கதை', 'ஒட்டகத்தின் கதை', 'மின்சாரத்தின் கதை', 'நிலவைச் சுற்றிய கதை', 'சிறுவர்க்கான அணுவின் கதை' எனக் கதைபோல அவர் இருபதுக்கு மேற்பட்ட நூல்களை எழுதியிருக்கிறார். இவற்றில் 'நிலவைச் சுற்றிய கதை', மனிதன் நிலவில் இறங்கிய மூன்று மாதங்களில் எழுதி வெளிவந்த நூல் என்பது குறிப்பிடத்தக்கது. இந்த நூலுக்கும், 'மின்சாரத்தின் கதை' என்ற நூலுக்கும் தமிழக அரசு பரிசளித்துள்ளது. பறவைகள், பூச்சிகள், மனித உடல், மலை ஏறுதல் போன்ற பலவற்றைப் பற்றியும் வினா—விடை முறையில் இவர் எழுதிய 'மாமாவின் ஆராய்ச்சிகள்' என்ற நூல் குழந்தை எழுத்தாளர் சங்கப் பரிசும், தமிழக அரசின் பரிசும் பெற்ற நூல்.

இந்திய அரசு, இந்திய மொழிகள் ஒவ்வொன்றிலும் வெளியாகும் குழந்தை நூல்களுக்குப் பரிசளிக்கும் திட்டத்தை ஏற்படுத்தி, 1955-ஆம் ஆண்டுமுதல் பரிசுகள் வழங்கி வருகிறது. முதல் முதலாகத் தமிழில் இப்பரிசைப் பெற்ற நூல் ஓர் அறிவியல் நூல்தான். ராமுவுக்கும் அவன் அண்ணனுக்கும் நடைபெறும் உரையாடல் மூலம் பல விஞ்ஞான அற்புதங்களை விளக்கும் 'ராமுவும் நானும்' என்ற நூல்தான் அது. இந்நூலை எழுதியவர் நா. கி. நாகராசன். கஸ்தூரி என்னும் சிறுமி கனவிலே பூச்சிகளுடனும், பறவைகளுடனும், மிருகங்களுடனும் பேசிப் பல விஞ்ஞான உண்மைகளைத் தெரிந்துகொள்ளுகிறாள், இவரது மற்றொரு நூலாகிய 'கஸ்தூரியின் பிறந்த நாள்' என்ற நூலில் இதுவும் இந்திய அரசினர் பரிசு பெற்ற நூல். இவரது இன்னொரு நூலாகிய 'பாபுவின் கனவும் அறிவு விளக்கத்திற்கு வழிகாட்டும் ஒரு நூலாகும்.

அறிவியல் நூல்களை எழுதி அதிகமான பரிசுகளைப் பெற்றவர் கல்வி கோபாலகிருஷ்ணன். இந்திய அரசிடமிருந்து ஆறு பரிசுகளும், யுனெஸ்கோவிடமிருந்து மூன்று பரிசுகளும், தென்மொழிப் புத்தக டிரஸ்டிடமிருந்து ஒரு பரிசும் ஆகப் பத்துப் பரிசுகள் பெற்றவர்.

இவரது 'பறக்கும் பாப்பா' என்ற நூலில் செய்தித்தாளிலிருந்து கத்தரிக்கப்பட்ட ஒரு குழந்தை உயிர்பெற்றுக் காற்று

அண்ணனின் உதவியுடன் உலகின் பல பாகங்களுக்கும் பறந்து சென்று, அங்குள்ள மனிதர்கள், மிருகங்கள் பற்றிய செய்திகளை நேரிலே கண்டு அறிவதுபோல் கூறப்பட்டுள்ளது இந்நூலின் வெற்றியைத் தொடர்ந்து இவர் எழுதிய 'பண்டைய உலகில் பறக்கும் பாப்பா' எனும் நூல், உலகம் தோன்றிய வரலாற்றையும், 'பாதாள உலகில் பறக்கும் பாப்பா', எனும் நூல் கடல்வாழ் உயிரினங்களைப் பற்றியும் மிகுந்த சுவையாகக் கூறுகின்றன. 'பாதாள உலகில் பறக்கும் பாப்பா' இவரது நூறுவது நூல் என்பதும் குறிப்பிடத்தக்கது! குடும்பமாய் வாழும் தேனீக்கள், எறும்புகளின் வாழ்க்கையை எடுத்துக்கூறும் 'மிட்டாய்ப் பாப்பா', பூச்சிகளின் வாழ்க்கையை விளக்கும் 'மந்திரவாதியின் மகன்', தீ, காந்தம், மின்சாரம், நீராவி ஆகியவைபற்றிக் கூறும் 'சுண்டு விரல் சீமா', வானவெளிப் பயணத்தை விளக்கும் 'சந்திரனுக்குச் செல்வோம்', தாவரங்களின் கதையைக் கூறும் 'கானகக் கன்னி' ஆகிய கல்வி கோபால கிருஷ்ணனின் நூல்கள் அறிவுக்கு விருந்தாகவும், அதே சமயம் விறுவிறுப்பு மிக்க கதை போலவும் அமைந்திருக்கின்றன. கடிகார வடிவில் அமைந்த 'மணி என்ன?' என்ற இவரது நூல், தமிழ் நூல் வெளியீட்டில் ஒரு புதுமையைக் காட்டுகிறது.

குழந்தைகளுடனும், குழந்தைகளுக்காகப் பெருந்தொண்டாற்றிய மாண்டிசோரி அம்மையாருடனும் நெருங்கிப் பழகிய 'வைத்தண்ணு' இயற்றிய அறிவியல் நூல்கள் பல. அவற்றுள் இந்திய அரசின் பரிசு பெற்றது 'பீங்கான்' என்ற நூல்; தமிழக அரசின் பரிசு பெற்றவை 'பூச்சி வாழ்க்கை', 'விநோதக் குருவிகள்' என்ற இரு நூல்களும்.

குழந்தைகளின் மனம் என்னும் அரிய மொழியை அறிந்து கொண்ட வைத்தண்ணு, அவர்களுக்குத் தேவையான அறிவியல் கருத்துக்களைத் தெளிவான மிக எளிய நடையில் எழுதியிருக்கிறார். குழந்தைகளிடையே அரங்கேற்றிய பிறகே எழுத்துவடிவில் தருவது என்னும் இவரது கொள்கையால், இவரது நூல்கள் சிறப்புற்று விளங்குகின்றன.

இவர் எழுதிய அறிவியல் நூல்களில் குறிப்பிடத்தக்கவை: 'இயற்கை விந்தைகள்', 'வண்ணக் குருவிகள்', 'கடலிலே மத்தாப்பூ', 'கிருமிவேடன் லூயி பாஸ்டர்', 'மின்விளக்கு', 'புட்டிப்பால்', 'பசுவும் பாலும்', 'நாயும் பூனையும்' முதலியன.

இவரது 'செய்து பாருங்கள்; விஞ்ஞானியாகலாம்' என்ற நூலும், குழந்தை எழுத்தாளர் சங்கப் பரிசு பெற்ற 'காற்றுடன்

குட்டிப் பரிசோதனைகள்' என்ற நூலும், குழந்தைகள் பல எளிய சோதனைகளைச் செய்து பார்த்து மகிழவும், அவர்களின் விஞ்ஞான ஆர்வத்தைத் தூண்டவும் உதவும் நூல்கள். நல்ல வழியில் பொழுது போக்கவும், வேடிக்கையாகப் பல சோதனைகளைச் செய்து பார்த்து விஞ்ஞான விந்தைகளை அறியவும் உதவுகின்ற 'விஞ்ஞான வேடிக்கைகள்' என்ற ஆழி. வே. ராமசாமியின் நூலும் இந்த வகையைச் சேர்ந்ததே.

அண்மையில் நிகழ்ந்த அறிவியல் சாதனையையும் அழகிய சிறுவர் நூலாக எழுதித் தரமுடியும் என்பதற்கு கு. ராஜாராமின் 'பூமியைச் சுற்றும் ஆரியபட்டா' என்ற நூல் ஒரு சான்று. 1975-ஆம் ஆண்டு இந்திய விஞ்ஞானிகள் தயாரித்து விண் வெளியில் செலுத்திய செயற்கைத் துணைக்கோளைப்பற்றிய விவரங் களை ஆசிரியர் சுவைபடக் கூறியிருக்கிறார் இந்நூலில். இவரது 'மீன்' என்ற நூலும் 'மழை' என்ற நூலும் இந்திய அரசினர் பரிசு பெற்றவை உணவுப்பொருளை உற்பத்தி செய்ய உதவுவதோடு, தானே உணவுமாகப் பயன்படும் நீரைப்பற்றி இவர் எழுதிய 'நல்ல நீர்' என்ற நூலும், வானத்திலிருந்து எரிந்து விழுவது நட்சத்திர மல்ல என்பதை எடுத்துக்கூறும் 'எரிகற்கள்' என்ற (தமிழக அரசின் பரிசு பெற்ற) நூலும் சிறுவருக்குப் பயன் தருபவை.

ரப்பரைக் கொலம்பஸ் கண்டுபிடித்த காலம் முதல் இன்று வரை ரப்பர் எவ்வாறெல்லாம் பயன்பட்டு வருகிறது என்பதைச் சுவையாகக் கூறுகின்ற, நா. வானமாமலையும் எஸ். தோதாத்ரியும் கூட்டாக எழுதிய 'ரப்பரின் கதை' இந்திய அரசினரின் பரிசு பெற்ற நூல். இவை தவிர நா. வானமாமலையின் 'எரிபொருளின் கதை', 'தீயின் கதை', எஸ். எஸ். ராமசாமியின் 'எண்ணெயின் சக்தி' போன்ற நூல்களும் சிறுவர் படித்தறிய வேண்டிய பயனுள்ள நூல் களாகும்.

மரங்களின் வாழ்க்கையையும் அவற்றால் மனிதன் அடைகின்ற நன்மைகளையும் விளக்குகிறது, நாக முத்தையாவின் 'மரங்களின் கதை' என்ற நூல். யுனெஸ்கோ பரிசு பெற்ற இப்புத்தகத்தின் இறுதியில் மரங்களைப் பற்றிய பழமொழிகளும் கொடுக்கப்பட்டி ருப்பது பொருத்தமே. 'மரங்களின் உலகம்' என்ற பெயரில் ரஸ்கின் பாண்ட் எழுதி ஸி. ராஜப்பா மொழிபெயர்த்த மற்றொரு நூலும் உள்ளது. இது நேஷனல் புத்தக டிரஸ்டின் வெளியீடு. ச.ய சுப்பிர மணியம் எழுதிய 'காய்கறிக் குடும்பம்', எஸ் தோதாத்ரி எழுதிய 'செடியும் மனிதனும்' ஆகிய இரண்டும் தாவர இயல் பற்றிய நல்ல நூல்கள்.

உயிரினங்கள் பற்றிச் சிறுவர் விரும்பும் வகையில் கூறுகின்ற நூல்கள் பல உள்ளன.

வண்ணத்துப் பூச்சியே தன் கதையைக் கூறுவதுபோல் அமைந்த தமிழக அரசின் பரிசு பெற்ற 'வண்ணாத்திப் பூச்சி', பறவைகள் விலங்குகளைப் பற்றிய உண்மைக் கதைகளைக் கூறும் 'சமர்த்து மைனா' ஆகிய இரண்டும் தி. ஜ. ர. வின் சிறந்த நூல்களாகும். ஒவ்வொரு மிருகமும் தன் கதையைத் தானே கூறுவது போல், வெட்டி ஒட்டும் வண்ணப் படங்களுடன் கூடியது 'எங்கள் கதையைக் கேளுங்கள்' என்ற நூல். ஆடு, மாடு, புலி, மான் போன்ற மிருகங்களைத் தவிர, வேறு பல உயிர்களும் தங்கள் தோலைப் பதனிடத் தந்து உதவுகின்றன என்பதை சென்ட்ரல் லெதர் இன்ஸ்டிட்யூட் வெளியிட்டுள்ள—'தோல்தரும் பிராணிகள்' என்ற வண்ணப்பட நூலிலிருந்து அறியலாம். கங்காரு, சீல், நெருப்புக்கோழி போன்ற பிராணிகளின் தோல்களையும் பதனிட்டுப் பல சாமான்கள் செய்கிறார்களாம்!

பத்மா ராஜகோபாலனின் 'உலக விலங்குகள்', அநுத்தமாவின் 'பறவை இனங்கள்', தென் மொழிப் புத்தக டிரஸ்ட் பரிசு பெற்ற மா. பா. குருசாமியின் 'பார்க்கும் பறவைகள்', 'நம்மைச் சுற்றி நாற்பது உயிர்கள்' முதலியவையும் இத்துறையில் குறிப்பிடத்தக்க நூல்களாகும்.

'மந்திர வித்தை' எனும் மீ. லி. சபரிராஜனின் நூலில், வாய்க்குள் சென்ற உணவு, வயிற்றுக்குள் புகுந்து, எப்படி எப்படியெல்லாம் மாறுதல்கள் அடைகின்றன என்பதை முத்துவுக்கு அவன் அப்பாவுடன், சிறுகுடல், பெருங்குடல், இரைப்பை முதலியவைகளும் வேடிக்கையாகக் கூறுகின்றன. இது தென்மொழிப் புத்தக டிரஸ்டின் பரிசுடன் யுனெஸ்கோ பரிசும் பெற்ற புத்தகம். கண், காது, மூக்கு, வாய், தோல் ஆகியவற்றைப் பற்றிக் கூறும் தம் நூலுக்கு அ. நடராசன் 'அறிவு வாயில்கள்' எனப் பெயர் வைத்திருக்கிறார். நிறையப் படங்களுடன் வெளிவந்துள்ள ச. கு. கணபதி ஐயரின் 'உங்கள் ஆரோக்கியம்', ந. சுப்பு ரெட்டியாரின் 'நமது உடல்' ஆகிய நூல்களும் உடலியல் பற்றிக் கூறும் உயர்ந்த நூல்களாகும்.

குழந்தை எழுத்தாளர் சங்கப் பரிசு பெற்ற ஆழி வே. ராமசாமியின் 'தம்பிக்குத் திரைப்படம்', 'காந்தத்தின் கதை' ப. நா பாலசுப்பிரமணியனின் 'கு. மந்திரக்காளி', பிறையணிவோனின் 'தொலைபேசி', ஆர். பி. சாரதியின் 'காட்சி கண்காட்சியே' என்ற நூல்களும், தொலைபேசியின் வரலாற்றையும், அதைப் பயன்படுத்தும் முறை

களையும் விளக்கும் ராஜ்குமாரின் 'ஹலோ 9999' என்ற நூலும் சிறுவர் விரும்பும் வகையில் எழுதப் பெற்றுள்ளன. சிறுவர்கள், சில விஞ்ஞானக் கருவிகளைத் தாங்களே செய்வதற்கு வழிகாட்டும் வகையில் 'விஞ்ஞானி' என்பவர் மூன்று நூல்களை எழுதியுள்ளார். டிரான்ஸிஸ்டர் ரேடியோக்கள் செய்யும் முறைபற்றிக் கூறும் 'பிக்னிக் ரேடியோ', பேட்ரியில் இயங்கும் பேசும் கருவி பற்றிக் கூறும் 'டிரான்ஸ்போன்', மணி, ஹார்ன், தந்தி போன்ற எளிய மின்சாதனங்களை அமைக்கக் கற்றுத்தரும் 'நீங்களும் செய்யலாம்' ஆகிய நூல்களே அவைகள்.

நாக முத்தையாவின் 'பருவங்கள்', தங்கமணியின் 'ஐந்து பூதங்களின் கதை', ப. குணசேகர் எழுதித் தமிழக அரசின் பரிசு பெற்ற 'பூமி அன்னை' போன்ற நூல்களும், இந்திய அரசின் பரிசு பெற்ற 'திங்களோ திங்கள்' போன்ற நூலும் சிறுவர் அறிவு வளர்ச்சிக்குத் துணைபுரியும் வகையில் அமைந்துள்ளன.

நெ. து. சுந்தரவடிவேலு எழுதியுள்ள 'பாக்கு வெட்டி', 'மின் விளக்கு' ஆகிய இரண்டும் ஏழெட்டு வயதுக் குழந்தைக்குக்கூடப் புரியும்படி எளிய நடையில் அமைந்துள்ளன.

ஒரு குறிப்பிட்ட பொருளை வைத்து எழுதாமல், பொதுவாகப் பல விஞ்ஞான உண்மைகளைக் கூறுகின்ற பல நூல்களும் வெளி வந்துள்ளன. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை: பொ. திருகூட சுந்தரத்தின் 'அப்பாவும் மகனும்', பி. வி. கிரியின் 'அறிவியல் கதம்பம்', நெ. சி. தெய்வசிகாமணியின் 'சிறுவர் விஞ்ஞானக் கதைகள்', தங்கமணியின் 'அறிவியல் சிறுகதைகள்', ப. நா. பால சுப்பிரமணியனின் 'வாழ்க்கைக்கு விஞ்ஞானம்', ர. சண்முகத்தின் 'வியப்பூட்டும் விஞ்ஞானம்', 'விஞ்ஞான உண்மைகள்', பூவை அமுதனின் 'அறிவியல் கருவிகள்'.

வாழ்க்கையில் நாம் அன்றாடம் காணும் பல்வேறு பொருள்கள் முதன் முதலில் உருவானதற்கான சூழ்நிலை, காரணம், உருவாக்கியவர் பற்றிய குறிப்புக்கள் கொண்ட 'தோன்றியது எப்படி?' என்ற நூலையும், ஆங்கில மருத்துவத்தின் தோற்றம், வளர்ச்சி பற்றிக் கூறும் 'மருத்துவம் பிறந்த கதை' என்ற நூலையும் கதைபோல எழுதியிருக்கிறார் வாண்டு மாமா.

தமிழில் மொழி பெயர்க்கப்பெற்றுள்ள சிறுவர்க்கான அறிவியல் நூல்கள் பல. அவற்றுள் பெர்த்தா மாரிஸ் பார்க்கர் ஆங்கிலத்தில் எழுதி வி. பூவராகமூர்த்தி மொழி பெயர்த்த 'விஞ்ஞானியாக வேண்டுமா?' என்ற நூலும், நம் வாழ்க்கையில்

புரட்சிகரமான மாறுதல்களை ஏற்படுத்தியுள்ள கண்டுபிடிப்புக்களைப் பற்றிக் கூறும் 'உலகை மாற்றிய புதுப் புனைவுகள்' என்ற இரு பாகங்கள் கொண்ட நூலும் (மொழி பெயர்ப்பு: வைத்தண்ணு, ருத்ரதுளசிதாஸ்), குமாரபுரம் தேவதாஸ் மலையாளத்தில் எழுதி மணவை முஸ்தபா மொழி பெயர்த்த 'பறக்கும் பூக்கள்' என்ற நூலும் மொழி பெயர்ப்பு நூல்களில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவை.

மேலே குறிப்பிட்டுள்ள நூல்களைத் தவிர சிறுவருக்குப் பயன் தரும் பல நூல்கள் தமிழில் வெளிவந்துள்ளன. ஒரே பொருளைப் பற்றி ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் வெளி வந்திருப்பதையும் இங்கே குறிப்பிடவேண்டும்.

ரப்பரைப் பற்றி மூவர் எழுதியுள்ளனர். 'ரப்பரான் கதை' என்ற பெயரில் நா. வானமாமலையும் எஸ். தோதாத்ரியும் கூட்டாக எழுதிய நூலைப்பற்றி முன்பு பார்த்தோம். 'ரப்பரின் கதை' என்ற பெயரிலே கே. எஸ். லட்சுமணனும், 'ரப்பர் கதை' என்ற பெயரில் என். கே. வேலனும் எழுதியிருக்கிறார்கள். நீரைப்பற்றி மூன்று நூல்களும் (கு. ராஜாராமின் 'நல்ல நீர்', எஸ். நாகராஜனின் 'தண்ணீர்', என். கே. வேலனின் 'நீரின் கதை') காகிதத்தைப்பற்றி மூன்று நூல்களும் (என். கே. வேலனின் 'தாளின் கதை', நா. வானமாமலையின் 'காகிதத்தின் கதை', வாண்டுமாமாவின் 'காகிதம்'), விமானத்தைப்பற்றி மூன்று நூல்களும் (துமிலனின் 'ஆகாய விமானத்தின் கதை', பிறையணிவோனின் 'விமானத்தின் கதை', பி.எல். ராஜேந்திரனின் 'பறந்து செல்வோம் வாரீர்'), கடலைப்பற்றி மூன்று நூல்களும் (நாக. முத்தையாவின் 'கடல் அன்னை', என்.கே. வேலனின் 'கடலின் கதை', பி.வி. கிரியின் 'அலை கடலின் அற்புதங்கள்'), தொலைக்காட்சி பற்றி இரு நூல்களும் (ப. குணசேகரின் 'விழிகளுக்கோர் விருந்து', நெ.சி. தெய்வசிகாமணியின் 'சிறுவர்க்கு டெலிவிஷன்'), மீனைப்பற்றி இரு நூல்களும் (கு. ராஜாராமின் 'மீன்', ரமணீயனின் 'கடலின் குழந்தைகள்') வெளிவந்துள்ளன. மேலும் இரும்பைப்பற்றி 'இரும்பின் கதை' என்ற ஒரே பெயரில் நா. வானமாமலையும், மா. பா. குருசாமியும் எழுதியுள்ளனர். இதே போல் 'இரயிலின் கதை' என்ற ஒரே பெயரில் பெ. நா. அப்புஸ்வாமியும் பிறையணிவோனும் எழுதியுள்ளனர்.

இவ்வாறு ஒரே பொருளைப்பற்றிப் பல நூல்கள் இருப்பதையும் ஒரே பெயருடன் ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் வெளிவருவதையும் இயன்றவரை தவிர்க்கலாம். அறிவியல் துறையில் ஏற்கெனவே என்னென்ன நூல்கள் வெளிவந்துள்ளன என்பதை அறிந்து கொண்டு, இன்னும் என்னென்ன நூல்கள் நம் சிறுவருக்குத் தேவை

என்பதில் கவனம் செலுத்தினுல் தமிழில் சிறுவருக்கான அறிவியல் துறை மேலும் விரிவடைய வழியுண்டு.

அறிவியல் துறையைப் பொறுத்தவரை, நம் நாட்டில் பெரும் பாலோர் குழந்தைகளாகத்தான் இருக்கின்ருேம். எழுத்தாளர் களிலும் புத்தகத்தைப் படித்துவிட்டுப் புத்தகம் எழுதுவோரே அதிகம். அதனுல், சில நூல்களில் தெரிந்தோ, தெரியாமலோ சில பிழைகள் நேர்ந்துவிடுகின்றன. ஓரிடம் புரியவில்லையாயின் அதுபற்றித் தெரிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொண்டு எழுது வதுதான் நல்லது. ‘புரிந்துகொண்டு எழுதவேண்டும்; புரியும்படி எழுதவேண்டும்’ என்ற தி.ஜ.ர.வின் அறிவுரை, அறிவியல் துறையைப் பொறுத்தவரை நூற்றுக்கு நூறு கடைப்பிடிக்க வேண்டிய ஒன்ருகும்.

குழந்தைகளுக்குப் புரியக்கூடிய முறையிலே தெளிவாக எழுதக் கூடிய ஆற்றல் ஒருவருக்கு இருக்கும்; ஆயினும், கதை, கவிதை, நாடகம் முதலியவற்றை எழுதக்கூடிய கற்பனை வளம் அவரிடம் இல்லாதிருக்கலாம். அதற்காக அவர் கவலைப்படத் தேவையில்லை. மேல் நாட்டில் விஞ்ஞான வல்லுநர் ஒருவரும், குழந்தைகளுக்குப் புரியும்படி எழுதக்கூடிய ஒருவரும் கூட்டாகச் சேர்ந்து வெளியிட்ட புத்தகங்கள் பலவற்றைக் காணலாம். இப்புத்தகங்களில் கருத்துப் பிழைகள் இருப்பதில்லை. சொல்லும் முறையிலும் பல புதுமைகள் இருக்கின்றன. நடையும் எளிமையாக இருப்பதால், குழந்தைகள் இவற்றைத் தாமாக விரும்பிப் படிக்கின்றனர். இத்தகைய கூட்டு முயற்சிகளில் இங்குள்ள எழுத்தாளரில் சிலர் ஈடுபடலாம்.

சில எழுத்தாளர்கள் தாங்கள் எழுதிய அறிவியல் நூல்களைக் கையெழுத்துப் பிரதிகளாக இருக்கும்போதே, அந்தந்தத் துறை களில் நிபுணர்களாக விளங்குவோரிடம் கொடுத்துச் சரிபார்த்து வாங்கி வெளியிடுகின்றனர். இது ஒரு நல்ல முறை. அமெரிக்காவில் ‘(Basic Science Series)’ என்ற வரிசையில் அடிப்படை விஞ்ஞானம் பற்றிய நூற்றுக்கு மேற்பட்ட நூல்கள் வெளிவந்துள்ளன. அந் நூல்களின் தொடக்கத்தில் ‘Checked for Scientific accuracy by Professor so & so’ எனக் குறிப்பிட்டு, அதன் கீழே அவர் பணியாற் றும் பல்கலைக் கழகத்தின் அல்லது விஞ்ஞானக் கூடத்தின் பெயரும் அச்சிடப்பட்டிருக்கும். சிறுவருக்காக 1950-54-ல், வெளிவந்த ‘பூஞ்சோலை’ இதழில், ‘இதுதான் பாங்க்’, ‘இதுதான் இன்ஷ்யூரன்ஸ்’, ‘இதுதான் சட்டசபை’ என்ற தலைப்புக்களில் தொடர்ந்து பல கட்டுரைகள் வெளிவந்தன. அந்தக் கட்டுரைகளை, அந்தந்தத்

துறையில் வல்லுநர்களைக் கொண்டு சரிபார்க்கச் செய்து அதன் பின்னரே வெளியிட்டனர்.

அறிவியல்களைக் கதைபோலக் கூறினால் குழந்தைகளுக்குப் பிடிக்கிறது என்பது உண்மையே. ஆயினும் சிலர் எழுதும் அறிவியல் நூல்களில், கற்பனைப் பகுதி அளவுக்கு மீறிப் போய்விடுவதால், குளத்திலே வலை வீசி மீன் பிடிப்பதுபோல், அந்தக் கற்பனைக்கு இடையே உண்மை விவரங்களைத் தேடிப் பிடிக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. அறிவியல் நூல்களை நகைச்சுவை கலந்து வேடிக்கையாக எழுதினால், குழந்தைகள் அவற்றை விரும்பிப் படிக்கவும், படித்தவற்றை நெஞ்சிலே நிறுத்திக்கொள்ளவும் உதவியாயிருக்கும். புகழ்பெற்ற அமெரிக்க எழுத்தாளரான மன்றோ லீஃப் (Munro Leaf), 'Can be Fun Series' என்ற வரிசையில் 'Health Can be Fun', 'Manners Can be Fun', 'Arithmatic Can be Fun' எனப் பல நூல்களை இயற்றி வெற்றி கண்டுள்ளார். உலகின் பல மொழிகளிலும் இந்நூல்கள் வெளி வந்துள்ளன. அறிவியல் நூல்களை ஆக்க விரும்புவோரில் சிலர் இவ்வழியைப் பின்பற்றலாம்.

சிலர் தாங்கள் எழுதும் நூல்களில் தாங்கள் அறிந்த விவரங்களையெல்லாம் கூறிவிட முயலுகின்றனர். இது நல்லதன்று. குழந்தைகளுக்குப் படிப்படியாகத்தான் அறிவியல் விவரங்களைக் கூறவேண்டும். வயது ஆக ஆக, மேலும் பல விவரங்களை அறிந்து கொள்ளத் தூண்டும் வகையில் நூல் அமையவேண்டும். புள்ளி விவரங்களையும் அளவுக்கு அதிகமாகக் கொடுப்பது நல்லதன்று.

சிறுவருக்கான அறிவியல் நூல்கள் பல தமிழில் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளன. ஆயினும், அவற்றில் சில நூல்களே சிறுவர் விரும்பும் வகையில் அமைந்துள்ளன. பல நூல்களில் மொழி பெயர்ப்பு கடினமாக இருப்பதால், படிப்பதற்கும், படித்துப் புரிந்து கொள்வதற்கும் சிறுவரால் இயலவில்லை. சொல்லுக்குச் சொல் மொழி பெயர்ப்பதைவிட ஒவ்வொரு பத்தியிலும் (Para) என்ன கூறப்பட்டிருக்கிறது என்பதை நன்கு புரிந்துகொண்டு, கருத்துக் கெடாமல், சிறுவர் புரிந்துகொள்ளும் முறையில் எழுதினால் பயனுள்ளதாயிருக்கும்.

விஞ்ஞானத்தின் பல இயல்களைப் பற்றியும் நம் எழுத்தாள நண்பர்கள் எழுதியுள்ளனர். பள்ளியில் விஞ்ஞானம் கற்கும் மாணவர்கள் இந்நூல்களின் உதவியால், தங்களின் பாடங்களிலே காணும் விஞ்ஞான உண்மைகளை எளிதிலே புரிந்துகொள்ளு

கின்றனர். பின்னர் மேன்மேலும் பல விவரங்களைத் தாமாகப் படித்து அறிந்துகொள்ளுகின்றனர். அந்த அளவிற்கு இந்த நூல்களால் நன்மை விளைந்துள்ளது. ஜெகதீஸ் சந்திர போஸைப் போல, சர் சி. வி. ராமனைப்போல, ஜி. டி. நாயுடுவைப்போல நம் நாட்டில் மேலும் பல விஞ்ஞானிகள் தோன்றுவதற்கான சூழ்நிலையை இந்நூல்கள் உருவாக்கும் என நம்புவோமாக!

## கட்டுரை நூல்கள் :

தமிழில் சிறுவருக்காக விஞ்ஞானம் அல்லாத பல அறிவு வளர்ச்சி நூல்களும் வெளிவந்துள்ளன.

வ. சுப்பையா 1935-ல் எழுதிய 'அஞ்சல் முறை' என்ற நூல், மக்களுக்கு எவ்வாறெல்லாம் அஞ்சல் துறை பயன்படுகிறது என்பதைக் கதைபோல விளக்குகின்றது. தம்பி சீனிவாசனின் 'பத்திரிகையின் கதை', பி. வி. கிரியின் 'செய்தி இதழ்களின் கதை'— இரண்டும் பத்திரிகை தயாராகும் பல்வேறு நிலைகளைச் சுவையாகக் கூறுகின்றன. ரோமானியப் பொம்மைகள், கிரேக்கப் பொம்மைகள், சிந்து நதிப் பொம்மைகள் எனப் பல நாட்டுப் பழங்காலப் பொம்மைகளைப் படங்களுடன் விளக்கும் 'பொம்மை பழைய பொம்மை' என்ற நூல் இரா. நாகசாமியால் எழுதப்பெற்றது.

புகைப்படம் எடுக்கும் கலையைக் கற்பதற்கு உதவும் என் ராமகிருஷ்ணாவின் 'புகைப்படம் எடுக்கலாம்', மிருணாளினி சாராபாய் ஆங்கிலத்தில் எழுதி ஆனந்தி ராமச்சந்திரன் மொழி பெயர்த்த, புகைப்படங்களுடன் கூடிய 'நம் நாட்டு நடனங்கள்', உணவு, உடை, உறையுள் ஆகிய மூன்று தேவைகளுடன் மனிதனுக்கு நான்காவது தேவை ஒன்றுண்டு; அதுதான் இன்ஷ்யூரன்ஸ் என விளக்கும் நாக முத்தையாவின் 'நான்காவது தேவை', விநாயக சதுர்த்தி, நவராத்திரி, பொங்கல், தீபாவளி போன்ற விழாக்களை விளக்கும் ஜெயம்கொண்டானின் 'திருவிழாவாம் திருவிழா', நாகரிக வளர்ச்சிக்கு அடிப்படைக் காரணமாயிருக்கும் மொழியைப் பற்றிக் கூறும் டாக்டர் மு வ.வின் 'எழுத்தின் கதை', 'சொல்லின் கதை', 'மொழியின் கதை', இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர் வாழ்க்கையை விளக்கும் பூவண்ணனின் 'பொற் கால வாழ்க்கை', சிறுவருக்குத் தமிழ் மொழி எப்படிப் பிறந்தது, வளர்ந்தது என்பதைச் சுருக்கமாகக் கூறும் 'தமிழ் வரலாறு', சொல்லையும் பொருளையும் பற்றிச் சுவையாகக் கூறும் 'யானைக் காய்ப் பொரியல்', கி.மா. பக்தவத்சலத்தின் 'தபால் தலையின் கதை', ராணுவ வீரர்கள் எப்படி உருவாகிறார்கள், எப்படிப் பணியாற்றுகிறார்கள் என விளக்கும் பி.வி. கிரியின் 'ஒரு ராணு வீரனின் கதை'

நாட்டின் ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் நாக முத்தையாவின் 'ஒன்றே பாரதம்', நேஷனல் புத்தக டிரஸ்ட் வெளியிட்டுள்ள, விஷ்ணுபிரபாகரும், சுமங்கல் பிரகாஷும் எழுதி, குயிலி ராஜேஸ்வரி மொழி பெயர்த்த 'சுயராஜ்யத்தின் கதை' (இரு பாகங்கள்), கிருஷ்ண சைதன்யா எழுதி வி.மு. சாம்பசிவன் மொழிபெயர்த்த 'இந்தியா விடுதலை பெற்ற கதை', அரசியல், அரசியல் அமைப்பு, அதன் பிரிவுகள் முதலியவை பற்றி எடுத்துரைக்கும் நா. ஜகந்நாதனின் 'அம்பிக்கு அரசியல்' போன்றவை சிறுவருக்குப் பயன்தரக் கூடிய நூல்களாகும்.

இந்தியாவின் பல மாநிலங்களின் வரலாறு, பூகோள அமைப்பு, இயற்கை வளம், இலக்கியம், கலை, பண்பாடு முதலியவற்றைக் கூறும் சரஸ்வதி ராம்நாத்தின் 'தமிழ்நாட்டு மாநிலம்', 'ஆந்திர மாநிலம்', 'கர்நாடக மாநிலம்', 'கேரள மாநிலம்' போன்ற நூல்கள், பிறந்த நாட்டைப் பிள்ளைகள் ஓரளவு அறிந்துகொள்ளவும், ஒருமைப்பாட்டு உணர்ச்சியுடன் செயலாற்றவும் தூண்டும் வகையில் அமைந்துள்ளன. 'நாட்டைக் காண்போம்' என்ற வரிசையில், சம்பந்தம் எழுதியுள்ள 'ஜப்பான்' என்ற நூல், உழைப்பாலும் தேச பக்தியாலும் உயர்ந்த ஜப்பானியரைப் பற்றி அறிய உதவுகிறது.

விளையாட்டுப் பற்றியும், பொழுது போக்குப் பற்றியும் சில நூல்கள் சிறுவருக்காக வெளி வந்துள்ளன. இந்திய அரசினர் பரிசு பெற்ற செ. சு. பாலகுருநாதனின் 'ஓடி விளையாடு பாப்பா', கிரிக்கெட்டிற்கு நூறுண்டு நிறைவானதைக் கொண்டாடும் வகையில் எழுதப்பெற்ற குண்டுமணியின் 'சதம் கண்ட கிரிக்கெட்', நேஷனல் புத்தக டிரஸ்ட் வெளியிட்டுள்ள 'ஒலிம்பிக் விளையாட்டுக்களும் ஒலிம்பிக் வீரர்களும்' (மொழி பெயர்ப்பு: என். ஆர். ராஜகோபாலன்), 'இந்தியாவில் ஹாக்கி' (மொ. பெ: பூவண்ணன்), 'கிரிக்கெட்' (மொ. பெ: ஆர். சுவாமிநாதன்), விடுகதைகளும் புதிர்களும் வேடிக்கைக் கணக்குகளும் கொண்ட ர. அய்யாசாமியின் 'பொழுது போக்கு' (மூன்று நூல்கள்), பி. ஜி. எஸ். மணியனின் 'விநோதப் புதிர்கள்', நாக முத்தையாவின் 'வேடிக்கைக் கணக்கு', 'இலக்கண விளையாட்டு' முதலிய நூல்களும் சிறுவர்கள் நல்ல முறையில் பொழுது போக்கவும், ஆரோக்கியத்தைப் பெறவும், அறிவைப் பெருக்கிக்கொள்ளவும் உதவுகின்றன.

நம்மைச் சுற்றியுள்ள எளிய தொழிலாளர்களும் சமூகத்தில் முக்கியமானவர்கள் என்பதைக் குழந்தைகளுக்கு உணர்த்தும் வகையில் 'நாட்டுப்புற நண்பர்கள்', 'வாத்தியக்கார வடிவேலு', 'பாக்குக்காரன்' போன்ற நூல்களை வைத்தண்ணு தந்திருக்கிறார். 'இளிச்சவாயன்' என்ற புனைபெயரில் நெ. சி. தெய்வசிகாமணி,

'பூஞ்சோலை' இதழில் தொடர்ந்து எழுதிவந்த நகைச்சுவைக் கட்டுரைகள் 'எங்கள் குடும்பம்' என்ற பெயரில் புத்தகமாக வெளி வந்திருக்கின்றன.

நம் தமிழ் மொழியைப் பொறுத்தவரை அறிவியல் துறையில் ஒரு மாபெரும் சாதனையைப் புரிந்துள்ளது, தமிழ் வளர்ச்சிக் கழகம். மிகச் சிறந்த முறையில், பல மொழியினரும் பாராட்டும் வகையில், ஆங்கில மொழிக் கலைக்களஞ்சியங்களுடன் ஒப்பிடும் அளவுக்கு வண்ணப் படங்களும் அச்சும் அமைப்பும் கொண்ட பத்துத் தொகுதிகளாகக் குழந்தைகள் கலைக்களஞ்சியம் வெளிவந்துள்ளது. இக்கலைக் களஞ்சியத்தை உருவாக்கிய பெருமை அதன் தலைமைப் பதிப்பாசிரியராகிய ம. ப. பெரியசாமித்தூரனுக்கும், தமிழ் வளர்ச்சிக் கழகத் தலைவர் தி. சு. அவினாசிலிங்கத்திற்கும், கலைக்களஞ்சியப் பணியில் ஈடுபட்ட அறிஞர்கள், அன்பர்கள் அனைவருக்கும் உரியது. இவர்களுக்குத் தமிழுலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது.

குழந்தைகள் கலைக்களஞ்சியம் குழந்தைகளுக்கு மட்டுமன்றி, ஆசிரியர்களுக்கும் உறுதுணையாக இருக்கும். இக்கலைக்களஞ்சியத்தில் இடம் பெற்றுள்ள கட்டுரைகளைப் பொருள்வாரியாகப் பிரித்து, பல சிறு சிறு புத்தகங்களாக வெளியிட்டால், பல நல்ல நூல்கள், நம் குழந்தைகளுக்குக் கிடைக்கும். அது மட்டுமன்று; இவ்வாறு வெளியிடப்பெறும் நூல்களை மற்ற இந்திய மொழிகளிலும் இதே படங்களுடன் வெளியிடலாம். சிரமம் குறைவதோடு, செலவும் குறையும்.



# முடிவுரை

கதையும் கவிதையும் நாடகமும் குழந்தைகளின் பண்பை வளர்க்கவும், விஞ்ஞானமும் மற்றக் கட்டுரைகளும் அவர்களின் அறிவை வளர்க்கவும் பெருந்துணை புரியக்கூடியவை.

நம் குழந்தைகளுக்கு அறிவும் தேவை; பண்பும் தேவை. உழுத நிலத்தில் அரிசியையோ உமியையோ தனித்தனியாக விதைத்தால் பயிர் விளையாது; உமியும் அரிசியும் ஒன்றுசேர்ந்த நெல்லை விதைத்தாலே பயிர் விளையும் என்பதனை நாம் நன்கறிவோம். அதே போலத்தான், அறிவும் பண்பும் கலந்ததாக வாழ்க்கை அமைய வேண்டும். அறிவு பெருகி நெஞ்சம் குறுகி வருகின்ற சூழ்நிலையை அன்றாடம் காணுகின்ற நாம், எதிர்காலக் குடிமக்களையாவது இரண்டும் பொருந்தியவர்களாக உருவாக்கவேண்டும்.

இந்த மூன்று நாள்களும், தமிழில் குழந்தை இலக்கியம் எவ்வாறு வளர்ச்சி பெற்றுள்ளது என்பதை ஓரளவே எடுத்துக்கூற முடிந்தது. தமிழில் குழந்தை இலக்கியம் நன்கு வளர்ச்சி பெற்று வருகிறது என்பதை ஒப்புக்கொள்பவர்கள்கூட, இந்த வளர்ச்சி போதாது, இன்னும் செழிப்பாக வளர வேண்டும், இன்னும் விரைவாக வளர வேண்டும் என ஆசைப்படுகின்றனர். இத்தகைய ஆசை நிறைவேற பொதுமக்களின் ஆதரவும் அரசினரின் உதவியும் தேவை.

பெற்றோர்கள் அனைவருமே தங்கள் குழந்தைகள் நல்ல முறையில் வளரவேண்டும், அவர்களது எதிர்காலம் சிறப்பாக செழிப்பாக அமைய வேண்டும் என ஆசைப்படுகின்றனர். ஆயினும், பள்ளியில் பிள்ளைகள் என்ன படிக்கிறார்கள், மற்ற நேரங்களில் எப்படிப் பொழுதைக் கழிக்கிறார்கள் என்பதைக் கவனிக்கப் பல பெற்றோருக்கு இக்காலத்தில் நேரம் இருப்பதில்லை. நல்ல குழந்தைப் பத்திரிகைகளையும், நல்ல புத்தகங்களையும் பெற்றோர்கள், தங்கள் பிள்ளைகளுக்கு வாங்கிக் கொடுப்பார்களேயானால், அவை அப்பிள்ளைகளுக்கு நல்ல நண்பர்களாகவும், வழிகாட்டிகளாகவும் விளங்கும்.

இன்று பல குடும்பங்களில் வாரத்திற்கு இரண்டு அல்லது மூன்று பத்திரிகைகளை வாங்குகின்றனர். அவை யாவும் பெரியவர்களுக்கான பத்திரிகைகளே. அக்குடும்பங்களில் குழந்தைகள் இருந்தும் அவர்களுக்காக மாதம் ஓர் இதழ்கூட வாங்குவதில்லை. வாங்க வேண்டுமென்ற எண்ணங்கூட அவர்களில் பலருக்குத் தோன்றுவ

திலே. இதனுல் படிக்கும் ஆர்வமிக்க குழந்தைகள், பெற்ருேர் வாங்குகின்ற பத்திரிகைகளையெல்லாம்—அவை நல்லவையோ கெட்டவையோ—படிக்கத் தொடங்குகின்றனர் இதனுல், அவர்கள் பிஞ்சிலே பழுத்துவிடக்கூடிய அபாயநிலே உருவாகிறது. இந்த நிலே மாறவேண்டும்.

குழந்தைகளுக்கான தனி நூலகங்களைக் கவர்ச்சியாகப் பெரு நகரங்களில் அமைத்தும், மற்ற இடங்களில் பெரியவர்களுக்கான நூலகங்களில் கூடுமானவரை சிறுவர் பகுதிகளே ஏற்படுத்தியும் குழந்தைகளின் அறிவுப் பசியைப் போக்க அரசினர் ஆவன செய்ய வேண்டும். அத்துடன் ஒவ்வோர் ஆரம்பப் பள்ளியிலும், சிறிய அளவிலாவது ஒரு நூல் நிலேயத்தை அமைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். ஆண்டு முழுமையும் சில பள்ளிப் பாடநூல்களேயே பார்த்தும் படித்தும் அலுத்துப்போகும் குழந்தைகளுக்குப் புதுப்புது நூல்களைக் காணும்போது மகிழ்ச்சியாகத்தானே இருக்கும்? அந்த மகிழ்ச்சியுடன் அறிவை வளர்க்கவும் பண்பை உயர்த்தவும் சிறந்த கருவிகளாகத் திகழ்கின்றன நல்ல குழந்தைப் புத்தகங்கள்.

தற்போது நம் தமிழ்நாட்டிலுள்ள பள்ளிகளின் எண்ணிக்கை 36,000. அவற்றில் பயிலும் மாணவர்களின் தொகை 85 இலட்சம். ஆயினும் ஒரு குழந்தை நூலே 1,000 அல்லது 2,000 பிரதிகளுக்கு மேல் அச்சிடப் பதிப்பாளர் தயங்குகின்றனர். காரணம், அப்பிரதிகள் விற்பனையாக இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளாகின்றன. 10 பள்ளிகளுக்கு ஒரு பள்ளி வீதம் ஒரு நூலே வாங்கினுல்கூட 3,000 பிரதிகளுக்கு மேல் தேவைப்படுமே!

தமிழகத்தில் 20 ஆண்டுகளுக்கு முன்பு சில பதிப்பாளர்களே குழந்தைகளுக்கான புத்தகங்களே வெளியிட்டு வந்தார்கள். இன்று நூற்றுக்கு மேற்பட்ட பதிப்பாளர்கள் குழந்தை நூல்களே வெளியிட்டுள்ளனர். இவற்றில் பல நூல்கள் கவர்ச்சியான அட்டைகளுடனும் உள்படங்களுடனும் வெளிவந்துள்ளன. எல்லாக் குழந்தை நூல்களுமே படங்களுடன் வெளிவரவேண்டும். நன்கு எழுதப் பெற்ற பல நூல்கள் படங்களில்லாததால், குழந்தைகளின் கவனத்தைக் கவராமலே போய்விடுகின்றன. குழந்தைகளைப் படிக்கத் தூண்டி, நன்கு விளங்க வைப்பவை படங்களேயாகும். படங்களில்லாத குழந்தைப் புத்தகம், மலர்களில்லாத நந்தவனம் போன்றதே. ஆகையால், பதிப்பாளர்கள் நூல்களே வெளியிடும்போது ஓரளவு படங்களுடனுவது வெளியிடுதல் நலம்.

குழந்தைகளுக்கான ஆடைகளே விற்கும் கடைகளும், பொம்மைகளே விற்கும் கடைகளும் சென்னே நகரில் இருப்பனபோல், குழந்தை

களுக்கென்றே தனியாகப் புத்தகக் கடைகள் தோன்றவேண்டும். நகரந்தோறும், அத்தகைய புத்தகக் கடைகள் இருந்தால், பிள்ளை களுக்காகப் புத்தகங்கள் வாங்க விரும்பும் பெற்றோருக்கும், பள்ளி களுக்கும் நூல் நிலையங்களுக்கும் புத்தகங்கள் வாங்க வருவோருக்கும் மிக உதவியாக இருக்கும்.

இன்று தமிழில் இந்த அளவுக்குக் குழந்தை இலக்கியம் வளர்ந் துள்ளது என்றால், அதற்கு முக்கிய காரணமாக இருப்பது, குழந்தை எழுத்தாளர் சங்கம்தான் என்பதை அனைவரும் ஒப்புக்கொள்வர். கடந்த 29 ஆண்டுகளில் இது பல சாதனைகளைப் புரிந்துள்ளது.

சங்கம் தோன்றிய ஆண்டிலே—அதாவது, 1950-ம் ஆண்டிலே—முதல் முதலாகக் குழந்தைப் புத்தகக் காட்சியை ஏற்பாடு செய்து ஆண்டுதோறும் அதனைத் தொடர்ந்து நடத்தி வருவதும், குழந்தை இலக்கிய மாநாடுகளை நடத்தி, குழந்தை இலக்கியத்திற்குச் சிறப் பாகத் தொண்டாற்றியவர்களுக்குக் கேடயங்கள் வழங்கி கௌர விப்பதும், அவ்வப்போது கருத்தரங்குகள் நடத்திக் கருத்துப் பரிமாற்றம் செய்துகொள்ள வாய்ப்பளிப்பதும், குழந்தை இலக்கியம் பற்றிய கட்டுரைகளடங்கிய மலர்களை வெளியிடுவதும் இச்சங்கத்தின் செயல்களாக உள்ளன. இச்சங்கம் ஆரவாரமின்றி அமைதியாகச் செய்துவரும் இரு சிறப்புப் பணிகளை இங்கே குறிப்பிடவேண்டும்.

நேருஜி பிறந்த நவம்பர் 14-ஆம் தேதியை ஆண்டுதோறும் குழந்தைகள் நாளாக நாடெங்கும் கொண்டாடி வருகிறோம். குழந்தைகளிடத்திலும் அவர்களுக்கான புத்தகங்களிடத்திலும் நேருஜிக்கு உள்ள ஈடுபாட்டை உணர்ந்து, குழந்தைகளையும் புத்தகங் களையும் இணைத்துக் குழந்தைப் புத்தக விழாவாக அவரது பிறந்த நாளைக் கொண்டாட இச்சங்கம் 1957-ல் முடிவு செய்தது. சங்க வேண்டுகோளுக்கிணங்கிப் பல பதிப்பாளர்களும் தயாரிக்கும் குழந்தை நூல்களை, தக்கவர்களைக்கொண்டு ஆண்டுதோறும் குழந்தைகள் நாளில் வெளியிட்டு வருகிறது. 1957-ஆம் ஆண்டு முதல், சென்ற ஆண்டுவரை இவ்வாறு வெளியான நூல்களின் எண்ணிக்கை 400. இதுவரை தமிழில் வெளியாகியுள்ள மொத்த நூல்களில் இது ஏறத்தாழ நான்கில் ஒரு பங்கு என்பது குறிப்பிடத் தக்கது.

மற்றொரு பணி, ஏவி. எம். அறக்கட்டளைப் பரிசுகளைக் கையெழுத்துப் பிரதிகளுக்கு வழங்குவதாகும் அச்சிடப்பெற்ற நூல் களே பெரும்பாலும் அரசினர் பரிசுகளையும் மற்றப் பரிசுகளையும் பெற்று வருகின்றன. ஆனால், இச்சங்கம் செய்துள்ள ஏற்பாட்டால், சிறந்த படைப்பாக இருந்தால், கையெழுத்துப் பிரதியாக இருக்கும்

போதே பரிசு பெறுவதற்கான வாய்ப்பினை அதனால் பெறமுடிகிறது. திறமையுள்ள எழுத்தாளர்கள் பரிசு பெறுவதோடு, அவர்களது பரிசு பெற்ற கையெழுத்துப் பிரதிகளை வெளியிடப் பதிப்பாளர்களும் மகிழ்ச்சியோடு முன் வருகின்றனர். பரிசு பெறாது போனாலும், புத்தகமாக வெளியிடுவதற்கான தகுதி வாய்ந்த பல கையெழுத்துப் பிரதிகள் இப்போட்டிக்கு வருவதால், அவை பின்னர் நூல் வடிவம் பெறுகின்றன. இதனால் பல குழந்தை நூல்கள் வெளிவரவும் இப் பரிசுத்திட்டம் மறைமுகமாக உதவி வருகிறது.

1957-ஆம் ஆண்டு குழந்தை எழுத்தாளர் சங்கம், உலகப் புகழ் பெற்ற நூலகவியல் அறிஞர் டாக்டர் எஸ். ஆர். ரங்கநாதன் அவர்கள் தலைமையில் ஒரு குழு அமைத்து, அதுவரை வெளி வந்திருந்த குழந்தை நூல்களைப் பார்வையிட்டு ஓர் அறிக்கை வெளியிட்டது. தமிழில் குழந்தை நூல்களைப் பற்றி முதல் முதலாகநடத்தப் பெற்ற சர்வே அது தான். பிறகு 1961-ஆம் ஆண்டு அழ. வள்ளியப்பா யுனெஸ்கோ ஆதரவுடனும் தென்மொழிப் புத்தக டிரஸ்ட் ஒத்துழைப்புடனும் ஓர் ஆராய்ச்சி நடத்தி அறிக்கை வெளியிட்டார். 1966-இல் தமிழக அரசு கே. எஸ். மகாதேவனைக்கொண்டு ஓர் ஆராய்ச்சி நடத்தியது. குறைந்தது மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறையாவது இத்தகைய ஆராய்ச்சியை நடத்தி அறிக்கை வெளியிட்டால், எந்தெந்தத் துறைகளில் நூல்கள் வெளிவந்துள்ளன, ஒவ்வொரு வயதுப் பிரிவுக்கும் எத்தனை நூல்கள் உள்ளன, அந்த நூல்களின் உள்ளடக்கம், அச்சு-அமைப்பு, ஓவியங்கள் முதலியன எவ்வாறுள்ளன என்பன போன்ற பல விவரங்களை அறியலாம். அவ்விவரங்கள் மேன்மேலும் பல நல்ல குழந்தை நூல்கள் வெளிவரப் பெரிதும் துணை புரியும்.

இதுவரை தமிழில் வெளிவந்துள்ள 1700 குழந்தைப் புத்தகங்களையும் பற்றிய விவரங்களைத் திரட்டித் தொகுத்து வைத்துள்ளது இச்சங்கம். அதை ஒரு நூலாக (Bibliography of Children's Books in Tamil) வெளியிடும் முயற்சியை மேற்கொண்டுள்ளது. அந்நூல் வெளிவந்தால் அதில் காணும் குழந்தைப் புத்தகங்களில், பள்ளிக் கூடங்களுக்கும் நூலகங்களுக்கும் தேவையான புத்தகங்களைத் தேர்ந்தெடுத்து வாங்குவதற்கு வசதியாயிருக்கும்.

'தமிழ் இலக்கிய வரலாறு' எழுதும் அறிஞர்களில் சிலரே, வளர்ந்து வரும் குழந்தை இலக்கியம் பற்றித் தங்கள் நூல்களில் குறிப்பிட்டுள்ளனர். மற்றவர்கள் இப்படி ஓர் இலக்கியம் இருப்பதாகவே கண்டுகொள்வதில்லை. தமிழ் இலக்கியம் என்னும் பெரிய மரத்தின் ஒரு கிளையாகக் குழந்தை இலக்கியத்தை அரசினரும்

பல்கலைக் கழகத்தினரும் ஏற்றுக்கொண்ட பிறகும் இந்நிலை நீடிக்கலாமா? இலக்கிய வரலாறு எழுதும் ஒவ்வோர் ஆசிரியரும் குழந்தை இலக்கியத்திற்கெனச் சில பக்கங்களாவது ஒதுக்க வேண்டும். இலக்கிய வரலாறு எழுதும் ஆசிரியர்களுக்குப் பயன்படும் வகையில், 'குழந்தை இலக்கிய வரலாறு—ஒரு மதிப்பீடு' என்ற நூலைக் குழந்தை எழுத்தாளர் சங்கம் வெளியிட்டுள்ளது. 1976-ஆம் ஆண்டு இச் சங்கம் நடத்திய வெள்ளி விழாவில் வெளியான இந்நூலைப்போல் வேறு எந்த இந்திய மொழியிலும் இதுவரை வெளிவரவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

சென்னையிலுள்ள தென்மொழிப் புத்தக டிரஸ்ட், நல்ல முறையில் பல சிறுவர் நூல்களைத் தென்மொழிகள் நான்கிலும் வெளியிட்டுள்ளது. டில்லியிலுள்ள தேசிய புத்தக டிரஸ்ட் 'நேரு பால புத்தகாலயம்' என்ற வரிசையில் பல குழந்தை நூல்களை இந்திய மொழிகள் அனைத்திலும் தொடர்ந்து வெளியிட்டுவருகிறது. டில்லியிலுள்ள மற்றொரு நிறுவனமாகிய குழந்தைப் புத்தக டிரஸ்டும் இந்திய மொழிகள் பலவற்றிலும் குழந்தை நூல்களை வெளியிடும் பணியை மேற்கொண்டுள்ளது. ஆயினும், எத்தனை தமிழ் எழுத்தாளர்களின் படைப்புக்களை இந்நிறுவனங்கள் வெளியிட்டுள்ளன, தமிழிலிருந்து பிற இந்திய மொழிகளில் எத்தனை நூல்களைப் பெயர்த்துள்ளன என்ற விவரங்களைக் கேட்டால், கிடைக்கின்ற பதில் பெரும் ஏமாற்றத்தையே அளிக்கும். ஒவ்வொரு மொழிக்கும் தனித்தனியாக டிரஸ்ட் ஏற்படுத்தினால்தான் அந்தந்த மொழி எழுத்தாளர்களின் மறைந்து கிடக்கும் திறமைகளை வெளிக்கொணரவும், திறமையுள்ளோரை நன்கு பயன்படுத்திக்கொள்ளவும் இயலும். இதை உணர்ந்தே, 1956-ஆம் ஆண்டு முதல், தொடர்ந்து அரசுக்கு வேண்டுகோள் விடுத்துவருகிறது குழந்தை எழுத்தாளர் சங்கம்.

தமிழகத்தில் 'குழந்தைப் புத்தக டிரஸ்ட்' ஒன்றை நிறுவ அரசாங்கம் விரைவிலே முன்வரவேண்டும். நல்ல எழுத்தாளர்களுக்கு ஊக்கமளிக்கவும், மலிவான விலையில் நூல்களை வெளிக்கொணரவும், குழந்தைகளின் அறிவுப் பசியைத் தீர்க்கவும் இந்த ஏற்பாடு பெரிதும் உதவும்.

சிறந்த குழந்தைப் புத்தகங்களுக்கு இந்திய அரசினரும் தமிழக அரசினரும் பரிசுகள் வழங்கிவருவது பாராட்டுக்குரியது. ஆயினும், அரசினர் பரிசு பெறும் நூல்களின் பெயர்களையும், அந்த நூல்களை எழுதிய எழுத்தாளர்களின் பெயர்களையும் செய்திப் பத்திரிகைகளில் காண்பதுகூட அரிதாயுள்ளது. ஒரு விழா எடுத்தோ, புத்தகக்

காட்சி, புத்தக வெளியீட்டு விழா போன்ற விழாக்களின் போதோ நூலாசிரியர்களுக்குப் பரிசுகளை வழங்கினுல் சிறப்பாக இருக்கும். பரிசுத் தொகையைவிட, இம்மாதிரிப் பலர் முன்னிலையில் பாராட்டப் பெறுவதையே ஓர் எழுத்தாளன் பெரிதாகக் கருது வான்.

தி. ஜ. ர. கூறுகிருர் :

“இலக்கியத்திலே ஒரு ஜாதிப் பிரிவினை என்பது போலக் குழந்தை இலக்கியத்தைப் பாவிக்கக் கூடாது. மனித வாழ்க்கைக்குப் பயன்படும் அஸ்திவார இலக்கியம் என்றே குழந்தை இலக்கியத் தைக் கருதவேண்டும்.’

தி. ஜ. ர.வின் இந்த நன்மொழியைப் பொன்மொழியாக நாம் ஏற்கவேண்டும்.

குழந்தை இலக்கியப் பயிர் சீராக வளரத் தொடங்கியிருக் கிறது. மேலும் செழிப்பாக வளர்வதற்குச் சூரியனின் ஒளி தேவை. உரமும் தேவை, தண்ணீரும் தேவை, தடுப்பு வேலியும் தேவை. அவ்வப்போது களையெடுப்பும் நடைபெற வேண்டும்.

புனிதமான ஒரு பணியில் ஈடுபட்டிருக்கிறேம் என்ற எண்ணத் துடன் எழுத்தாளர்கள் குழந்தை இலக்கியம் படைக்க முன்வர வேண்டும்; வருங்காலக் குடிமக்களை நன்முறையில் உருவாக்கும் பெரும் பொறுப்பு நம்மிடமுள்ளது என்ற கடமை உணர்ச்சியுடன் அரசு செயலாற்றவேண்டும். தங்கள் பிள்ளைகளுக்குப் புத்தகங்கள் வாங்குவதைச் செலவாகக் கணக்கிடாமல், அவர்களின் பிற்கால வாழ்க்கைக்காகச் செய்யும் பெரியதொரு முதலீடாகப் பெற் ரோர்கள் கருதவேண்டும். இவ்வளவும் ஒருங்கிணைந்தால், தமிழ்க் குழந்தை இலக்கியம் தழைத்தினிதோங்கும். இதில் ஐயமில்லை; ஐயமே இல்லை!

---

## குழந்தை இலக்கியப் போட்டியில் இந்திய அரசினர் பரிசு பெற்றவை

| | | | | |
|---|---|---|---|---|
| 1955 | ராமுவும் நானும் | நா. கி. நாகராஜன் | புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட் | சென்னை-1 |
| 1956 | மலரும் உள்ளம்-முதல் தொகுதி | அழ. வள்ளியப்பா | குழந்தைப் புத்தக நிலையம் | சென்னை-17 |
| 1957 | கஸ்தூரியின் பிறந்த நாள் | நா. கி. நாகராஜன் | இன்ப நிலையம் | சென்னை-4 |
| 1958 | பறக்கும் பாப்பா | கல்வி கோபாலகிருஷ்ணன் | பாரி நிலையம் | சென்னை-1 |
| 1959 | தங்கக் குழந்தைகள் | தம்பி சீனிவாசன் | குழந்தைப் புத்தக நிலையம் | சென்னை-17 |
| 1960 | கௌதம புத்தர் | ஆர். வஜ்ரேஸ்வரி | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |
| | முத்துப் பாடல்கள் | மயிலை சிவமுத்து | புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட் | சென்னை-1 |
| | தாகூரின் வாழ்விலே | ஏ. திலகவதி | எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை | திருநெல்வேலி-1 |
| 1961 | காவேரியின் அன்பு | பூவண்ணன் | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |
| | அழகான ஆலமரம் | சு. வை.துரைசாமி முதலியார் | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |
| 1962 | மந்திரவாதியின் மகன் | கல்விகோபாலகிருஷ்ணன் | மெர்க்குரி புக் கம்பெனி | கோயமுத்தூர்-1 |
| | ரப்பரின் கதை | நா. வானமாமலை எஸ் தோதாத்திரி | எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை | திருநெல்வேலி-1 |
| 1963 | குழந்தைப் பாக்கள் | பு. ஆ. முத்துக்கிருஷ்ணன் | தி. தெ. சை. நூ. கழகம் | சென்னை-1 |
| 1964 | பண்டை உலகில் பறக்கும் பாப்பா | கல்வி கோபாலகிருஷ்ணன் | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் | சென்னை-2 |
| 1965 | புலவர் மகன் | பூவண்ணன் | பாரி நிலையம் | சென்னை-1 |
| | எங்கள் தோட்டம் | அ. கி. பரந்தாமனார் | அல்லி நிலையம் | சென்னை-7 |
| 1966 | நேருவின் கதை | வை சுப்ரமண்யன் | புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட் | சென்னை-1 |

| | | | | |
|---|---|---|---|---|
| 1967 | நாடு காத்த நல்லவர்கள் | தி. சு. கலியபெருமாள் | | |
| 1969 | பால ராமாயணம் | ர. அய்யாசாமி | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |
| | | | புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட் | சென்னை-1 |
| 1970 | பாட்டிலே காந்தி கதை | அழ. வள்ளியப்பா | குழந்தைப் புத்தக நிலையம் | சென்னை-17 |
| 1971 | கானகக் கன்னி | கல்வி கோபாலகிருஷ்ணன் | கலவி பிரசுராலயம் | சென்னை-17 |
| 1972 | கொக்கரக்கோ | லெமன் | கலைமகள் காரியாலயம் | சென்னை-4 |
| 1973 | ஹெலிகாப்டரின் கதை | எஸ். சுப்பிரமணியம் | கிறிஸ்தவ இலக்கியக் கழகம் | சென்னை-1 |
| 1974 | நல்ல கைகள் | சௌந்தர் | வி மாணிக்கம் கம்பெனி | சென்னை-1 |
| 1977 | வீரமா முனிவர் | பூவண்ணன் | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |

## தமிழ்நாடு அரசினர் பரிசு பெற்றவை

| | | | |
|---|---|---|---|
| குழந்தை எப்படிப் பிறக்கிறது? | பொ. திருகூடசுந்தரம் | காந்தி நிலையம் | சென்னை-17 |
| அப்பாவும் மகனும் | பொ. திருகூடசுந்தரம் | காந்தி நிலையம் | சென்னை-17 |
| ஜவகர் கதை | பொ. திருகூடசுந்தரம் | காந்தி நிலையம் | சென்னை-17 |
| நல்ல நண்பர்கள் | அழ. வள்ளியப்பா | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |
| மலரும் உள்ளம்-முதல் தொகுதி | அழ. வள்ளியப்பா | குழந்தைப் புத்தக நிலையம் | சென்னை-17 |
| சத்திய வேட்கை | எம். எல் சபரிராஜன் | பாரி நிலையம் | சென்னை-1 |
| சின்னஞ்சிறு வயதில் | அழ. வள்ளியப்பா | குழந்தைப் புத்தக நிலையம் | சென்னை-17 |
| பெரியோர் வாழ்விலே-I | அழ. வள்ளியப்பா | குழந்தைப் புத்தக நிலையம் | சென்னை-17 |
| குழந்தைச் செல்வம் | தேசிக விநாயகம் பிள்ளை | பாரி நிலையம் | சென்னை-1 |
| வண்ணாத்திப் பூச்சி | தி. ஜ. ரங்கநாதன் | பவானி பிரசுரம் | இராயவரம் |
| பாப்பாவுக்குப் பாட்டு | அழ. வள்ளியப்பா | குழந்தைப் புத்தக நிலையம் | சென்னை-17 |
| வழிகாட்டிய உத்தமர் | எஸ். ஏ. ரஹீம் | நியூ இந்தியா பப்ளிகேஷன்ஸ் | சென்னை-4 |

| | | | |
|---|---|---|---|
| கண்ணான கண்ணன் | அகிலன் | தமிழ் நிலையம் | புதுக்கோட்டை |
| மின்சாரத்தின் கதை | என். கே. வேலன் | தி. தெ. சை. நூ. கழகம் | சென்னை-1 |
| பாப்பாவுக்குப் பாரதி | தி. ஜ. ரங்கநாதன் | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |
| நேரு மாமா | மா.சண்முகசுப்பிரமணியம் | தி. தெ. சை நூ. கழகம் | சென்னை-1 |
| பாரதி வாழ்விலே | தி. சு. கலியபெருமாள் | எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை | திருநெல்வேலி-1 |
| நல்ல நல்ல பாட்டு | பெ. தூரன் | சுதந்திர நிலையம் | சென்னை-20 |
| சரோஜினி தேவி | எம். வி. வெங்கட்ராம் | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |
| நிலவின் கதை | என். கே. வேலன் | தி. தெ. சை நூ. கழகம் | சென்னை-1 |
| பூச்சி வாழ்க்கை | வைத்தண்ணு | (கையெழுத்துப் பிரதி) | |
| இந்திரா காந்தி | எம். வி. வெங்கட்ராம் | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |
| பூனையார் | ரத்னம் | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |
| பிள்ளைப் பருவத்திலே | அழ. வள்ளியப்பா | குழந்தைப் புத்தக நிலையம் | சென்னை-17 |
| பூமி அன்னை | ப. குணசேகர் | சிறுவர் இலக்கியப் பண்ணை | சென்னை-33 |
| விநோதக் குருவிகள் | வைத்தண்ணு | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் | சென்னை-2 |
| பூச்சிகள் | பத்மா ராஜகோபால் | நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் | சென்னை-2 |
| அன்பு மழை | நாகை தருமன் | பூங்கொடி பதிப்பகம் | சென்னை-4 |
| புள்ளிமான் | பூவண்ணன் | தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம் | சென்னை-8 |
| அன்பு வழி நடந்த அண்ணல் | எம். வேலுச்சாமி | காந்தி நினைவு மன்றம் | மதுரை-13 |
| சென்னை சிலைகளின் கதை | என். கே. வேலன் | தி. தெ. சை. நூ. கழகம் | சென்னை-1 |
| நடேசன் என் நண்பன் | புவனை கலைச்செழியன் | குழந்தை இலக்கியக் கழகம் | சென்னை |
| பாட்டுத் தோட்டம் | பூவண்ணன் | குழந்தை இலக்கியக் கழகம் | சென்னை |
| எரி கற்கள் | கு ராஜாராம் | தமிழ்ப் புத்தகாலயம் | சென்னை-5 |
| மரகதக் கண்ணன் | பூவண்ணன் | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |
| மாமாவின் ஆராய்ச்சிகள் | என். கே. வேலன் | தி. தெ. சை நூ. கழகம் | சென்னை-1 |
| கவிதை தந்தவர் கதை | அ. அப்துல் கரீம் | தமிழ் நிலையம் | புதுக்கோட்டை |
| சிங்கத் தமிழர் சிதம்பரனார் | மா.சண்முக சுப்பிரமணியம் | தி. தெ. சை. நூ. கழகம் | சென்னை-1 |

| | | | |
|---|---|---|---|
| நல்ல கதைகள் | தணிகை உலகநாதன் | தி லிட்டில் பிளவர் கம்பெனி | சென்னை-17 |
| சிறுவர் உலகம் | மு. வை. அரவிந்தன் | ஓவியன் பதிப்பகம் | வேலூர்(வ. ஆ) |

## தென்மொழிப் புத்தக டிரஸ்ட் பரிசு பெற்றவை

| | | | |
|---|---|---|---|
| மணி என்ன? | கல்வி கோபாலகிருஷ்ணன் | சாந்தி நூலகம் | சென்னை-1 |
| மந்திர வித்தை | எம். எல். சபரிராஜன் | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |
| பார்க்கும் பறவைகள் | எம். பி. குருசாமி | தமிழ்ப் புத்தகாலயம் | சென்னை-5 |
| வளரும் சுடர் | எஸ். அப்துல் காதர் | தமிழ்ப் புத்தகாலயம் | சென்னை-5 |

## குழந்தை எழுத்தாளர் சங்கப் பரிசு பெற்றவை

| | | | |
|---|---|---|---|
| உப்பில்லாத பண்டம் | பூவண்ணன் | ஔவை நூலகம் | சென்னை-1 |
| அல்லாவுதீனும் அற்புத விளக்கும் | எச். ராமச்சந்திரன் | எம். ஆர். அப்பாத்துரை | சென்னை-7 |
| ஆனையும் பூனையும் | பெ. தூரன் | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |
| வழிகாட்டிய உத்தமர் | எஸ். ஏ. ரஹீம் | நியூ இந்தியா பப்ளிகேஷன்ஸ் | சென்னை-4 |
| † நாட்டிய ராணி | பெ. தூரன் | பழனியப்பா பிரதர்ஸ் | சென்னை-14 |

## தமிழ்நாடு சங்கீத நாடக சங்கப் பரிசு பெற்ற நாடகம்

| | | | |
|---|---|---|---|
| அப்பாவின் ஆசை | திருச்சி பாரதன் | தமிழ் நிலையம் | புதுக்கோட்டை |
| பலாப்பழம் | திருச்சி பாரதன் | அசோகன் பதிப்பகம் | சென்னை-17 |

† இப்பரிசுத் தொகை ரூ. 500 சென்னை வானொலிச் சிறுவர் சங்கப் பேரவையால் வழங்கப்பெற்றது.

குழந்தை எழுத்தாளர் சங்கத்தின்
ஏவி. எம். அறக்கட்டளைப் பரிசு பெற்றவை

**1972** கவிதை :
ஏ. ந. கணபதி—பிஞ்சு நெஞ்சம்
அழகனார்—பட்டம்.

வாழ்க்கை வரலாறு :
தி. சு. கலியபெருமாள்—சர். சி. வி. ராமன்
வைத்தண்ணா—டாக்டர் ஹாப்கின்ஸ்

**1973** சிறுகதை :
சௌந்தர்—நல்ல கைகள்
ராஜலக்ஷ்மி [குந்தவை]—திருந்திய உள்ளம்
நாடகம் :
கி. பானுமதி—பண்பும் பாசமும்
எஸ். வஜ்ரவேலு—கண்ணன் எங்கள் சேவகன்

**1974** நாவல் :
ஈ. எஸ். ஹரிஹரன் [ரேவதி]—பாண்டிய பரதன்
வெ. மல்லப் பிள்ளை—மாணிக்கம்

அறிவியல் :
ஆழி. வே. இராமசாமி—தம்பிக்குத் திரைப்படம்
வைத்தண்ணா—காற்றுடன் குட்டிப் பரிசோதனைகள்

**1975** கவிதை :
பி. வி. கிரி—ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே
ரா. பொன்ராசன்—பாப்பாப் பாட்டு

வாழ்க்கை வரலாறு :
ஆழி. வே. இராமசாமி—இசை வளர்த்த தியாகராசர்
பூவண்ணன்—வீரமாமுனிவர்

**1976** சிறுகதை :
க. ஜெயங்கொண்டான்—பொற்காசு
பொன்னம்மாள்—கடவுளின் கருணை

நாடகம் :

ஆலந்தூர் கோ. மோகனரங்கம் — பொன்னம்மா ஒரு புதுமைப் பெண்

சௌந்தர்—எல்லோரும் வாழ்க!

1977 அறிவியல் :

ஆழி. வே. இராமசாமி—காந்தத்தின் கதை
ரா. பா. சாரதி—காட்சி கண்காட்சியே!

நாவல் :

ஞா. ஜெயசீலன்—ஒரு ரயில் புறப்படுகிறது!
சி. வெங்கடசாமி – கல்லும் மலராகும்

1978 கவிதை :

மயிலை முத்தெழிலன்—நல்ல புத்தகம்
காரை இறையடியான்—இளந்தென்றல்

வாழ்க்கை வரலாறு :

கே. பி. நீலமணி—அன்னை தெரசா
எஸ். ராஜலட்சுமி—தமிழறிஞர் திரு. வி. க.

1979 சிறுகதை :

த. பழமலை நாதன்—கிறிஸ்துமஸ் பரிசு

நாடகம் :

பூதலூர் முத்து—நல்லவன்
மாமூலன் – நீலா நீலா ஓடி வா

1980 நாவல் :

எஸ். ஜெயலட்சுமி—உள்ளம் ஊனமாகவில்லை
ராஜ்கமல் — தியாக தீபங்கள்



குழந்தை எழுத்தாளர் சங்கம்

32, வைத்திய ராமய்யர் தெரு, தி. நகர், சென்னை-600 017.

# குழந்தை இலக்கியப் போட்டி

நம் சங்கத்தின் சார்பில் ஆண்டு தோறும் வழங்கப் பெறும் ஏவி. எம். தங்க, வெள்ளிப் பதக்கப் பரிசுகள் இவ்வாண்டு, குழந்தைகளுக்கான **கவிதை, வாழ்க்கை வரலாறு** ஆகிய இருதுறைகளுக்கும் வழங்கப்பெறும்.

யார் வேண்டுமானாலும் கலந்து கொள்ளலாம். எந்தவிதக் கட்டணமும் இல்லை. கையெழுத்துப் பிரதிகள் 100 பக்கங்களுக்கு மிகாமல் இருக்க வேண்டும். கையெழுத்துப் பிரதிகள் இரண்டு படிவங்கள் அனுப்ப வேண்டும்

எழுதியவர் பெயரும் முகவரியும் தனித்தாளில் குறிப்பிட்டு, அதன் கீழே 'இந்தக் கையெழுத்துப் பிரதியில் கண்டவை நான் சொந்தமாக எழுதியவையே இதற்கு முன் அச்சில் வெளி வரவில்லை' என்று ஆசிரியர் உறுதி மொழியுடன், கையொப்பமிட்டு அனுப்ப வேண்டும்.

பரிசு பெறும் படைப்புகளின் உரிமை படைப்பாளிகளையே சேரும் எனினும் அவை நூலாக வரும்போது, 'குழந்தை எழுத்தாளர் சங்கம் 1981-இல் நடத்திய இலக்கியப் போட்டியில் ஏவி. எம். அறக்கட்டளையின் பரிசு பெற்றது' என்று குறிப்பிடவேண்டும். பிரதிகள் 30-9-81 வரை பெற்றுக் கொள்ளப்படும்.

அனுப்பவேண்டிய முகவரி: **பூவை அமுதன்,** பொதுச்செயலாளர்
குழந்தை எழுத்தாளர் சங்கம், பிளாட் எண் 142,
பாஸ்கர் காலனி, சென்னை-600 092.

நம் சங்கத்தின் ஏவி.எம். அறக்கட்டளைப் பரிசினைப் பெற்றவர்கள் போட்டியில் கலந்துகொள்ளக் கூடாது.

(பொதுச்செயலாளர்)

# குழந்தை எழுத்தாளர் சங்கம்

## 1981 ஆம் ஆண்டு

## தேர்ந்தெடுக்கப் பெற்றவர்கள்

தலைவர் : திரு. அழ. வள்ளியப்பா

துணைத்தலைவர் : ,, பூவண்ணன்

,, புத்தனேரி ரா. சுப்பிரமணியம்

பொதுச்செயலாளர்: ,, பூவை அமுதன்

துணைச்செயலாளர் : ,, ஜெ. எத்திராஜன்

பொருளாளர்: ,, ஈ.எஸ். ஹரிஹரன் (ரேவதி)

செயற்குழு உறுப்பினர்கள் :

திருமதி கே. ஜெயலட்சுமி

,, திலகவதி ஜெகதீசன்

திரு. எஸ். சுவாமிநாதன்

,, எம்.ஆர். ரங்கராஜன்

,, ப.நா. பாலசுப்பிரமணியம்

,, சௌந்தர்

,, ரமணீயன்

,, அன்புப் பழம்நீ

,, ரா.பா. சாரதி (கேளம்பாக்கம்)

,, ரா. பொன்ராசன் (குன்றக்குடி)

சிறுவர்க்கு எழுதும் சிறந்தோரே !
சேர்வீர் சங்கத்தில் உறுப்பினராய்
ஒருவருடத் தொகை ரூ. மூன்றே
உயர்பணி ஆற்றிடக் கூடிடுவீர் !!



குழந்தைக் கவிஞர்
## அழ. வள்ளியப்பா

**தி. ஜ. ர. :**

குழந்தை இலக்கியம் பற்றிய யோசனை தமிழகத்தில் எங்கே நடந்தாலும், உடனே வள்ளியப்பாவைத்தான் எவருக்கும் முதன் முதல் ஞாபகம் வரும். குழந்தை இலக்கிய வளர்ச்சிக்காக ஒரு பெரிய இயக்கத்தையே தோற்றுவித்தவர் குழந்தைக் கவிஞர்.

**ராஜாஜி :**

சிலருக்கு சிருஷ்டிக்கும் திறமை இருக்கும். சிலருக்குச் செயல் புரியும் திறமை இருக்கும். இரண்டும் சேர்ந்து இருப்பது அரிது. ஆனுல், வள்ளியப்பா இரண்டையும் பெற்றிருக்கிருர். ....மேன்மேலும் தமிழ்க் குழந்தைகளுக்காக வள்ளியப்பா உழைப்பாராக! அந்த உழைப்புக்குத் தரவேண்டிய ஊக்கத்தை அனைவரும் தருவோமாக!

**டாக்டர் மு. வ.**

குழந்தை இலக்கியத் துறையில் தொண்டு செய்து பல பாடல்களைத் தந்தவர் அழ. வள்ளியப்பா. குழந்தை இலக்கியம் வளர்ப்பதையே வாழ்நாள் தொண்டாகக் கொண்டவர் அவர்.

**ம. ப. பெரியசாமித் தூரன் :**

...சுருக்கமாகச் சொன்னுல், குழந்தை இலக்கியம்தானே என்று அலட்சியமாக நினைத்தவர்களையும், அந்த இலக்கியத்திற்குத் தனி மதிப்புத் தரக் காரணமாயிருந்தவர் நம் குழந்தைக் கவிஞர் திரு. அழ. வள்ளியப்பா அவர்களே.

**டாக்டர் எஸ். ஆர். ரங்கநாதன் :**

குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா, குழந்தை இலக்கிய உலகுக்குச் செய்துவரும் தொண்டு சிறப்பானது. இத்தொண்டினை மேலும் அவர் சிறப்பாகச் செய்ய வேண்டும். குழந்தை எழுத்தாளர்களுக்குத் தொடர்ந்து வழி காட்ட வேண்டும்.